# ஸ்ரீ ராமாநுஜன் 300



சென்னை ஸத்க்ரந்த ப்ரகாசன ஸபா மூலமாக மாதந்தோறும்
வெளிவரும் பத்திரிகை.

ஆசிரியர்: ஸ்ரீகாஞ்சீ. P. B. அண்ணங்கராசாரியர்

| ஸம்புடம் 25 | ப்ரமாதீச வருஷ<br>1973 ஆகஸ்டுமீ வெளியிடப்பட்டது | ஸஞ்சிகை 12 |
|---|---|---|

# அன்பர்கள் குறிக்கொள்க

ஸ்ரீ ராமாநுஜனின் இவ்விதழ் இந்த ஸம்வத்ஸரத்தின் முடிவான இதழாகும். அதுமட்டுமன்று. இருபத்தைந்து ஸம்வத்ஸர பூர்த்தியான இதழுமாகும். ஸ்ரீ ராமாநுஜன் அவதரிக்கத் தொடங்கி 300 மாதங்கள் கடந்தன. அதற்கு ஞாபகச் சின்னமாக முந்நூறு உபந்யாஸங்கள் கொண்ட வொரு மலர் வெளியிடுவதாக முன்னிதழில் அறிவித்திருக்கிறோம். அது மிகப் பெரிய காரியமாதலால் அந்த மனோரதத்தை நிறைவேற்றிக்கொள்ளச் சிறிது தாமதமாகும். முந்நூறு மாதங்கள் கடந்ததுபோல் 25 ஆண்டுகள் கடந்திருப்பதனால் அதற்கு ஸ்மாரகமாக 25 உபந்யாஸங்கள் கொண்ட இவ்விதழை வெளியிடுகின்றோம்.

## முதல் உபந்யாஸம் — நம்மாழ்வார் பெருமையைப்பற்றி

நம்மாழ்வாருடைய வைபவத்தைப் பலமுகமாக உபந்யஸிக்கலாம். இங்கு உபந்யஸிக்கப்படும்வகை மிக விலக்ஷணமானது. ''ஸ்ரீவைஷ்ணவ ஸம்பிரதாயத்திற்போல சைவசமயத்திலும் சில தொண்டர்கள் பாடல்கள் பாடியுள்ளார்கள்; அவர்களுக்கும் அவர்கள் பாடிய பாடல்களுக்கும் என்ன ஏற்றமோ அந்த ஏற்றந்தான் ஆழ்வார்களுக்கும் அவர்களது பிரபந்தங்களுக்குமுள்ளது'' என்று சிலரோ பலரோ லகுவாகச் சொல்லிவிடுகிறார்கள். சில ஸ்ரீவைஷ்ணவர்களுங்கூட இங்ஙனே யெண்ணியிருப்பதுண்டு. இவ்வெண்ணம் மிகத் தவறானதென்பதை நன்கு நிரூபிக்கும் முகத்

தால் நம்மாழ்வார் பிரபாவத்தை ஈண்டு அநுபவிக்கிறேன். தேவாரம் பாடின தொண்டர்களேயோ அவர்களின் பாடல்களேயோ அன்றுதொட்டு இன்றுவரையில் ஒரு வைதிகரும் (அந்தணரும்) பரிக்ரஹிக்கவில்லை. அத்தொண்டர்களைச் சதுர்த்தர்களென்று ஒதுக்கியே வைத்திருக்கிறார்கள். அவர்களுடைய பாடல்களில் வேதார்த்தமிருப்பதாகச் சொல்லுவாருமில்லை. வேதமோதினவர்களும் வேதப் பொருள் உணர்ந்தவர்களும் பரிக்ரஹித்தாலன்றோ அவற்றில் வேதார்த்தமிருப்பதாக நெஞ்சினால் நினைக்கவாவது முடியும்? வேதபாஹ்யர்களே கைப்பற்றின அவற்றில் வேதார்த்த ஸத்பாவ வார்த்தைக்கும் ப்ரஸக்தியில்லையன்றோ. இனி நம்மாழ்வாரை யெடுத்துக்கொள்வோம். இவரையும் இவரது திவ்யப்பிரபந்தங்களையும் இக்காலத்து வைதிகர்கள் பரிக்ரஹித்துள்ளார்களென்பது கிடக்கட்டும். பண்டைக் காலத்தில் எப்படிப்பட்ட வைதிகோத்தமர்கள் பரிக்ரஹித்தருளியிருக்கிறார்களென்பதைச் சிறிது பரிசீலனை செய்வோம். வேதாந்த தேசிகன் குருபரம்பராஸாரத்தில் ஸ்ரீமந்நாதமுனிகளைப்பற்றி யருளிச்செய்யுமிடத்து "இவர்க்கு யோகதசையிலே ஸாக்ஷாத்க்ருதராய் நம்மாழ்வார் ஆசார்யரானார்" என்றனர். *நாதோபஜ்ஞம் ப்ரவ்ருத்தமென்னப்படுகிற நம் தர்சனத்திற்கு ப்ரதமப்ரவர்த்தகரான ஸ்ரீமந்நாதமுனிகள் பரம வைதிகஸார்வபௌமர். அவர் நம்மாழ்வாரை ஸாக்ஷாத்கரிக்கவும் அவர் பக்கலில் திவ்யப்ரபந்தங்கள் பெறவும் எப்பாடுகள் பட்டாரென்பதுபற்றிச் சொல்லவேணுமோ? அவர்க்குப் பிறகு ஆளவந்தார், எம்பெருமானார், கூரத்தாழ்வான், ஆகிய மூவரைமட்டும் இங்குக்கொள்ளுகிறேன். இவ்வாசிரியர்களின் திவ்யஸூக்திகளைமட்டுங்கொண்டு இங்கு நம்மாழ்வார் ப்ரபாவத்தை விளக்குகிறேன்.

## இரண்டாவது உபந்யாஸம்—ஆழ்வாரும் ஆளவந்தாரும்

ஆளவந்தார் தமது ஸ்தோத்ரரத்னத்தில் *மாதாபிதா யுவதய:* என்னும் சுலோகத்தினால் ஆழ்வாரைத் துதித்திருக்கும்விதம் மிகவற்புதம். ஆழ்வாருடைய திருநாமத்தை நேராகக் குறிப்பிடாமலே *ஆத்யஸ்ய ந: குலபதே:* என்ற சொற்றொடரையிட்டு ஆழ்வாரைத் தம்முடைய குலக்கொழுந்தாகத் தெரிவித்தார். நம்முடைய குருபரம்பரை லக்ஷ்மீநாதஸமாரம்பமாகையாலே எம்பெருமானும் நம் குலகூடஸ்தனுகையாலே *மாதாபிதேத்யாதி பூர்வார்த்தம் முழுவதும் "சேலேய் கண்ணியரும் பெருஞ்செல்வமும் நன்மக்களும், மேலாத் தாய்தந்தையும் அவரே யினியாவாரே" என்கிற திருவாய்மொழியின்படி அப்பெருமானிடத்திலும் பொருந்தக் குறையில்லாமையாலே இந்த ச்லோகம் எம்பெருமான் விஷயமேதானென்று சிலர் வாதிக்கவுங்கூடும். அவர்கள் வாயடங்க ஆளவந்தார் இங்குத் தாமுத்தேசித்த திருவடியிணைக்கு வகுளாபிராமமென்று விசேஷணமிட்டருளினார். எம்பெருமானுடைய திருவடி அவிரலதுலஸீதாமாபிராமமே யல்லது வகுளாபிராமமன்றே. "நாட்கமழ் மகிழ்மாலை மார்பினன் மாறன் சடகோபன்" என்று ஆழ்வார் தாமே அருளிச் செய்துள்ளபடி மகிழ்மாலை ஆழ்வார்க்கேயன்றோ நிருபகம்? *வகுளாபரணம் வந்தே ஜகதாபரணம் முநிம்* என்றார்களே. "ஆத்யஸ்ய ந: குலபதே:" என்பதனால் *ஆசார்யாணமஸாவஸாவித்யாபகவத்த:* ஆபகவத்த: ப்ரதிதாம் அநகாம் ஆசார்யஸந்த

திம் வந்தே* என்கிறபடியே எம்பெருமானையே விவக்ஷித்தாலும் குறையில்லை. எம்பெருமானுடைய வகுளாபிராமமான அங்க்ரியுகளம் சடகோபனென்றும் சடாரியென்றும் பகவத் பாதுகையென்றும் வ்யபதேசிக்கப்படுகிற ஆழ்வாரேயன்றோ? இதில் வகுளாபிராமம் என்கிற விசேஷணமே உயிர்நிலையானது.

## மூன்றுவது உபந்யாஸம்—நம்மாழ்வாரும் ஸ்ரீபாஷ்யகாரரும்

இனி ஸ்ரீ பாஷ்யகாரருடைய ஸ்ரீஸூக்தியைக்கொண்டு ஆழ்வார் பெருமையை நிரூபிக்கிறேன். இந்த நிரூபணம் அடியேனுடைய த்ரமிடோபநிஷத் ப்ரபாவஸர்வஸ்வத்திலே மிக விரிவாகவுள்ளது. இங்கு அதிஸங்க்ஷிப்தமாக விஜ்ஞாபிக்கிறேன். "அகில புவநஜந்மஸ்தேமபங்காதிலீலே" இத்யாதி ச்லோகம் எம்பெருமான் விஷயமாயிருப்பது போலவே ஆழ்வார் விஷயமாகவுமுள்ளது. ஸப்தம்யந்தங்களான ஐந்து விசேஷணங்களும் ஆழ்வாரிடத்திலும் மிகப் பொருந்துகின்றன. (**அகிலபுவநஜந்மஸ்தேமபங்காதிலீலே**) இரண்டுவிதமாக ஆழ்வார்க்குப் பொருந்துமிது. அகிலபுவநஜன்மஸ்தேமபங்கங்களுக்கு ஆதியானவன் எம்பெருமான்; தேந ஸஹ லீலா யஸ்ய தஸ்மிந். *மின்னிடைமடவார்கள் நின்னருள் சூடுவாரென்கிற திருவாய்மொழியில் *என்னுடைய பந்துங் கழலும் தந்து போகுநம்பீ* இத்யாதியாலே எம்பெருமானோடு லீலாரஸங் கொண்டாடினவர் என்றபடி. அன்றிக்கே, (புவநஜந்மஸ்தேமபங்காதிலீல: அகிலம் யஸ்ய தஸ்மிந்.) புவநஸ்தேமபங்காதிலீலனான எம்பெருமானையே அகிலமுமாகக் கொண்டவர்; *உண்ணுஞ்சோறு பருகுநீர் தின்னும் வெற்றிலையும் **எல்லாங்கண்ணன்*** என்றிருந்தவராழ்வார். (**விநத விவித பூதவ்ராதரக்ஷைகதீக்ஷே**) விநத விவித பூதவ்ராதங்களை ரக்ஷிப்பது எம்பெருமானுடைய திருவடிகள். பாதுகாஸஹஸ்ரே ப்ரபாவபத்ததியில் (42) *ஜகதாம் அபிரக்ஷணே த்ரயாணும் அதிகாரம் மணிபாதுகே வஹந்த்யோ:, யுவயோ:* என்று ஸாதித்தபடி ரக்ஷகத்வம் பாதுகைக்கே; பாதுகையான ஆழ்வாருக்கே யென்றபடி. (**ச்ருதி சிரஸி விதீப்தே**) ச்ருதி சிரஸ்ஸாவது உபநிஷத்து; அதில் விசேஷேண தீப்தர் ஆழ்வார். *தத் விப்ராஸோ விபந்யவோ ஜாக்ருவாம்ஸஸ் ஸமிந்ததே* இத்யாதிகளான உபநிஷத் வாக்யங்கள் ஆழ்வாரையன்றோ ஓதுகின்றன! (எங்ஙனேயென்னில்;) விப்ராஸ: என்றது விப்ரா: என்றபடி. ப்ராஹ்மணாஸ:, ஸோம்யாஸ: என்பவை போன்ற சாந்தஸப்ரயோகம். "ந சூத்ரா பகவத்பக்தா விப்ரா பாகவதா: ஸ்ம்ருதா:" என்கிறபடியே விப்ரத்வஸித்தி பெற்றவர் ஆழ்வார். [**விபந்யவ:**] பண-ஸ்துதௌ என்கிற தாதுவிலிருந்து நிஷ்பந்நமான சொல்லாகையினாலே விசேஷித்து ஸ்துதி செய்தவரென்றபடி. "தேவிற்சிறந்த திருமாற்குத்தக்க தெய்வக் கவிஞன், பாவிற் சிறந்த திருவாய்மொழி பகர்பண்டிதனே" என்று கம்பர் கூறியபடி எம்பெருமானுக்குத் தகுந்த ஸ்தோதா நம்மாழ்வார். [**ஜாக்ர்வாம்ஸ:**] *தொல்லை மாலைக் கண்ணாரக்கண்டு கழிவதோர் காதலுற்றார்க்குமுண்டோ கண்கள் துஞ்சுதலே* (திருவிருத்தம்–97) என்று சொல்லி இந்நிலத்திலும் உறக்கமற்றிருந்தவர் நம்மாழ்வாரே. மேலெடுத்த உபநிஷத்வாக்யத்தில் 'இந்ததே' என்னுமல் 'ஸமிந்ததே' என்கையாலே (ஸம்) என்கிற உபஸர்க்கத்தை நோக்கியே ஸ்வாமி பாஷ்யகாரர் தீப்தே என்னுமல் (விதீப்தே) என்றது. "ச்ருதிசிரஸி விதீப்தே" என்பதற்கு மற்றொருவிதமான யோஜனையும் கேண்மின். ச்ருதியாவது த்ரமிடச்ருதியான திருவாய்மொழி; அதில்

தீப்தர் ஆழ்வார்; பதிகந்தோறும் நிகமனப் பாசுரத்திலே *குருகூர்ச் சடகோபனென்றும் *காரிமாறன் சடகோபனென்றும் விளங்குபவரென்கை. ச்ருதிசிரஸ்ஸாவது கண்ணிநுண்சிறுத்தாம்பு. திருவாய்மொழியின் முடிவிலே நியமேந அநுஸந்திக்கப்படுதலால் அது ச்ருதிசிரஸ்ஸாயிற்று. அதில் விதீப்தர்—விசேஷேண தீப்தர்: அந்த ப்ரபந்தம் முழுவதும் ஆழ்வார் விஷயமேயாதலால் அதில் விதீப்தரென்பது மிகப் பொருத்தம். (ப்ரஹ்மணி) ''ஸர்வத்ர ப்ருஹத்த்வ குணயோகேந ஹி ப்ரஹ்ம சப்த:'' என்ற ஸ்ரீ பாஷ்ய ஸூக்தியின்படி ப்ரஹ்மமென்றது மிகப்பெரிய வஸ்துவென்றபடி. ஆழ்வார் பெரிய திருவந்தாதியில் *புவியுமிருவிசும்பும் நின்னகத்த, நீயென் செவியின் வழிபுகுந்தென்னுள்ளாய், அவிவின்றி யான் பெரியன், நீ பெரியை யென்பதனையாரறிவார்* என்கிற பாசுரத்தினுல் மிகப்பெரியோனுன எம்பெருமானையும் தம்முள் ஒரு மூலையிலடக்கியிருக்கையாகிற பெருமை தமக்கேயுள்ளதென்று ஸோபபத்திகமாக நிரூபித்தருளியிருப்பதனுல் ஆழ்வாரை ப்ரஹ்மமென்னத்தட்டில்லை. ஆழ்வார் தம்முடைய ப்ரஹ்மத்வத்தைத் தாமே உபபாதித்தருளியிருப்பது விசேஷம். அப்பாசுரத்தின்படி எம்பெருமான் ப்ரஹ்மமாகவும் ஆழ்வார் பரப்ரஹ்மமாகவும் தேறுதலால் இங்கு 'பரஸ்மிந் ப்ரஹ்மணி' என்றது ஆழ்வார்க்கு மிகமிகப் பொருத்தம். [ஸ்ரீநிவாஸே] *ஸ து நாகவர: ஸ்ரீமாந்* அந்தரிக்ஷகத: ஸ்ரீமாந்* *லக்ஷ்மணோ லக்ஷ்மிஸம்பந்ந:* இத்யாதி ஸ்தலங்களில் பகவத்கைங்கர்ய ருசியும் பகவத் பக்தியுமே ஸ்ரீயாகச் சொல்லப்படுகையாலே அந்த ஸ்ரீ ஆழ்வார் பக்கலிலே கஜேந்த்ர விபீஷண லக்ஷ்மணாதிகளிற்காட்டிலும் புஷ்கலமாகையாலே ஸ்ரீநிவாஸத்வமும் அழ்வார்க்கு அநபாயம். ஆக இவ்வண்ணமாக ஸ்ரீ பாஷ்யகாரர் ஆழ்வார் பக்கலிலே தம்முடைய ப்ராவண்யத்தைக் காட்டியருளினுராயிற்று.

## 4-வது 'விநதவிவித பூதவ்ராத ரக்ஷைகதீக்ஷே' விசேஷார்த்தம்

ஸ்ரீபாஷ்ய மங்களச்லோகமான *அகில புவநஜந்மேத்யாதிச்லோகத்தில் இரண்டாவது பாதம் ''விநதவிவித பூதவ்ராத ரக்ஷைகதீக்ஷே'' என்பது. முதல்பாதத்திலேயே ரக்ஷணார்த்தகமான ஸ்தேம சப்தத்தினுல் எம்பெருமான் ஸர்வ ரக்ஷகனென்னுமிடம் சொல்லப்பட்டிருக்க, மீண்டும் அந்த ரக்ஷகத்வத்தையே தெரிவிக்குமதான இரண்டாவது பாதமிட்டிருப்பது விசேஷ ரக்ஷணமான மோக்ஷப்ரதாநத்தைப்பற்ற என்னுமிடம் ஸம்ப்ரதாய தத்வஜ்ஞர்களுக்கு விவரண நிரபேக்ஷம். விநத—வணங்கின, விவித—பலவகைப்பட்ட, பூதவ்ராத—ப்ராணிஸமூஹங்களை, ரக்ஷா—ரக்ஷிப்பதையே, ஏகதீக்ஷே—முக்கியமான விரதமாகக்கொண்டவனெம்பெருமான் என்பது சப்தார்த்தம். இங்கு பூதவ்ராத என்ற விடத்தில் ச்ருதப்ராகாசிகையில் பட்டரும், தத்வடீகையில் நிகமாந்தமஹாகுருவும் நிரூபித்தருளியுள்ள விசேஷார்த்தம் விசேஷித்து நோக்கத்தக்கது. பூதவ்ராத மென்பதற்கு ப்ராணிஸமூஹமென்று பொருளானுலும் இதில் சிறிது உட்புகுந்து ஆராய்ந்தருளுகிறுர் ச்ருதப்ரகாசிகா பட்டர். ப்ராஹ்மண ஸமாஜ:, ராஜபரிஷத் என்னுமிரண்டு வ்யவஹாரங்களை யெடுத்துக்காட்டி, இவற்றிலுள்ள வாசியையுங்காட்டி விசேஷார்த்த நிஷ்கர்ஷம் செய்தருளுகிறுர். ப்ராஹ்மண ஸமாஜமென்று சொன்னுல் அந்த ஸமாஜத்தில் பிராமணர்கள் மட்டுமே கூடியிருப்பதாகவும் இதர ஜாதியர்களின் சேர்க்கை இங்கு இல்லையாகவும் உலகத்தில் ஸ்பஷ்டமாகக் காண்கிறது.

ராஜபரிஷத்தென்று சொன்னால் இப்படி காணப்படுவதில்லை. கேவலம் ராஜாக்கள் மட்டுமே கூடுகிற கூட்டத்தையா ராஜபரிஷத்தென்கிறோம்? இல்லை; மந்த்ரிகளும் ப்ரஜைகளுமாகிய இதரர்களும் அரசனோடு கூடியிருக்குமிருப்பையே 'ராஜபரிஷத்' என்கிறோம். 'ப்ராஹ்மண ஸமாஜ:' என்ற விடத்திலும் 'ராஜபரிஷத்' என்ற விடத்திலும் அவிசேஷண ஷஷ்டீதத்புருஷ ஸமாஸமே கொள்ளுகிறோம். ஸமாஸத்தில் வாசியில்லையாயினும் பொருளில் நெடுவாசியுள்ளது.

ச்ருதப்ரகாசிகபட்டர் இவற்றையெடுத்துக்காட்டி விரிவாக அருளிச்செய்துள்ளார். விநதப்ராணிகளுக்குமட்டும் மோக்ஷமளிக்கையன்றிக்கே அந்தப்ராணிகளோடு ஸம்பந்தம் பெற்றவர்களுக்குங்கூட அந்த விநதப்ராணிகளின் விநதியே காரணமாக மோக்ஷமளிக்கிறு னெம்பெருமானென்றருளியுள்ளார். இங்கு "தத ஏவ காரணாத்" என்கிற ஸ்ரீஸூக்தி ஜீவநாடியாகவுள்ளது.

இவ்வர்த்தத்தை வேதாந்த வாசிரியர் தத்வடீகையில் வெகு அழகாக உபபாதித்துப் பொருந்தவைக்கிறார். அவ்விடத்து ஸ்ரீஸூக்திகள் நன்கு காணத்தக்கன. மூலத்தில் ரக்ஷாபதத்தாலே விவக்ஷிதமான ரக்ஷணம் 'அஸாதாரணஸ்ய பரம ப்ரயோஜநஸ்ய மோக்ஷஸ்யைவ ப்ரதாநம்' என்று நிர்ணீதமாயிருக்கையாலே இந்த மோக்ஷப்ரதாநம் விநதபூதங்களுக்கு மட்டுமன்று, தத்ஸம்பந்தி ஸம்பந்திகளுக்கும் அப்ரதிஹநம் என்கிற அர்த்தமே தத்வடீகாஸூக்திகளாலும் விசதீக்ருதமாயிற்று. சரணாகதிகத்யத்தில் ஸ்ரீபகவந்நாராயணபிமதேத்யாதி சூர்ணையினால் புருஷகார ப்ரபத்தி செய்தருளின எம்பெருமானார்க்கு ப்ரதிவசநமிட்டருளின ஸ்ரீரங்கநாச்சியார் "அஸ்து தே" என்றவளவோடு நில்லாமல் "தயைவ ஸர்வம் ஸம்பத்ஸ்யதே" என்றுமருளிச் செய்த விடத்தில் அவ்விடத்து ச்ருதப்ரகாசிகையில் "ஸம்பந்தி ஸம்பந்தி நிஸ்தரணமபி, ஸர்வசப்தாபிப்ரேதம்" என்று அருளிச்செய்யப்பட்டிருப்பதும் இங்கு அநுஸந்தேயம்.

## 5. கப்யாஸ ச்ருதியின் பொருள் விளக்கம்

**கப்யாஸம்** என்று சாந்தோக்யோபநிஷத்திலுள்ள விலக்ஷணமான சொல்லுக்கு மூன்று வகையான வ்யுத்பத்திகளைக் கொண்டு மூன்று அர்த்தங்கள் அவதரித்தன. அவ்வர்த்த விசேஷங்களைக் காட்டுகின்ற ஸ்வாமி ஸ்ரீஸூக்தியாவது— "கம்பீராம்பஸ்ஸமுத்பூத—ஸம்ருஷ்டநாள—ரவிகரவிகஸித புண்டரீக தலாமலாயதேக்ஷண:" என்பது. ஆழ்ந்த தண்ணீரில் வாழ்வதும், நாளமென்கிற தண்டோடு கூடியிருப்பதும் இரவியின் கதிர்களால் மலரப்பெற்றதுமான புண்டரீகத்தின் இதழ்போல் நீண்ட திருக்கண்களையுடையவனென்கை. **கப்யாஸம்** என்கிற இச் சிறு சொல்லால் இவ்வளவு அர்த்தங்கள் எங்ஙனே தோற்றுவிக்கப் படுகின்றனவென்று ஸந்தேஹம் எழக்கூடும். அந்த ஸந்தேஹத்தைத் தீர்க்க **கப்யாஸம்** என்பதற்குச் செய்யக்கூடிய வ்யுத்பத்திகளை விவரிக்கவேண்டியதாகும். அது கடினமான ஸம்ஸ்க்ருத சாஸ்த்ரப்ரக்ரியையாக இருப்பதால் அதை நாம் ஸம்ஸ்க்ருதபாஷையிலெழுதிய சில நூல்களில் விவரித்துள்ளோம். அங்குக் கண்டுகொள்வது. எம்பெருமானார் ஆதரித்தருளின அர்த்தங்கள் மூன்றும்

***கப்யாஸம்*** என்கிற சப்தஸந்நிவேசத்தில் கிடைத்தவையேயென்பதை பகவத் ராமாநுஜ பக்தர்கள் திடமாகக் கொண்டிருப்பர்கள்.

கம்பீராம்பஸ்ஸமுத்பூதமாயும், ஸம்ம்ருஷ்டநாளமாயும், ரவிகரவிகஸித மாயுமிருக்கிற புண்டரீகத்தை எம்பெருமானுடைய திருக்கண்களுக்கு உவமை யாகச் சொல்லுவது பொருத்தமென்று எம்பெருமானுருடைய திருவுள்ளத்திலே தோன்றினது திவ்யப்பிரபந்தங்களில் அவர் ஆழ அவகாஹித்திருந்ததனுலேயே. ஆழ்வார்கள் எம்பெருமானுடைய திருக்கண்ணழகைப்பற்றிப் பேசுமிடங்களில் மேலே காட்டிய மூன்று விசேஷங்களையும் வெகு அற்புதமாகப் பேசியுள்ளார் கள். அதை அடைவே விவரிக்கிறேன்.

***[கம்பீராம்பஸ்ஸமுத்பூதபுண்டரீக]***—ஜலஜமென்றும் அம்புஜமென்றும் அம்போஜமென்றும் நீரஜமென்றும் பேர்பெற்ற புண்டரீகமானது நீரில் நின்று முண்டாகாமல் மற்றொன்றினின்று உண்டாக ப்ரஸக்தியில்லாமையாலே ''அம்பஸ் ஸமுத்பூத'' என்றதன் கருத்து, நீரை விட்டுப் பிரியாமலிருக்கையைச் சொல்லுவ தேயாம். ''தாமரையை அலர்த்தக்கடவ ஆதித்யன்தானே நீரைப் பிரிந்தால் அத்தை யுலர்த்துமாபோலே'' என்கிற ஸ்ரீவசனபூஷண ஸ்ரீஸூக்தியும், ''கமலம் ஜலாதபேதம் சோஷயதி ரவிர் ந தோஷயதி'' என்கிற ப்ரமாணமும் இங்கே அநு ஸந்தேயம். நீரைவிட்டுப் பிரியாமலிருக்கிற தாமரைபோன்ற திருக்கண்களை யுடையவன் என்றதாயிற்று. ''நீரார் கமலம் போல் செங்கண்மாலென்றொருவன்'' என்கிற சிறிய திருமடற் பாசுரத்திலும் ''அழறலர் தாமரைக்கண்ணன்'' (58) என்ற திருவிருத்தப் பாசுரத்திலும் ஆழ்வார்கள் திருவுள்ளம் பற்றிய அர்த்த மென்றே இஃது எம்பெருமானாரால் ஆதரிக்கப்பட்டது. ''நீரார் கமலம்போல்'' என்றவிடத்தில் (நீரார்) என்ற விசேஷணம் எதுகையின்பத்திற்காக மாத்திரம் இடப்பட்டதன்று. ''அழறலர் தாமரைக் கண்ணன்'' என்றவிடத்து நம்பிள்ளை யீட்டில் *கப்யாஸச்ருதி ஸ்பஷ்டமாகவே உதாஹரிக்கப்பட்டுள்ளது. அவ்விடத்து ஸ்ரீஸூக்தி வருமாறு—''***[அழறலர் தாமரைக்கண்ணன்]*** அழற்றிலே நின்றலர்ந்த தாமரைப்பூப்போலேயிருந்துள்ள திருக்கண்களை யுடையவன். *யதா கப்யாஸம் புண்டரீகமேவமக்ஷிணீ* என்னக்கடவதிறே.'' இங்கு வாதிகேஸரியின் ஸ்வாபதேச வுரை வருமாறு—''அழறு என்று அளறு; நீரிலும் சேற்றிலும் நின்று அலர்ந்து செவ்விமாறுத தாமரை போன்ற கண்ணையுடையவனென்றபடி.''

ஆக, 'நீரார் கமலம்போல் செங்கண் மாலென்றொருவன்' என்ற சிறிய திரு மடற் பாசுரத்தையும், 'அழறலர் தாமரைக் கண்ணன்' என்ற திருவிருத்தப் பாசு ரத்தையும் ''தண்பெருநீர்த்தடந் தாமரை மலர்ந்தாலொக்குங் கண் பெருங் கண் ணன்'' என்கிற திருவாய் மொழிப் பாசுரத்தையும் திருவுள்ளம்பற்றியே '***கம்பீராம் பஸ் ஸமுத்பூத***' என்ற விசேஷணத்தை ஸ்வாமி யிட்டருளினுரென்பது பொருத்த மாக முடிந்தது.

***[ஸம்ம்ருஷ்ட நாள புண்டரீக]*** நீரை விட்டுப் பிரிந்த தாமரைக்கு சோபை யில்லாதது போலவே நாளத்தை விட்டு நீங்கின தாமரைக்கும் சோபையில்லாமை யாலே தாமரைக்கு நாளத்திலிருப்பும் அவச்ய வக்தவ்யமாயிற்று. இதுவும் ஆழ்வா

ரருளிச் செயலிலுள்ளது. திருவிருத்தத்தில் ''வன்காற்றறைய'' என்கிற பாட்டிலே ''எம்பிரான் தடங்கண்கள்—மென்கால் கமலத் தடம் போல் பொலிந்தன'' என்றருளிச் செய்யப்பட்டிருக்கிறது. கமலத்திற்கு இடப்பட்டிருக்கிற **'மென்கால்'** என்னும் விசேஷணத்திற்கு 'மெல்லிய நாளத்திலே யிருக்கின்ற' என்பது பொருள். (நாளமாவது தண்டு). கமலத்திற்கு அது கால் போன்றிருத்தலால் கால்என்னுஞ் சொல்லால் குறிக்கப்பட்டது. நாளமென்கிற பொருளையே பூருவர்களும் உரை செய்துள்ளார்கள். ஆக இந்த திவ்ய ஸூக்திக்குச் சேர (ஸம்ருஷ்டநாள) என்றருளிச் செய்யப்பட்டது.

[**ரவிகரவிகஸித புண்டரீக.**] தாமரை நீரிலிருந்தாலும் நாளத்திலிருந்தாலும் ஸூர்ய கிரணங்களால் அலர்த்தப்பட்ட நிலையில்தான் எம்பெருமானுடைய திருக்கண்களுக்கு ஒப்பாகு மாதலால் இந்த விசேஷணமும் ஆவச்யகமாயிற்று. இதுவும் ஆழ்வாரருளிச் செயலிலுள்ளது. திருவாய்மொழியில் (5-4-9) ''செஞ்சுடர்த் தாமரைக் கண் செல்வன்'' என்றுள்ள பாசுரம் இங்கே கொள்ளக்கடவது. இவ்விடத்து ஈட்டிலும் கப்யாஸ ச்ருதியை உதாஹரித்தருளி யுள்ளார். இதில் (செஞ்சுடர்த் தாமரை) என்பதற்கு செவ்விய சுடரையுடைய தாமரை என்று பொருளாகிறது. அச்செவ்விய சுடர் அதற்கு எங்ஙனம் வந்ததென்னில், அதற்கு முன்னடியில் 'அஞ்சுடர வெய்யோன்' என்று ஸூர்யனை ப்ரஸ்தாவித்திருக்கையாலே தததீநமென்று காட்டப்படுகிறது. ஆக ஸூர்ய ப்ரகாசமடியாக வந்த செவ்விய சுடரை யுடைய தாமரைப் பூப்போன்ற திருக்கண்களை யுடையவன் என்றதாயிற்று. இந்த ஸ்ரீஸூக்தியைத் திருவுள்ளம்பற்றியே, ''ரவிகரவிகஸித புண்டரீக'' என்றருளிச் செய்தது. ''செந்தண் கமலக்கண்......சிவந்த வாயோர் கருநாயிறு அந்தமில்லாக் கதிர் பரப்பி அலர்ந்த தொக்குமம்மானே'' என்கிற திருவாய்மொழிப் பாசுரமும் இங்கு யோஜிக்க வுரியது. [''செங்கமலம் அந்தரஞ்சேர் வெங்கதிரோற் கல்லால் அலராவால்'' என்கிற பெருமாள் திருமொழிப் பாசுரமும் இங்கு நினைக்கத்தக்கது. ஆனால் அப்பாசுரத்தில் திருக்கண் ப்ரஸ்தாவ மில்லாமையுணர்க.]

# 6. புண்டரீகதளாமலாயதேக்ஷண—தத்வம்

''கப்யாஸம் புண்டரீகமேவ மக்ஷிணீ'' என்கிற உபநிஷத்வாக்யத்திற்கு விவரணமாக ஸ்வாமியருளிச்செய்த *கம்பீராம்பஸ் ஸமுத்பூதேத்யாதி திவ்யஸூக்தியில் ''புண்டரீகதளாமலாயதேக்ஷண:'' என்றிருக்கின்றதன்றோ? மூல ச்ருதியில் ''புண்டரீகமேவ மக்ஷிணீ'' என்றிருக்கிறதேயொழிய வேறில்லை; உள்ள மூலத்திற்குச்சேர ''புண்டரீகேக்ஷண:'' என்றிவ்வளவே அருளிச்செய்திருக்க வேண்டும்; அதிகப்படியாக மூன்று பதங்களைச் சேர்த்திருக்கிறார். (1) தள. (2) அமல. (3) ஆயத. என்னுமிந்த மூன்று சொற்கள் எந்த ஆதாரத்தைக்கொண்டு ஸ்வாமியாலருளிச் செய்யப்பட்டனவென்று விசாரம் செய்யுமளவில், ஆழ்வார்களின் திவ்யஸூக்திகளை ஆதாரமாகக் கொண்டுதானென்று நிர்ணயிக்க ப்ராப்தம்.

ஆழ்வார்கள் 'தாமரைக்கண்ணன்' என்று சிலவிடங்களிலும் ''தாமரைத் தடங்கண்ணன்'' ''கமலத்தடங்கண்ணன்'' ''கமலத்தடம் பெருங்கண்ணன்'' என்று பல விடங்களிலுமருளிச் செய்து போருகிறார்கள். வடமொழியிலுள்ள லகரமும்

ளகரமும் தென்மொழியில் டகரமாக மாறுபடுவதுமுண்டு; ''லடயோரபேத:'' என்கிற நியாயம் ஸம்ஸ்க்ருத சாஸ்த்ரஜ்ஞர்களுமிசைந்ததே. தமிழர்கள் எழுத்துப் போலி யென்பர்கள். ஏவஞ்ச, ''பத்ரம் பலாசம் சதநம் தளம் பர்ணம் சத: புமாந்'' என்ற அமரகோசத்தில் படிக்கப்பட்ட தலமென்கிற வடசொல்லே தமிழில் தட மென்றுயிற்று என்று திருவுள்ளம் பற்றிய எம்பெருமானுர் 'கமலத்தடங்கண்ணன்' 'தாமரைத் தடங்கண்ணன்' என்னுமிடங்களிலே தளமென்னும் பொருளிலே தட மெனவந்ததென்று கொண்டு ''புண்டரீகதள'' என்றருளிச்செய்தார். தடமென் னுஞ் சொல்லுக்கு விசால மென்கிற பொருளும் தடாகமென்கிற பொருளும் தள மென்கிற பொருளும் ஆங்காங்கு வியாக்கியான கர்த்தாக்களால் ஆதரிக்கப்படு கின்றன. ''நீலத்தடவரைமேல் புண்டரீக நெடுந்தடங்கள் போல......எம்பிரான் கண்ணின் கோலங்களே'' என்ற திருவிருத்தப் பாசுரத்தில் தடமென்பதற்கு தடாகமென்பது பொருள்.

''கமலக்கண்ணன்.........அமலங்களாகவிழிக்கும்'' என்கிற நம்மாழ்வார் பாசுரத்தை யுட்கொண்டே ''புண்டரீகதளாமல......ஈக்ஷண:'' என்றுர் ஸ்வாமி. கீழே காட்டிய பாசுரங்களையும், ''கரியவாகிப் புடைபரந்து மிளிர்ந்து செவ்வரி யோடி நீண்ட வப்பெரியவாய கண்கள்'' என்கிற அத்விதீயமான திருப்பாணாழ் வார் பாசுரத்தையுமநுஸந்தித்துக் கொண்டே ''புண்டரீக...ஆயதேக்ஷண:''என்றுர்.

## 7. குருகேசரும் கூரேசரும்

ஆழ்வார் திறத்திலே கூரத்தாழ்வானுடைய ஈடுபாடு அபரிமிதம். ஆழ்வானுடைய பஞ்சஸ்தவம் முழுவதும் ஆழ்வாரருளிச் செயல்மயம். ஆயினும் அவருடைய இரண்டு சுலோகங்கள் போதும். ''த்ரைவித்யவ்ருத்தஜநமூர்த்தவிபூஷ ணம் யத் ஸம்பச்ச ஸாத்விகஜநஸ்ய யதேவ நித்யம் யத்வா சரண்யமசரண்ய ஜநஸ்ய புண்யம் தத் ஸம்ச்ரயேம வகுளாபரணங்க்ரியுக்மம்''. ஸ்ரீவைகுண்டஸ்தவத் தின் இரண்டாவது ச்லோகமிது. இதன் பொருள் வருமாறு.

யாதொரு நம்மாழ்வார் திருவடியிணையானது, பரம வைதிகர்களுடைய சிரஸ்ஸுக்கு அலங்காரமா யிருக்கின்றதோ, யாதொரு திருவடியிணையே ஸர்வகால மும் ஸாத்விகர்களுக்கு ஸகலைச்வர்யமுமாக இருக்கின்றதோ, யாதொரு திருவடி யிணையே புகலொன்றில்லாதவர்களுக்குத் தஞ்சமா யிருக்கின்றதோ, அப்படிப்பட்ட பரமபாவநமான நம்மாழ்வாருடைய திருவடியிணையை ஆச்ரயிக்கக் கடவோம்.

[தத் வகுளாபரணங்க்ரியுக்மம் ஸம்ச்ரயேம] *மகிழ்மாலை மார்பினன்* என்று தாமே பேசிக்கொள்ளலாம்படி வகுளமாலையை நிரூபகமாகவுடையரான நம்மாழ்வா ருடைய அப்படிப்பட்ட திருவடித் தாமரை யிணையை ஆச்ரயிக்கச்கடவோம். எப் படிப்பட்டதென்னில், சில விசேஷணங்களையிட்டு அத்திருவடிகளின் அதிசயத்தை விளக்குகிறுர். [யத் த்ரைவித்ய வ்ருத்த ஜநமூர்த்த விபூஷணம்] த்ரைவித்ய வ்ருத்தர் களாகிறுர் ஸ்ரீ மதுரகவிகள் போல்வார். அவர்களுடைய சிரஸ்ஸுக்கு பூஷணமாக இருக்குமாய்த்து ஆழ்வார் திருவடிகள்; *மேவினேனவன் பொன்னடி மெய்ம் மையே* என்றும் *குருகூர் நம்பி! முயல்கின்றேனுன்றன் மொய்கழற் கன்பையே*

என்றும் ஆழ்வார் திருவடிகளில் ப்ராவண்யமுடையார் அத்திருவடிகளையே யிறே தங்கள் தலைக்கு அணியாகக் கொள்வது; ☼கோலமா மென் சென்னிக்கு உன் கமல மன்ன குரைகழலே☼ என்றும் ☼அரசமர்ந்தா னடிசூடு மரசையல்லால் அரசாக வெண்ணேன் மற்றரசுதானே☼ என்றும் எம்பெருமானுடைய பாதாரவிந்தங்களை சிரோபூஷணமாகக் கொள்ள நினைப்பாரிற் காட்டிலும் அந்த பகவத் பாதாரவிந்த ஸ்வரூபியான ஆழ்வாருடைய திருவடிகளை சிரோபூஷணமாகக் கொள்ளுமவர் களிறே சீரியராவர். **த்ரைவித்ய வ்ருத்த** சப்தம் முக்கியமாக நம்மிராமாநுசனையே கருத்தில் கொண்டதாகும். ருக்யஜுஸ்ஸாமங்களாகிற வேதவித்யாத்ரயத்திலும் வல்லவ ரென்றபடி. *சொல்லார் தமிழொருமூன்றும் சுருதிகள் நான்கும் எல்லை யில்லா வறநெறி யாவும் தெரிந்தவிராமாநுசனைப் போன்ற மஹநீயர்களைக்கொள்க.

[**ஸாத்விகஜநஸ்ய நித்யம் யதேவ ஸம்பத்**] *தனத்தாலு மேதுங் குறைவிலேன் எந்தை சடகோபன் பாதங்கள் யாமுடைய பற்று* என்றிறே ஸாத்விகர்கள் அத்ய வஸித்திருப்பது. லௌகிகர்கள் ஸம்பத்தாக நினைத்திருக்கும் வஸ்துவானது வஸ்து ஸ்திதியில் விபத்தாயிருக்குமாயிற்று. உபய விபூதியும் ஆழ்வார் திருவடிகளில் ப்ராவண்யமுடையார் இட்டவழக்காயிருக்குமென்கை. *பொய்யில் பாடலாயிரத் துள் இவையும் பத்தும் வல்லார்கள், வையம் மன்னி வீற்றிருந்து விண்ணுமாள்வர் மண்ணூடே* இத்யாதி. ***மாதா பிதா யுவதயஸ் தநயா விபூதிஸ் ஸர்வம் யதேவ நியமேந மதந்வயாநாம்*** என்றருளிச் செய்த ஆளவந்தார் போல்வாரை யாயிற்று இங்கு **ஸாத் விகஜந** மென்கிறது. [**நித்யம்**] இந்த விபூதியில் உள்ள போதோடு அந்த விபூதியில் செல்லும் போதோடு வாசியற ஸர்வ காலத்திலு மென்றபடி. ***அத்ர பரத்ர சாபி நித்யம் யதீயசரணௌ சரணம் மதீயம்*** என்னுமாபோலே.

[**யத்வா சரண்யம் அசரண்யஜநஸ்ய**] அநாதர்களுக்குப் புகலிடமாயிருக்கும் ஆழ் வார் திருவடிகள். எம்பெருமான் தன்னாலும் திருத்தவொண்ணாதென்று கைவிடப் பட்டவர்களாயிற்று அசரண்யர்கள்; அப்படிப்பட்டவர்களையும் வலியப் பிடித் திழுத்துத் திருத்திப் பணிகொண்டவர் ஆழ்வாரே யிறே.

[**புண்யம்**] **புநாதீதி புண்யம்.** பரம பாவன மென்றபடி. *பொய்நின்ற ஞான மும் பொல்லா வொழுக்கு மழுக்குடம்புமாய் நின்ற நிலையைப் போக்கி ஸகலாத் மாக்களையும் பரிசுத்தமாக்கவல்ல தென்கை. **புண்யம் ஸுந்தர**மென்று பர்யாயமு மாகையாலே அழகிய திருவடிகளென்பாருமுளர். பாவநார்த்தகத்வமே பாங்கு. ஆக இப்படிப்பட்ட ஆழ்வார் திருவடிகளை வணங்கினபடி சொல்லிற்றாயிற்று.

# 8. குருகைநாதனும் கூரநாதனும்

*பக்திப்ரபாவபவதத்புத பாவபந்த ஸந்துக்ஷித ப்ரணயஸாரரஸௌகபூர்ண:, வேதார்த்த ரத்நநிதிரச்யுததிவ்யதாம ஜீயாத் பராங்குசபயோதிரஸீமபூமா* என்பது அந்யாத்ருசமான விந்யாஸம். இந்த ச்லோகம் ஸ்ரீவைகுண்டஸ்தவத்தில் மூன்றாவது ச்லோகமாகும்.

இந்த ச்லோகத்தாலே ஆழ்வார்க்கு மங்களாசாஸநம் பண்ணுகிறார் ஆழ்வான்· ஆழ்வாரை ஒரு கடலாக ரூபணம் பண்ணிப் பேசுகிறாரிதில். பயோநிதியாக ரூபணம் பண்ணுகைக்குப் பொருத்தமான ஔசித்யங்களை நான்கு விசேஷணங்களினால் நிரூபிக்கிறார். பயோநிதிக்கு இருக்கக்கடவ தன்மைகளெல்லாம் ஆழ்வார்பக்கலில் குறையற்றிருக்கிறபடியை ஒவ்வொரு விசேஷணமும் மூதலிக்கின்றது. [**பக்திப்ரபாவபவதத்புத பாவபந்த ஸந்துக்ஷித ப்ரணயஸார ரஸௌகபூர்ண:**] கடலானது ரஸௌகசப்தவாச்யமான ஜலப்ரவாஹத்தாலே பரிபூர்ணமாயிருக்கும்; ஆழ்வாரோ வென்னில், ச்ருங்காரவீர கருணாத்புதஹாஸ்ய பயாநக ரௌத்ர பீபத்ஸ பக்திரஸங்களாலே பரிபூர்ணராயிராநின்றார். இப்படிப்பட்ட ரஸவிசேஷங்கள் ஆழ்வார் பக்கலிலே விளைந்தமைக்கு நிதாநமேதென்னில், விலக்ஷணமான பக்தி விசேஷத்தாலே ஆச்சரியமான பாவபந்தங்களுண்டாகி அந்த பாவபந்தங்கள் தலைதலைத்து நாநாரஸ பரிபாகங்களாயின வென்கிறார்.

[**பக்திப்ரபாவ**] ஆழ்வாருடைய பக்திக்கு ஒப்புச்சொல்லலாவதில்லை; *காதல் கடல் புரைய விளைவித்த காரமர் மேனி யென்று முதலில் கடல்போலேயாய், பிறகு *கொண்ட வென்காத லுரைக்கில் தோழீ! மண்டிணி ஞாலமு மேழ்கடலும் நீள் விசும்புங் கழியப் பெரிதால்* என்றாய், அநந்தரம் *சூழ்ந்ததனிற் பெரிய வென்னவா* என்று தத்வத்ரயத்தையும் விளாக்குலை கொள்ள வல்லதாய் ஆகவிப்படி மேன்மேலும் பெருகிச் செல்லுமதான பக்தியின் ப்ரபாவத்தினாலே. [**பவத் அத்புத பாவபந்த**] உண்டான அத்புதமான பாவபந்தங்களினாலே. அதாவது—அந்த பக்தி தானே ச்ருங்கார வ்ருத்த்யா பரிணமித்து தலைமகள் பாசுரமாகவும் தாய்பாசுரமாகவும் தோழிபாசுரமாகவும் பேசும்படிக்கீடான பலவகைப்பட்ட ஆச்சர்ய பாவபந்தங்களை யுண்டாக்கி நிற்கு மென்கை. [**ஸந்துக்ஷித ப்ரணயஸாரரஸௌகபூர்ண:**] அப்படிப்பட்ட பாவபந்தங்கள் ப்ரணயரஸத்தை வளரச்செய்யுமாயிற்று.

*உயர்வற வுயர் நலம் * வீடுமின் முற்றவும் * பத்துடை யடியவர்க் கெளியவன் *பிறவித்துயரற* பொருமாநீள்படை* என்னுமிவைபோல்வனவான திருவாய்மொழிகளில் ஸாதாரண பக்திரஸம் விளங்குமத்தனையல்லது ப்ரணயரஸம் விளங்கமாட்டாதிறே. *அஞ்சிறையமடநாராய் * மின்னிடை மடவார்கள் * வேய்மருதோளிணை * முதலான திருவாய்மொழிகளிலேயாயிற்று அத்புத பாவபந்த ஸந்துக்ஷித ப்ரணயஸாரம் விளங்குவது. அப்படிப்பட்ட ப்ரணயம் மீதூர்ந்து வெளிவரும் ஸ்ரீஸூக்திகளில் நவரஸமும் பொலிய நிற்குமிறே. நவரஸங்களுள் ச்ருங்காரம் வீரம் கருணம் அத்புதம் பயாநகம் சாந்தி (-பக்தி) ஆகிற இந்த ரஸங்கள் ஓரோ திருவாய்மொழிகளில் ப்ரதானமாகப் பொதிந்திருக்கும்; மற்ற ஹாஸ்ய பீபத்ஸ ரௌத்ரரஸங்கள் ஓரோவிடங்களிலே மறைய நின்று சிறிது சிறிது தலைகாட்டி நிற்கும். *வீடுமின்முற்றவும்*சார்வேதவநெறிக்கு * கண்ணன் கழலிணை * முதலான திருவாய்மொழிகளிலே பக்திரஸம் தலையெடுத்திருக்கும். *மின்னிடை மடவார்கள்* * நங்கள் வரிவளை * வேய்மரு தோளிணை * முதலான திருவாய்மொழிகளிலே ச்ருங்காரரஸம் தலையெடுத்திருக்கும். *மாயாவாமனனே*புகழு நல்லொருவன் * நல்குரவுஞ் செல்வும் * முதலான திருவாய்மொழிகளிலே அத்புதரஸம். *உண்ணிலாவிய வைவரால்* இத்யாதிகளிலே பயாநகரஸம். * ஊரெல்லாந்துஞ்சி * வாயுந்திரை

யுகளும் ☼ ஆடியாடி யகங்கரைந்து ☼ இத்தியாதிகளிலே கருணரஸம். ☼ குரவை யாய்ச்சியரோடு கோத்ததும் ☼ வீற்றிருந்தேழுலகும் ☼ இத்தியாதிகளிலே வீரரஸம், ஆக இங்ஙனே நாநாரஸங்கள் பொதிந்த ஸ்ரீஸூக்தி ராசிகளை யருளிச்செய்யும் முகத்தாலே ரஸௌக பரிபூர்ண ராயிருப்பராய்த்து ஆழ்வார்.

[வேதார்த்த ரத்ந நிதி:] கடல் ரத்நாகரமாகையாலே ரத்நநிதியாயிருக்கும். பராங்குச பயோநிதியும் அப்படியேயிருக்கிறபடி பாரீர். ☼ஓதம்போல் கிளர்வேத மென்றும். ☼ச்ருதி ஸாகர மென்றும் சொல்லுகிறபடியே கடல் போன்றுள்ள வேத சாஸ்த்ரங்களிலே அல்பஸாரமாயும் ஸாரமாயும் ஸாரதரமாயு மிருக்கின்ற அர்த்தங்கள் போக ஸாரதமங்களாகவுள்ள அர்த்தங்களே ரத்நமாகும். ☼த்ரைகுண்ய விஷயா வேதா:☼ என்கிறபடியே எல்லாம் கலந்த கட்டியாயிருக்கும் வேதங்கள். ஸத்வரஜஸ்தமோ குணங்களாகிற மூன்று குணங்களிலும் ஊன்றினவர்களுக்கு அபேக்ஷிதங்களான விஷயங்களை யெல்லாம் வெளியிடு மவையிறே வேதங்கள், ☼மாற்றங்களாய்ந்து கொண்டு மதுசூதபிரானடிமேல் குருகூர்ச் சடகோபன் சொன்ன சொற்களிலே ஸார தமமான பொருள் தவிர வேறொன்றும் அவகாசம் பெறுமையாலே எல்லாம் ரத்னங்களாயிருக்கும். அப்படிப்பட்ட ரத்நங்களுக்கு நிதியாயிருப்பராய்த்து ஆழ்வார். *வேதந் தமிழ் செய்த மாறனிறே.

[அச்யுத திவ்யதாம] ☼மாலுங் கருங்கடலே! என்னோற்றாய்? வையகமுண்டு ஆலினிலைத் துயின்ற வாழியான்—கோலக் கருமேனிச் செங்கண்மால் கண் படையுள், என்றுந் திருமேனி நீ தீண்டப் பெற்று☼ (முதல் திருவந்தாதி) என்கிறபடியே எம்பெருமானுக்கு திவ்யாலயமாயிருக்கும் கடல்; ஆழ்வாரும் அப்படியேயா யிருப்பர். ☼கல்லுங் கனைகடலும் வைகுந்தவானாடும் புல்லென்றொழிந்தனகொல் ஏபாவம்! வெல்ல நெடியான் நிறங்கரியான் உள்புகுந்து நீங்கான், அடியேனதுள்ளத்தகம்☼ ☼கொண்டல் வண்ணன் சுடர்முடியன் நான்கு தோளன் குனிசார்ங்கன் ஒண்சங்கதை வாளாழியா னொருவன் அடியேனுள்ளானே☼ என்கிறபடியே ஆழ்வார் எம்பெருமானுக்கு நித்யநிகேதநமாயிருப்பரிறே. ☼இவையு மவையு முவையுமென் கிற திருவாய்மொழியிலே விசதமாகக் காணலாம்.

[அஸீமபூமா] ப்ருஹத்த்வ மென்றபடி. ஸ்ரீபாஷ்யத்தி லருளிச்செய்தபடியே ஆகாரத்தாலும் குணத்தாலும் த்விவிதமா யிருக்குமிறே ப்ருஹத்த்வம். பெரிய மலை, பெரிய குளம், பெரிய மாளிகை என்றால் அங்கே விவக்ஷிதமான பெருமை ஆகாரத்தி னலாகும். பெரியமனிசர் என்று சில மஹாபுருஷர்களைச் சொல்லுவோமாகில் குணங்களினலாகிய பெருமையே அங்கு விவக்ஷிதமாகும். ஆக இப்படி இருவகைப்பட்ட பெருமையில் ஆகார ப்ரயுக்தமான பெருமை கடலுக்கு ஆனாப்போலே குணப்ரயுக்த மான பெருமை ஆழ்வார்க்காயிற்று. ☼அருள்கொண்டாயிர மின்தமிழ் பாடின னருள்கண்டீர் இவ்வுலகினில் மிக்கதே☼ என்னும்படியாய் எல்லை காணவொண்ணாத க்ருபாகுண மொன்றின் பெருமை போதுமே.

ஆக நான்கு விசேஷணங்களினால் நம்மாழ்வார்க்கும் கடலுக்கும் ஸாதர்மியம் நிர்வஹிக்கப்பட்டதாயிற்று. இப்படிப்பட்ட பராங்குசபயோதி: ஜீயாத்—நித்ய ஸ்ரீர் நித்யமங்களமாக வாழவேணு மென்றதாயிற்று.

# 9. கீதாபாஷ்யத்திலிருந்து 'திருப்பாவை ஜீயர்'

பகவத்கீதையில் "யத் யதாசரதி ச்ரேஷ்டஸ் தத் ததேவ இதரோ ஜந:, ஸ யத் ப்ரமாணம் குருதே லோகஸ் ததநுவர்த்ததே." (3-21.) என்னும் ச்லோகம் சிஷ்டா சாரத்தின் சிறப்பைத் தெரிவிப்பது. ஸம்ஸ்க்ருதஜ்ஞர்களுக்கு அநாயாஸமாகப் பொருள் படக்கூடிய ச்லோகமிது. இதன் உத்தரார்த்தத்திற்கு பாஷ்யமிட்ட சங்கராசார்ய ஸ்வாமிகள் "ஸ: ச்ரேஷ்ட: யத் ப்ரமாணம் குருதே லௌகிகம் வைதிகம் வா; லோக: தத் அநுவர்த்ததே—ததேவ ப்ரமாணீகரோதீதி அர்த்த:" என்று உரைத்தார். ச்ரேஷ்டரா யிருப்பார் யாதொன்றை ப்ரமாணமாகக் கொள்ளுகிறார்களோ அது தன்னையே லோகமும் ப்ரமாணமாகக் கொள்ளுகிறது என்பதாகப் பொருள் காட்டப்பட்டதாயிற்று. மத்வாசார்யரான ஆனந்த தீர்த்த ஸ்வாமிகளும் இவ்வண்ண மாகவே பொருளுரைத்தார். "ஸ: யத் வாக்யாதிகம் ப்ரமாணீகுருதே—யதுக்த ப்ரகாரேண திஷ்டதீத்யர்த்த:" என்பது அவருடைய பாஷ்யபங்க்தி. ஆக இவற்றால் '**யத்ப்ரமாணம்**' என்றவிடத்தில் பதச்சேதம் இவர்களுக்கு விவக்ஷிதம் என்று தேறிற்று. **யத்** என்பது தனிப்பதமென்று முடிந்தது. நம் பாஷ்யகாரர் இங்கு இரண்டு பதங்களாகத் திருவுள்ளம் பற்றாமல் (யத்ப்ரமாணம்) என்று பஹுவ்ரீஹி ஸமாஸங்கொண்ட ஒரே பதமாகத் திருவுள்ளம் பற்றி பாஷ்யமிட்டருளியுள்ளார் பூர்வார்த்தத்தில் "ச்ரேஷ்ட: யத்யத் ஆசரதி" என்றதற்கு ச்ரேஷ்டராயிருப்பார். எந்தெந்த கருமத்தை யநுஷ்டிக்கிறாரோ என்பதாகப் பொருளாதலால் அந்த கரு மத்தைப் பற்றியே உத்தரார்த்தமும் சொல்லுகிறதென்று ஸ்வாமியின் திருவுள்ளம். சிஷ்டர்கள் தாங்களனுஷ்டிக்கிற கருமத்திற்கு எவ்வளவு அவதி வைத்துக்கொள்ளு கிறார்களோ அவ்வளவு அவதியையே பிறரும் வைத்துக்கொள்ளுகிறார்கள் என்றபடி. இதை தாத்பர்யசந்த்ரிகையில் வேதாந்ததேசிகன் விவரித்துள்ளார். 'பெரியோர்கள் அனுஷ்டிக்கிற கருமத்தையே பிறரும் அனுஷ்டிக்கிறார்கள்' என்று இவ்வளவு மாத் திரமே சொன்னால் போதாது. அவர்கள் அக்கருமத்தை எந்த விதமாக அநுஷ்டிக் கிறார்களோ அந்த விதமாகவே பிறரும் அநுஷ்டிக்கிறார்கள் என்றும் சொல்ல வேண்டியது இங்கு ஆவச்யகமாதலால் அதற்குச் சேர ஸ்வாமியின் பாஷ்யம் மிகப் பொருத்தமாக அவதரித்துள்ளது. பெரியார் எதை ப்ரமாணமாகக் கொள்ளு கிறாரோ அதையே பிறரும் ப்ரமாணமாகக் கொள்ளுகிறாரென்பது ப்ரக்ருதத்தில் அநபேக்ஷிதமாதலால் இதர பாஷ்யகாரர்களை நம் ஸ்வாமி பின்செல்லவில்லை. "யத் ப்ரமாணம் குருதே" என்றதற்கு இங்ஙனே பொருள் கொண்டால் "**லோகஸ் ததநுவர்த்ததே**" என்ற மேல் வாக்யத்தில் **தத்** என்றது ஸ்வரஸமாகப் பொருள் தருமோவென்று ஒரு சங்கை தோன்றும். இதற்குத் தாத்பர்ய சந்த்ரிகையிலேயே தகுந்த பரிஹாரமுள்ளது. கண்டு கொள்க.

இதர பாஷ்யகாரர்களுக்குத் தோன்றாத அர்த்தம் இங்கு நம் ஸ்வாமிக்குத் தோன்றினது எதனாலென்னில்; ஸ்வாமி திருப்பாவை ஜீயரென்று ப்ரஸித்தி பெற் றிருந்ததனாலேயே என்க. திருப்பாவையில் *மாலே மணிவண்ணா என்கிற பாசுரத் தில் "மேலையார் செய்வனகள் வேண்டுவன கேட்டியேல்" என்றுள்ளது; இங்கு 'மேலையார் செய்வனகள் கேட்டியேல், என்னுமளவே போதுமாயிருக்க இடையில்

'**வேண்டுவன**' என்று ப்ரயோகித்தது குறிக்கொள்ளத் தக்கது. அதை நோக்கியே யத்ப்ரமாண மென்றதை ஸமஸ்தமாகக் கொண்டு பாஷ்ய மிட்டருளினர் திருப்பாவை ஜீயர்.

# 10. கீதாபாஷ்யத்திலிருந்து மற்றெரு சிறந்த பொருள்

கீதையில் *பரித்ராணாய ஸாதூநாம்* (4–8.) என்ற விடத்திற்கு பாஷ்ய மருளிச்செய்யா நின்ற ஸ்வாமி, ஸாதுக்கள் யாவர்? என்பதை விவரிக்கு மிடத்து ஆழ்வார்களே ஸாதுக்களென்று ஸுஸ்பஷ்ட சப்தங்களால் விளக்கியருளினர்; காணவாரா வென்றென்று கண்ணும் வாயும் துவர்ந்து, ஒரு பகலாயிரமூழியாலோ வென்று தளர்ந்து, ☼நினைந்துநைந்துள்கரைந்துருகி நிற்குமாழ்வார்களே ஸாதுக்களென்கிறார். அங்கு அருளிச் செய்திருக்கிற பரமபோக்யபங்க்திகள் சங்கர பாஷ்யாதிகளில் அணுவளவும் காணக் கிடையா; இவற்றை திவ்யஸூக்திரஸிகர்கள் நிச்சலும் சிந்தனை செய்யவேணும். அவ்விடத்து ஸ்ரீஸூக்திகள் வருமாறு—

> "ஸாதவ:—உக்த லக்ஷண தர்மசீலா: வைஷ்ணவாக்ரேஸரா: மத்ஸமாச்ரயணே ப்ரவ்ருத்தா: மந்நாம கர்மஸ்வரூபாணாம் வாங்மநஸாகோசரதயா மத்தர்சநேந விநா ஸ்வாத்மதாரண போஷணாதிகம் அலபமாநா: க்ஷணமாத்ர காலம் கல்பஸஹஸ்ரம் மந்வாநா: ப்ரசிதில ஸர்வகாத்ரா பவேயுரிதி மத்ஸ்வரூப சேஷ்டிதாவலோகந ஆலாபாதிதாநேந தேஷாம் பரித்ராணாய".

இந்த கீதாபாஷ்யபங்க்திகள் ஆழ்வார்களின் தன்மைகளை அவர்களின் திவ்ய ஸூக்திகளைக் கொண்டே யருளிச் செய்தவை. [பதங்களின் மேலே சிறிது விவரிக்கிறோம்.] 'வைஷ்ணவாக்ரேஸரா:' என்பது இங்கு விசேஷ்யவாசகபதம். ஸ்ரீவைஷ்ணவ ஸம்ப்ரதாயத்திலே முன்னிற்பவர்கள் ஆழ்வார்களே யென்பது நிர்விவாதம். மற்றுமுள்ள விசேஷணங்க ளெல்லாம் அவர்களுக்கே பொருந்துமவையாயும் அவர்களையே சுட்டிக்காட்டு மவையாயும் அமைந்திருக்கின்றன. எங்ஙனே யென்னில், [உக்தலக்ஷண தர்மசீலா:] ☼யதாயதாஹி தர்மஸ்ய☼ என்கிற கீழ்ச்லோகத்தில் "தர்மஸ்ய—வேதோதிதஸ்ய சாதுர்வர்ண்ய சாதுராச்ரம்ய வ்யவஸ்தயா அவஸ்திதஸ்ய" என்று தாமருளிச் செய்திருக்கையாலே அதுவே 'உக்தலக்ஷணதர்ம' என்பதனால் பராமர்சிக்கப்படுகிறது. ஆழ்வார்கள் வேதோக்தங்களான வர்ணாச்ரம தருமங்களை எள்ளளவும் கடவாதவர்கள் என்றதாயிற்று. [மத்ஸமாச்ரயணே ப்ரவ்ருத்தா:]☼துயரறு சுடரடி தொழுதெழென் மனனே☼ என்றும் ☼ஆழிவண்ண! நின்னடியிணையடைந்தே னென்றும் சொல்லி பகவதாச்ரயணத்திலே ஒருப்பட்டவர்கள் என்றபடி. [மந்நாமகர்மஸ்வரூபாணாம் வாங்மநஸ அகோசரதயா]. எம்பெருமானுடையதிருநாமங்களையும் சேஷ்டிதங்களையும் ஸ்வரூபத்தையும் பேசப்புகுந்து *என் சொல்லிச் சொல்லுகேன்* என்றும், ☼நெஞ்சால் நினைப்பரிதால் வெண்ணெயூணென்னு மீனச் சொல்லே☼ என்றும் வாக்குக்கும் மநஸ்ஸுக்கு மெட்டாதவை யென்று சொன்னவர்களு மாழ்வார்களே.

[மத்தர்சநேந விநா ஸ்வாத்மதாரண போஷணுதிகம் அலபமாநா:] ✡தொல்லைமாலைக் கண்ணாரக்கண்டு கழிவதோர் காதலுற்றார்க்கும் உண்டோ கண்கள் துஞ்சுதலே✡ என்றும் ✡காணவாரா யென்றென்று கண்ணும் வாயும் துவர்ந்து ......✡ என்றும் சொல்லிக் கண்ணாரக் கண்டாலல்லது தரிப்புப் பெறாதவர்களு மாழ்வார்களே.

[க்ஷணமாத்ரகாலம் கல்பஸஹஸ்ரம் மந்வாநா:] ✡ஒரு பகலாயிர மூழியாலோ✡ ✡ஊழியில் பெரிதால் நாழிகை யென்னும் ✡ஓயும் பொழுதின்றி ஊழியாய் நீண்டதால்✡ என்றுபேசி ✡அவனை விட்டகன்று உயிராற்ற கில்லாதவர்களும் ஆழ்வார்களே. [ப்ரசிதில ஸர்வகாத்ரா:] ✡காலாழும் நெஞ்சழியும் கண்சுழலும் ✡ காலு மெழா கண்ணநீரும் நில்லா உடல் சோர்ந்து நடுங்கிக் குரல் மேலுமெழா மயிர் கூச்சுமறா ✡ உள்ளெலா முருகிக் குரல்தழுத்தொழிந்தேன்* உரோம கூபங்களாய்க் கண்ண நீர்கள் துள்ளஞ் சோரத் துயிலணை கொள்ளேன்✡ என்று சொல்லி ஸர்வா வயவ சைதில்யத்தைக் காட்டினவர்களும் ஆழ்வார்களே. இப்படிப்பட்ட ஆழ்வார்களுக்கு விலக்ஷணநுபவம் தந்து ரக்ஷணம் செய்வதற்காகவே எம்பெருமான் திருவவதாரங்கள் செய்தருள்வதாக எம்பெருமானாருடைய பாஷ்ய ப்ரக்ரியை. [அவதார ரஸங்களை நன்கு அநுபவித்தவர்கள் ஆழ்வார்களேயென்று கருத்து.] இப்படிப்பட்ட பங்க்திகள் இதரபாஷ்யகாரர்களிடத்திலே லவலேசமும் காணக் கிடைப்பதில்லை; ஆழ்வார்களைப்பற்றியும் அவர்களின் தன்மைகளைப் பற்றியும் சங்கராசார்ய மத்வாசார்யாதிகளுக்கு வ்யுத்பத்தியே யில்லாமைதான் அதற்குக் காரணம்.

## 11. சரணுகதிகத்யத்தில் அருமையான விஷயமொன்று

சரணுகதிகத்யத்தில் *அகிலஹேயேத்யாதி (5) சூர்ணையில் 'மஹா விபூதே! ஸ்ரீமந்நாராயண! ஸ்ரீவைகுண்டநாத!' என்கிற ஸம்போதநங்களுக்குப் பிறகு "அபார காருண்ய ஸௌசீல்ய வாத்ஸல்யௌதார்யைச்வர்ய ஸௌந்தர்ய மஹோததே!" என்கிற ஸம்போதநத்தில் வாத்ஸல்யகுணமும் சேர்த்துப் படிக்கப்பட்டிருக்கச் செய்தேயும் மறுபடியும் (அவ்விடத்திலேயே) *ஆச்ரிதவாத்ஸல்யைக ஜலதே!' என்று மற்றொரு ஸம்போதநமும் அருளிச்செய்யப்பட்டிருக்கிறது. கீழுள்ள ஸம்போதநத்திலேயே வாத்ஸல்யகுணமும் சேர்ந்திருக்கவும் மீண்டும் வாத்ஸல்யத்தை மாத்திரமிட்டுத் தனியே ஒரு ஸம்போதநமருளிச் செய்திருப்பது எதற்காகவென்று விமர்சிக்கவேணும். கீழ் ஸம்போதநத்தில் வாத்ஸல்யத்தை மற்றும்பல திருக்குணங்களோடே சேர்த்துப்படித்ததில் த்ருப்தியில்லாமல் வாத்ஸல்யத்தை மாத்திரம் தனிப்பட எடுத்துரைக்க வேணுமென்று திருவுள்ளமுண்டாகி இங்ஙனே யருளிச்செய்திருப்பதாக ஸ்பஷ்டமாய்த் தெரிகிறது. பெருவிடாய்ப்பட்டவன் நீரிலே விழுந்து நீரைப் பலமுகமாக உபயோகங்கொள்ளுமாபோலே பகவத்குணகண கீர்த்தனத்திலே அத்விதீயமான உத்கண்டையையுடைய எம்பெருமானார் அலமாப்பின் மிகுதியாலே யருளிச்செய்யுமதுக்கு நாம் ஒரு அடைவு தேடவேண்டாவாகிலும், இந்த புநருக்தி வாத்ஸல்ய குணத்திலே யானபடியாலே நம் ஆசார்யர்கள் இவ்விடத்தில் விசேஷாவதானம் செலுத்தி வெளியிட்டிருக்குமது இங்குத் தெரிவிக்கலாகிறது. வெகு நுட்பமான விஷயமிது.

திருவாய்மொழியில் (6-10-10) ☼அகலகில்லேனிறையுமென்று அலர்மேல் மங்கையுறை மார்பா!☼ என்று ஆழ்வார் பெரிய பிராட்டியாரை முன்னிட்டுத் திரு வேங்கடமுடையான் திருவடிகளிலே ப்ரபத்தி பண்ணுகிறபோது அடுத்த இரண்டா மடியில் எம்பெருமானை ☼நிகரில் புகழாய்!☼ என்று ஸம்போதித்திருக்கிறார். ஒப்பற்ற வொரு திருக்குணத்தை யுடையவனே யென்கிறார். அந்தத் திருக்குணம் எதுவாக இருக்குமென்று ஆராய்ந்தால் ப்ரகரணத்தை யநுஸரித்து வாத்ஸல்யமே அது என்று எம்பெருமானார் திருவுள்ளம் பற்றுகிறார். தோஷபூயிஷ்டனான சேதநன் பெரியபிராட்டியாரைப் புருஷகாரமாக வரிப்பது எதற்காக வென்னில்; தன்னுடைய தோஷங்களைக் கண்டு எம்பெருமான் தன்னை நிக்ரஹித்தருளாமைக்காக வன்றோ; அப்பிராட்டியினுடைய புருஷகாரபலத்தாலே எம்பெருமானிடத்தில் முதன் முதலாக எந்தத் திருக்குணம் விகாஸமடைகின்றதென்னில், வாத்ஸல்ய குணமே யென்பது நிர்விவாதம்.

வாத்ஸல்யமாவது தோஷாதர்சித்வமா? தோஷபோக்யத்வமா? என்கிற விசாரம் இவ்விடத்தில் சிறிதும் கொள்ளப்படவில்லை. எதுவாயினுமாகுக. தோஷாதர்சநமே வாத்ஸல்யமென்று கொள்வோம். அக்குணம் எம்பெருமானுக்கு உள்ளதேயானாலும் சேதநனுடைய அபராதபாஹுள்யத்தாலே அது உள்ளே அமுங்கிக் கிடந்ததென்றும், பிராட்டியின் புருஷகார பலத்தாலே அது தலையெடுக்கிறதென்றும் ஆசார்யர்கள் கண்டறிந்து கூறுகிறார்கள். இவ்விஷயத்தை தேசிகனும் ரஹஸ்யத்ரய ஸாரத்தில் த்வயாதிகாரத்திலும் மற்றும் சிறு ரஹஸ்யங்களிலும் ஸுஸ்பஷ்டமாக வெளியிட்டுள்ளார். *நிகரில் புகழாய்!* என்கிற ஆழ்வார் ஸ்ரீஸூக்தியில் விவக்ஷிதமான குணம் வாத்ஸல்யமே என்பது பிள்ளைலோகாசார்ய ரஹஸ்யங்களோடு தேசிக ரஹஸ்யங்களோடு வாசியற எல்லாவற்றிலும் விளக்கமாகத் தெரிவிக்கப்பட்டுள்ளது. ஆக, இந்த வாத்ஸல்ய குணத்தை ஆழ்வார் நிகரற்றதாகத் திருவுள்ளம்பற்றின படியாலே, ஸ்வாமி ராமாநுஜர் இதை மற்ற திருக்குணங்களோடு சேர்த்துப்படித்தவளவால் த்ருப்திபெறாமல் தனிப்படவும் ஒரு சூர்ணிகை இதற்காக இட்டருளினர். இதனால் ஆழ்வாரருளிச் செயலில் எம்பெருமானார் வைத்திருந்த கௌரவாதிசயம் விசதமாகும்.

## 12. பகவத்ராமாநுஜ ஸிம்ஹாநுபவம்

இராமாநுச நூற்றந்தாதியில் *கலிமிக்க செந்நெல் என்னும் பாசுரத்தில் எம்பெருமானார் சீரிய சிங்கமாக அருளிச்செய்யப்பட்டுள்ளார். அதே போன்று எம்பார் தாம் பணித்த முக்தக ச்லோக மொன்றில் ஸ்வாமியைச் சிங்கமாக அநுபவித்துள்ளமை காட்டுதும்.

வேதோத்தம்ஸ குஹாவிஹாரபடுநா ஸ்ரீசைல ச்ருங்கோல்லஸந்
மாயா கேஸரி மர்திதேந கஹநந்யாயாடவீசாரிணா,
கம்பீரேண பராத்மபேதநமஹாநாதேந நாதேந மே
குப்தோஹம் யதிஸார்வ பௌமஹரிணா வர்த்தே ப்ருசம் நிர்ப்பய:.

இதில் ஸிம்ஹத்தோடே ஸ்வாமிக்கு ஸாம்யம் ஐந்து விசேஷணங்களினால் அற்புதமாக நிர்வஹிக்கப்படுகிறது. [**வேதோத்தம்ஸ குஹா விஹார படுநா**] "மலை

முழஞ்சில் மன்னிக்கிடந் துறங்கும் சீரிய சிங்கம்'' என்ற திருப்பாவையின் படியே சிங்கம் பர்வத குஹைகளில் விஹரிக்கும். ஸ்ரீராமாநுஜ ஸிம்ஹமோ வென்னில்; வேதங்களாகிற பர்வதங்களின் உபநிஷத்பாகமாகிற குஹை களில் விஹரிக்கும். தைத்திரீய யஜுர் ப்ராஹ்மண-காடகத்தில் ''பரத் வாஜோ ஹ த்ரிபிராயுர்ப்பிர் ப்ரஹ்மசர்ய முவாஸ'' என்று தொடங்கியுள்ள உபாக்கியானத்தில் தேவேந்திரன் பரத்வாஜ முனிவர்க்கு வேதங்களை மலைகளாகக் காட்டினனென்று ஓதியிருக்கையாலே வேதம் மலையாகக் குறையில்லை. ''தர்மஸ்ய தத்த்வம் நிஹிதம் குஹாயாம்'' என்ற மஹாபாரத ச்லோகத்தின்படி தருமநுட்பம் பொதிந்திருக்குமிடம் குஹையாகக் கருதப்படுகையாலே உபநிஷத்பாகங்களை குஹையாகக் கூறினது பொருத்தம். அதிலே விஹாரம் செய்கிறார் ஸ்வாமியென் றது ''க்ரீடார்த்தமபி யத் ப்ரூயுஸ் ஸ தர்ம: பரமோ மத:'' என்றும் ''சொல்லு மவிடு சுருதியாம்'' என்றும் சொல்லுகிறபடியே விளையாட்டாகச் சொல்லும் வார்த் தையும் சிறப்புற்றிருக்கு மென்றவாறு. **[ஸ்ரீசைல ச்ருங்கோல்லஸந் மாயா கேஸரி மாநிதேந.]** ஸிம்ஹத்தைக் கொண்டாடவல்லது ஸிம்ஹமேயாகும். அப்படியே இந்த ராமாநுஜஸிம்ஹத்தைக் கொண்டாடவல்ல ஸிம்ஹம் திருவேங் கடமுடையானாகிற ஸிம்ஹமேயாம். திருமங்கையாழ்வார் ''தூணுயதனூடு அரியாய் வந்து தோன்றிப், பேணுவவுணனுடலம் பிளந்திட்டாய், சேணுர் திருவேங் கட மாமலைமேய, கோணுகணையாய்'' என்கிற பாசுரத்தினுல் திருவேங்கடமுடை யானை ஸிம்ஹமாகவநுபவித்திருப்பது காண்க. அந்த ஸிம்ஹம் இந்த ஸிம்ஹத்தை பஹுமானித்த விஷயம் ஸ்ரீ வேங்கடாசல இதிஹாஸ மாலையில் பரக்கக் காணத் தக்கது.

**[கஹந ந்யாயாடவீ சாரிணு]** ஸிம்ஹம் பெருங்காட்டில் ஸஞ்சரிக்குமே யொழியச்சிறு காட்டில் காணக் கிடைக்காது. இந்த யதிராஜ ஸிம்ஹமோ வென் னில்; சாஸ்த்ரீய ந்யாயங்களாகிற அடவிகளிலே ஸஞ்சரிக்குமது. **[கம்பீரேண]** சிங்கத்தின் தோற்றம் அதிகப்பீர மென்னுமிடம் சொல்லவேண்டா. ஸ்வாமியினுடைய காம்பீர்யம் ஸ்ரீஸூக்திகளிலும் திருவுருவத்திலுமாகும். **[பராத்ம பேதநமஹா நாதேந]** இந்த விசேஷணத்தில் சிலேடை அமைந்துள்ளது. ஸிம்ஹபக்ஷத்தில் ''பரேஷாம் ஆத்மாநம் பிநத்தீதி பராத்மபேதந:; ததாவித: மஹாநாதோ யஸ்ய'' என்கிற வ்யுத்பத்தி கொள்ளத் தக்கது. ஸிம்ஹத்தின் பெரு முழக்கம் இதர ஜந்துக்களின் உயிரை மாய்க்கவல்ல தென்கை. இனி யதிராஜ ஸிம்ஹபக்ஷத்திலோ வென்னில், ''பரச்ச ஆத்மாநச்ச பராத்மாந:; தாந் பிநத்தீதி பராத்மபேதந:, ததாவிதோ மஹா நாதோ யஸ்ய'' என்று வ்யுத்பத்தி கொள்ளக் கடவது. பரம புருஷனுக்கும் ஜீவாத்மாவுக்கும் ஐக்கியம் சொல்லுகிற விமத வாதிகளைக் கண்டித்து ஜீவபர பேதத்தை ஸாதிக்கவல்ல திருமிடற்றோசையை யுடையவரன்றோ பகவத் ராமாநுஜர்! நூற்றந்தாதியில் ''உயிர்கள் மெய்விட்டாதிப் பரனோடு ஒன்றாமென்று சொல்லுமவ்வல்ல லெல்லாம் வாதில் வென்றான் எம்மி ராமாநுசன் மெய்ம்மதிக் கடலே'' என்றருளியது இங்கு நோக்கத்தக்கது. ஆக இத்தகைய பொருத்தங்களினுல் ஸிம்ஹ மென்று போற்றத் தக்க எம்பெருமானு ருடைய அபிமானத்திலே ஒதுங்கிக்கிடக்கிற நாம் நிர்ப்பயமான வாழ்ச்சியையுடை யோம் என்றதாயிற்று.

## 13. பட்டர் அருளிய நம்மாழ்வார் துதி

ஆழ்வார் திறத்திலே பட்டருடைய ஈடுபாடு அபரிமிதம். அவருடைய ஸ்ரீஸூக்திகளெல்லாம் ஒப்புயர்வற்று விளங்குவதன் காரணம் அவை அருளிச் செயல் மணம் கமழ நிற்பதேயாம். நம்மாழ்வார்க்குத் துதியாக பட்டர் அருளிச் செய்திருக்கும் ச்லோகமொன்று அத்விதீயமாய் விளங்கும். அதாவது "ருஷிம் ஜுஷாமஹே க்ருஷ்ண த்ருஷ்ணு தத்வமிவோதிதம், ஸஹஸ்ர சாகாம் யோத்ராக்ஷீத் த்ராவிடீம் ப்ரஹ்ம ஸம்ஹிதாம்" என்பது. "எம்பெருமான் விஷயமான ஆசைப் பெருக்கே ஆழ்வாராக வடிவெடுத்துவந்ததோ' என்னலாம்படி பகவத்விஷயத்தில் அளவிறந்த காதல் கொண்டவரும் "த்ரமிடோபநிஷத்" என்னப்பட்ட திருவாய் மொழியை இந்த வுலகிலிருள் நீங்க வெளியிட்டருளினவருமான நம்மாழ் வாரைப் பணிவோம்" என்பது இதன் கருத்தாம். இதில் (சடகோபர் முதலிய) திருநாமங்களையிடாமல் "ருஷி" என்றே அருளிச்செய்தார். இதை யடியொற்றியே "நால்வேதம் கண்ட புராணரிஷி மந்த்ரதர்சிகளைப்போலே இவரையும் ரிஷி முனி கவி என்னும்" என்கிற ஆசார்ய ஹ்ருதய ஸ்ரீஸூக்தி அவதரித்தது. வடமொழியினு லாகிய உபநிஷத்துக்களில் அநேக சாகாபேதங்கள் இருப்பதுபோல் த்ரமிடோப நிஷத்திலும் அநேக சாகாபேதங்களுண்டென்று காட்டவேண்டி "ஸஹஸ்ர சாகாம்"என்றார். (ஒவ்வொரு பாசுரமும் ஒவ்வொரு சாகை என்று) 'அத்ராக்ஷீத்' என் றதனுல் எம்பெருமான் சிலபல ரிஷிகளைக் கொண்டு சிலபல வேதசாகைகளைப் ப்ர வர்த்திப்பித்தது போல ஸ்ரீசடகோப முனிவரைக் கொண்டு திருவாய்மொழியை ப்ரவர்த்திப்பித்தானென்பது விளங்கும். இந்த ச்லோகத்தில் ஆழ்வாரை எம்பெரு மான் திறத்துக் காதலின் உண்மை போன்றவர் (க்ருஷ்ண த்ருஷ்ணு தத்வமிவோதி தம்) என்று அருளியிருப்பதை யடியொற்றி "க்ருஷ்ண க்ருஷ்ணத்வைபாயநோத் பத்திகள் போலன்றே க்ருஷ்ண த்ருஷ்ணு தத்வ ஜந்மம்" என்ற ஆசார்ய ஹ்ருதய ஸ்ரீஸூக்தி அவதரித்திருப்பது அறிந்தின்புறத் தக்கது.

## 14. வண்குருகூர்மாறனும் வேதாந்தவாரியரும்

நாதமுனிகள் தொடக்கமான நம்முடைய பூர்வாசார்யர்களனைவரும் ஆழ் வார் அருளிச்செயலிலும் தத்வைபவத்திலும் ஈடுபட்டவர்கள். வேதாந்த தேசிகனை யெடுத்துக்கொண்டாலோ த்ரமிடோபநிஷத் தாத்பர்யரத்நாவளியும் ஸாரமும் ஒரு தட்டாய், பாதுகாஸஹஸ்ரம் ஒரு தட்டாயிருக்கும். நம்மாழ்வார் நமக்கு ஆயிரமளித்தபடியாலே அவர்தமக்கு நாம் ஆயிரமளிப்போமென்றுகொண்டு பாதுகாஸஹஸ்ரம் ஸமக்ரமாக நம்மாழ்வார்க்கே இட்டருளினதென்னக் குறை யில்லை. யதிராஜ ஸப்ததியில் [*யஸ்ய ஸாரஸ்வதம் ஸ்ரோதோ வகுலாமோத வாஸிதம், ச்ருதீநாம் விச்ரமாயாலம் சடாரிம் தமுபாஸ்மஹே*] என்கிற ச்லோகத் தின் உத்தரார்த்தம் உண்மை கண்டுரைத்தது. ஸம்ஸ்க்ருத வேதங்கள் தத்வஹித புருஷார்த்தங்களைத் தெளிய வெளியிடவேணுமென்று மிகவும் சிரமப்பட்டன. ஆனுல் சிரமத்திற்குத் தகுதியான பலன் கிடைக்கவில்லை. 'அந்தோ! நமக்கு

ச்ரமமே மிக்கதே' என்று அந்த வேதங்கள் விடாய்த்தனவாம். அந்த நிலைமையில் மகிழ்மாலை மார்பினர் திருவவதரித்து ஈரச் சொற்களாலே வேதங்களுக்கு விவக்ஷித மான பொருள்களைத் தெளிய வெளியிட்டமையாலே வேதங்களுக்கு உண்டா யிருந்த விடாய் தொலைந்ததாம். 'வேதங்களே! பகவத் ஸ்வரூபரூபகுணவிபூதிகளை ப்ரதிபாதிக்கும் விஷயத்தில் நீங்கள் ஏதுக்கு வீணுகச்ரமப்படுகின்றீர்கள்? அந்தத் தொழிலை நான் வஹிக்கக்கடவேனுகையால் நீங்கள் இளைப்பாறலாம்' என்று சொல்லி ஆழ்வார் திவ்யப்ரபந்தங்களை யருளிச் செய்வாராயினர்—என்பதும் மேலெடுத்த யதிராஜஸப்ததி ஸூக்திக்குக் கருத்தாகும்.

## 15. மங்கைவேந்தனும் முதலாழ்வார்களும்

திருக்கோவலூர் இடைகழியில் முதலாழ்வார்கள் ஒன்றுசேர்ந்து மாயனைக் கண்டு அருந்தமிழந்தாதி அருளிச்செய்ததைத் திருமங்கையாழ்வார் உய்த்துணரும் வகையில் அருளிச்செய்திருப்பதைக் கேளீர். "தாங்கரும்போர் மாலிபடப் பறவை யூர்ந்து தராதலத்தோர் குறைமுடித்த தன்மையானை ஆங்கரும்பிக் கண்ணீர் சோர்ந்து அன்பு கூருமடியவர்கட் காரமுதமானான்றன்னை கோங்கரும்பு சுரபுன்னை குரவார் சோலைக் குழாவரிவண்டிசை பாடும் பாடல்கேட்டுத் தீங்கரும்பு கண் வளரும் கழனிசூழ்ந்த திருக்கோவலூரதனுள் கண்டேன் நானே." (2-10-4) இந்தப் பாசுரத்தில் "கண்ணீர் சோர்ந்தன்புகூரு மடியவர்" என்பதில் முதலாழ்வர்கள் தனித்தனியே காட்டப்பட்டனர். "பழுதே பல பகலும் போயின வென்று அஞ்சி யழுதேன்" என்றருளிய பொய்கையாழ்வாரை 'கண்ணீர் சோர்ந்து' என்பதனுலும் 'அன்பே தகளியா' என்று அன்பில் தொடங்கி 'யானுடைய அன்பு' என்று அன்பில் முடித்த பூதத்தாழ்வாரை 'அன்புகூரும்' என்பதனுலும், 'இன்றே கழல் கண்டேன்' என்று தொடக்கத்திலும் 'தாள் முதலே நங்கட்குச் சார்வு' என்று ஈற்றிலும் திரு வடியைப்பற்றி அருளிச்செய்த பேயாழ்வாரை அடியவர் என்பதனுலும் ஸூசிப்பித் தருளினர் திருமங்கையாழ்வார் என்க. இவர்கள் மூவர்க்கும் எம்பெருமான் ஆர முதமானுன் என்பதை 'அன்பாவாய் ஆரமுத மாவாய்' (இரண்டாம் திருவந்தாதி) என்பது கொண்டறியலாம். இவர்கள் குழாமாகச் சேர்ந்து அந்தாதி யருளிச் செய்ததை 'குழா வரிவண்டிசைபாடும்' என்பதால் குறித்தார் என்க. (தீங்கரும்பு கண் வளரும்.) எம்பெருமானைக் கரும்பாகக் கொள்க. 'தேனை நன்பாலைக் கன்னலை' என்று எம்பெருமான் கரும்பாகச் சொல்லப்பட்டனனன்றே!

## 16. எம்பெருமானர் நிர்வாஹமொன்று

பெரிய திருமொழியில் 'கள்வன் கொல் பதிகம்' (3-7) தாய் பாசுரமாக அமைந்தது. பரகாலநாயகியுடன் படுத்துக் கொண்டிருந்த திருத்தாயார் ஆயா ஸத்தாலே சிறிது கண்ணுறங்கினபோது மகளை வயலாலி மணவாளன் அழைத்துச் செல்வதைக் கண்டு அயல்வீட்டுப் பெண்ணொருத்தியை நோக்கிக் கூறுகிருள் 'அஞ்சு வன் வெஞ்சொல் நங்காய் அரக்கர் குலப்பாவைதன்னை வெஞ்சின மூக்கரிந்த விற லோன் திறங்கேட்கில் மெய்யே பஞ்சிய மெல்லடி எம்பணைத் தோளி பரக்கழிந்து.

வஞ்சியந் தண்பணை சூழ் வயலாலிபுகுவர் கொலோ' (4) என்று. இந்தப் பாசுரத்தை மேலெழப் பார்க்குமிடத்து 'சூர்ப்பணகையின் மூக்கை நீக்கியதுபோல் என் மகளது மூக்கையும் அறுத்துவிடுவனோ என்றஞ்சுகின்றேன்' என்பதாகப் பொருள் தோன்றும். குணக்கடலான எம்பெருமான் திறத்தில் இது குணஹாநி சொன்னபடி ஆகாதோ என்று பூருவர்கள் விசாரம் செய்தபோது எம்பெருமானார் நிர்வஹித்ததாக இதன் உண்மைப்பொருளை கிடாம்பியாச்சான் வெளியிட்டார். அதாவது, சூர்ப்பணகையின் அங்கபங்கத்தைச் சொன்னவாறே ஸ்ரீராமஸீதைகளின் பிரிவே நினைவுக்கு வரும்; எனவே 'முன்பு இருவருமாய்ப் புறப்பட்டுச் சென்று பிரிய நேர்ந்தது. அதுபோல் இப்போதும் இவர்கட்கு விதிவசத்தால் பிரிவு நேர்ந்து விடுமோ என்று அஞ்சுகின்றேன்' என்கிறாள் பரகால ஜநநி—என்று.

## 17. பரகாலரும் பட்டரும்

பெரியோர்களையும் திகைக்கவைத்த திருமொழிப் பாசுரமொன்றை பட்டர் மிகச் சிறு பிராயத்தே அற்புதமாக நிர்வஹித்ததைப்பற்றிக் கேளீர். 'தான் போலுமென்றெழுந்தான் தரணியாளன் அதுகண்டு தரித்திருப்பானரக்கர் தங்கள் கோன்போலுமென்றெழுந்தான் குன்றமன்ன இருபது தோளுடன் துணித்த ஒருவன் சண்டீர்' (4-4-6) என்ற விடத்திற்குப் பொருள் ஆராயப்புகுந்த ஆப்பான் திருவழுந்தூர் அரையரும் மற்றும் சில முதலிகளும் பட்டரைக்கேட்க, அவரும் ஒரு முறை பாசுரத்தைச் செவிமடுத்தவாறே 'தான் போலு மென்றெழுந்தான் தரணியாளன் அது கண்டு தரித்திருப்பான் அரக்கர் தங்கள் கோன் போலும்' என்கிற வரையில் இராவணன் வார்த்தையின் அநுவாதம்—என்று சொல்லிப் பொருள் விளக்கிக் காட்டியருளினர். (அதாவது) அஹங்காரத்துடன் போர்க்களத்திற் கிளர்ந்த இராவணன் செருக்குடன் சொன்ன வார்த்தை 'தான்போலும்...கோன் போலும்' என்பது. இவ்வார்த்தைக்கு அர்த்த மேதென்னில் 'இராமனென்று ஒரு பயல் தான் பெரிய வொரு க்ஷத்ரியன்போல் எதிரி யென்று வருகிறதாம். அதைக் கண்டு ஒருவன் பொறுத்திருக்கிறதாம். அப்படிப் பொறுத்திருப்பவன் ராக்ஷஸர் கட்குத் தலைவன் என்று பெயர் சுமந்திருப்பதாம்.' என்று சொல்லிப் போர்புரியக் கிளம்பினனென்கை. இதனால், இராமன் போர்க்கு வரச் செய்தேயும் தான் ஆறி யிருப்பது தன் பெருமைக்குத் தகாதென்ற இராவணன் கருத்து தெரிவிக்கப் பட்டதாம்.

## 18. ஆழ்வாரும் ஐயங்காரும்

ஆழ்வாரைப்பற்றி பிள்ளைப் பெருமாள் ஐயங்கார் பணித்த பாசுரமொன்று கேளீர். 'மறைப்பாற் கடலைத் திருநாவின் மந்தரத்தாற் கடைந்து துறைப்பாற் படுத்தித் தமிழாயிரத்தின் சுவையமிர்தங் கறைப்பாம்பணைப் பள்ளியான் அன்பரீட்டங் களித்தருந்த நிறைப்பான் கழலன்றிச் சன்மவிடாய்க்கு நிழலில்லையே'. நம்மாழ்வார், திருநாவெனும் மலையை நாட்டி வேதமாகிய பாற்கடலைக் கடைந்து திருவாய்மொழியெனும் அமுதத்தை அடியவர்க்கு அருளினர். அவரது திருவடியே

நம்மை ஸம்ஸாராதுத்தீர்ணராக்கும் என்பது இதன் கருத்து. மந்தரபர்வதம் பாற் கடலின் அடிவரைசென்று நின்றதால் நம்மாழ்வார் திருநாவுக்கு அதனை உவமை யாக்கினர். மறையின் ஆழ்பொருளைக் கண்டறிந்தவர் எங்க. 'தொண்டர்க் கமுதுண்ணச் சொன்மாலைகள் சொன்னேன்' 'பக்தாம்ருதம்' என்பனகொண்டு 'சுவையமிர்தம்......அன்பரீட்டங்களித்தருந்த' என்றார். தாபத்ரயங்களை நீக்க வல்லது ஆழ்வாருடைய நீள்கழல் நிழலே என்ற தம்முடைய அத்யவஸாயத்தை இதில் வெளியிட்டாராயிற்று.

## 19. குறுக்கும் வகை—தெட்டபழம்

திருவாய்மொழியில் (மலையாள திவ்யதேசம்) திருநாவாய்ப் பதிகத்தின் முதற் பாசுரத்தில் 'குறுக்கும் வகையுண்டு கொலோ' என்பது ஈற்றடியாக உள்ளது. எம் பெருமானார் மலைநாட்டுத் திருப்பதி யாத்திரையாக எழுந்தருளாநிற்கையில் திரு நாவாய் ஸமீபத்திலே யெழுந்தருளும்போது எதிரே வந்துகொண்டிருந்த மலையா ளர்களை நோக்கி 'திருநாவாய் எவ்வளவு தூரமுண்டு?' என்று கேட்க, அவர்கள் 'குறுக்கும்' என்றார்களாம். [தமிழில் 'குறுகும்' என்றது மலையாளத்தில் 'குறுக் கும்' என்றுகிடக்கிறது. ஸமீபத்தில் தானுள்ளது—என்று பொருள்]. எம்பெரு மானார் அதுகேட்டு 'இப்பாஷையாலே அருளிச் செய்வதே ஆழ்வார்!' என்று ஈடுபட்டாராம். இவ்வகையான பெரிய திருமொழிப்பாசுரம் ஒன்று காட்டு தும். 'அணில்கள்தாவ நெட்டிலைய கருங்கமுகின் செங்காய்வீழ நீள்பலவின் தாழ் சினையில் நெருங்கு பீனத் தெட்டபழம் சிதைந்துமதுச் சொரியும் காழிச் சீராம விண்ணகரே சேர்மினீரே' என்பது பெரிய திருமொழி (3—4—8) 'பட்டரவே ரகலல்குல்' என்கிற பாசுரத்தின் பின்னடிகளாம். எம்பெருமானார் இந்தத் திவ்யப்ரபந்த காலக்ஷேபம் நடத்தியருளும்போது இவ்விடத்திலுள்ள 'தெட்ட' என்பதற்குச் சரியான பொருள் விளங்கவில்லை என்று அருளிச் செய்துவைத்தனர். ஒருகால் திவ்யதேச யாத்திரை எழுந்தருளும்போது இத்தலத்தின் சோலை வழியே வந்து கொண்டிருக்க, அங்கே நாவல் மரங்களின்மீது சிறுபிள்ளைகள் ஏறிப் பழம் பறித்துக்கொண்டிருந்தனர். அப்போது கீழேயிருந்த சில பிள்ளைகள், 'அண்ணே! தெட்டபழமாகப் பறித்துப்போடு' என்ன; அதை யாத்ருச்சிகமாகக் கேட்டருளின எம்பெருமானார் 'பிள்ளாய்! தெட்டபழமென்றால் என்ன?' என்று வினவியருளி னர். 'கனியப்பழுத்தபழம்' என்று அப்பிள்ளைகள் விடை கூறினர். உடனே உடையவர் திருவுள்ளமுவந்து 'இது ஒரு திசைச்சொல் போலே இருந்தது. நம்மாழ் வார் திருநாவாய்ப் பதிகத்தில் 'குறுக்கும் வகையுண்டு கொலோ' என்றதே யொக்குமிது' என்றருளிச் செய்தார் என்று பெரியோர் பணிப்பர்.

## 20. நாம் தாளிட்டுப் பூட்டுவது எதற்காக?

நாம் நமது க்ருஹங்களில் அறைகளையும் பெட்டிகளையும் பொக்கிஷங்களையும் தாளிட்டுப் பூட்டிவைக்கிறோம். இப்படிப் பூட்டிவைப்பது எதற்காக? இதுவொரு வினா. இது வொரு அசட்டுக்கேள்வி யென்றே தோன்றும். 'கள்ளர் கொள்ளை கொள்ளாமல் நமது பொருள்கள் ஸுரக்ஷிதமாயிருப்பதற்காகப் பூட்டி வைக் கிறோம். இது யாவருமறிந்ததே. இது என்ன கேள்வி?' என்று பலர் நினைக்கக் கூடும். நமது பொருள்கள் ஸுரக்ஷிதமாயிருப்பதற்காகப் பூட்டுகிறோமென்பது இருக்கட்டும். மற்றொன்று கேண்மின். 'பிறருடைய புத்தி கெடாமைக்காகப் பூட்டி வைக்கிறோம்' என்று ஒரு மேதாவி விடை கூறினர். பொருள்கள் ரக்ஷை யற்றுக்கிடந்தால் வஸிஷ்டவாமதேவாதிகள் போன்ற சிஷ்டர்களுடையவும் புத்தி சபலிக்கக்கூடும். அந்த சாபலம் ஏற்படாமைக்காக—என்பது நன்றே.

## 21. எம்பெருமான் ஸர்வவ்யாபி யென்னுமுணர்ச்சி

நான் இளமையில் ஒரு கதை கேட்டிருந்தேன்—ஒரு கலாசாலையில் ஒரு பையன் மற்றொருவனைநோக்கி 'நீ கடவுளிருக்குமிடத்தைச் சொன்னாயாகில் உனக்கு ஒரு ரூபா தருகிறேன்' என்றானும். அதற்கு அவன் 'நீ கடவுளில்லாதவிடத்தைச் சொன்னாயாகில் உனக்கு இரண்டு ரூபா தருகிறேன்' என்றானும். 'பகவான் ஸர்வவ்யாபி—எங்குமுள்ளவன் என்கிற உணர்ச்சி உலகில் பெரும்பாலும் ஆஸ்திக குடும்பத்திலுள்ள அனைவர்க்கு மிருக்கக்கூடியதே. பிரஸங்க மேடைகளில் இதை நாமும் உபந்யஸிக்கிறோம். இந்த வுணர்ச்சி நமக்கு ஹ்ருதயபூர்ணமாக இருக்குமாகில் நாம் மறைவில் பாவஞ்செய்யத் துணியமாட்டோம் என்றார் ஒரு பெரியவர். இது ஸத்யமானதே. அடுத்த உபந்யாஸத்தைக் காண்மின்.

## 22. மகன் தந்தைக்கு நல்கிய நன்மதி

ஒருவன் இளமை தொடங்கிக் களவுத் தொழில் செய்தே ஜீவித்து வருபவன். அவன் முதுமை யடைந்து வருகிறான். அவனுக்கு ஒரு மகன். அவன் ப்ரஹ்லாதனைப் போலவும் துருவனைப் போலவும் கருவிலே திருவுள்ளவன். அவனது பெருமையைத் தந்தையறிந்திலன். மகனுக்கும் களவுத்தொழிலைக் கற்பிக்கக் கருதிய தந்தை ஒருநாள் அவனை யழைத்துக்கொண்டு ஒரு மாந்தோப்புக்குச் சென்றனன். மகனை ஓரிடத்தில் காவலாக நிறுத்தி 'யாராவது தென்பட்டால் ஓடிவந்து என்னிடம் சொல்லு' என்று கூறித் தான் காய்களையும் கனிகளையும் திருடிக் கொண்டிருக்கிறான். இடையிடையே மகனை நோக்கி 'பையா! யாராவது தென்படுகிறார்களா?' என்று கேட்கிறான். அதற்கு மகன் என்ன சொல்லுகிறானென்றால், 'மனிதர் யாரும் தென்படவில்லை' என்றே பதில் சொல்லி வருகிறான். 'யாரும் தென்படவில்லை' என்று சொல்லவேண்டியிருக்க 'மனிதர் யாரும் தென்படவில்லை' என்று சொல்லி வருகிற பையனுடைய கருத்தை அறியமாட்டாத தகப்பன் 'பயலே! ஆடும் மாடும் தென்படுவதாகச் சொல்லுகிறாயோ?' என்று சீறிவிழுந்தான். அப்போது அப்பயல் கைகூப்பிக் கொண்டு "அப்பா! எங்கும் நிறைந்த கடவுள் தென்பட்டுக் கொண்டேயிருப்பதனால் 'மனிதர் யாரும் தென்படவில்லை' என்றேன்"—என்றான். அதுகேட்ட தந்தை திருடின காய்கனிகளை யெறிந்து விட்டு மகனை ஆசிரியனாகக்கொண்டு பக்தனாகி வாழ்ந்து வந்தான்.

## 23. ஸத்ஸம்ப்ரதாயார்த்த ஸாரமிதுவே

ஸ்ரீவசனபூஷண திவ்ய சாஸ்த்ரத்தில் 'ப்ராப்தாவும் ப்ராபகனும் ப்ராப்திக்கு உகப்பானும் அவனே' என்பது ஒரு சூர்ணை. அர்த்த பஞ்சகத்தைத்தெரிவிக்கின்ற பகவச்சாஸ்த்ர ச்லோகத்தில் 'ப்ராப்யஸ்ய ப்ரஹ்மணோ ரூபம் ப்ராப்துச்ச ப்ரத்யகாத்மந:' என்கிற முதலடியினால் பரமாத்மாவை ப்ராப்யனாகவும், ஜீவாத்மாவை ப்ராப்தாவாகவும் ஸ்பஷ்டமாகச் சொல்லியிருக்க, பரமபுருஷனையே ப்ராப்தாவாகச் சொல்லுவது தகுமோ? ப்ராப்திக்கு உகப்பவன் ப்ராப்தாவாகவேணுமே யொழிய ப்ராப்யனாகவொண்ணாது. ஆகவே ப்ராப்யனான பரமபுருஷனை ப்ராப்திக்கு உகப்பவனாகச் சொல்லுவதும் அஸம்பாவிதமாகும். ப்ராபகன் அவனே என்பதொன்று ஸமஞ்ஜஸமாகுமே யொழிய 'ப்ராப்தாவும் அவனே; ப்ராப்திக்கு உகப்பானுமவனே' என்கிற இவ்விரண்டு வார்த்தைகள் ஸமஞ்ஜஸமாகுமோவென்று சிலர்

சங்கிக்கக்கூடும். இங்குத் தத்துவம் கேண்மின். இது மிகவிரிவாக உபபாதிக்கப்பட வேண்டிய விஷயம். மணவாளமாமுனிகள் வ்யாக்யானத்தில் அவகாஹிக்க இல்லாதார்க்கு இங்கு ஸாரமாக தெரிவிக்கலாகிறது. அர்த்த பஞ்சகத்தில் ஜீவாத்மாவை ப்ராப்தாவாகச் சொல்லியிருப்பது உண்மை. உபநிஷத்தில் 'ப்ரஹ்மவித் ஆப்நோதி பரம்' என்று ஓதியிருப்பதும் உள்ளது. குடிநீரை ஒருமுறைக்குப் பலமுறை வடிக்கட்டி உபயோகம் கொள்ளுமாபோலே சாஸ்த்ரார்த்தங்களை வடிக்கட்டிக் கொள்ளுமளவில் "ஜீவாத்மா ப்ராப்தாவல்லன், பரமபுருஷனே ப்ராப்தா' என்று தேறுவதாக ஸ்ரீபாஷ்யகாரர் ஸ்பஷ்டமாக ஸாதித்தருளுகிறார். [எங்கே என்னில்] ஸ்ரீபாஷ்யே சரமஸூத்ர பாஷ்யத்தில் 'பரமபுருஷ: அத்யர்த்தப்ரியம் ஞாநிநம் லப்த்வா' என்கிற ஸ்ரீஸூக்தி காண்க. இதில் ஜீவாத்மலாபம் பரமாத்மாவிற்கே பேறு என்பது ஸுஸ்பஷ்டமாக காட்டப்பட்டதன்றோ. 'ப்ராப்திக்கு உகப்பானும் அவனே' என்பதை ஆளவந்தார் 'கதாஹம் ஐகாந்திக நித்ய கிங்கர: ப்ரஹர்ஷயிஷ்யாமி' என்கிற ஸ்ரீஸூக்தியினால் தெளிவித்தருளினார். இதில் [ப்ரஹர்ஷயிஷ்யாமி] என்கிற க்ரியாபதம் ஜீவநாடி ஆனது. 'எம்பெருமானுக்கு ஸேவைபண்ணி நான் எப்போது உகக்கப்போகிறேன்' என்னாமல் 'அவனை எப்போது உகப்பிக்கப் போகிறேன்' என்று கூறியது நுட்பமாகக் குறிக்கொள்ளத்தக்கது. ஆக 'ப்ராப்தாவும் ப்ராபகனும், ப்ராப்திக்கு உகப்பானும் அவனே' என்கிற ஸ்ரீவசனபூஷண திவ்யஸூக்தி ஸத்ஸம்ப்ரதாய ஸாரார்த்தம் என்பதாயிற்று:

## 24. அரும்பதவுரைக் கதையொன்று

பட்டர் திருவோலக்கத்துக்குப் பலகாலும் சாஸ்திரியாயிருப்பானொரு ப்ராஹ்மணன் சென்றுடி யிருப்பானாய் அவனைக்கண்டால் பட்டரும் 'வந்தாயோ போனாயோ' என்று ஸாமான்யேந வ்யவஹரித்தருளிச்செய்வர்; ஒரு ஸ்ரீவைஷ்ணவர் பலகாலும் ஸேவிக்க எழுந்தருளுவர்; அவரைக்கண்டால் மிகவும் க்ருபைபண்ணி ஆதரித்துக்கொண்டெழுந்தருளி யிருப்பர்; இத்தைப் பலகாலும் கண்டிருப்பாரொருவர் பட்டரை வந்து ஸேவித்து, 'ஸ்வாமிந்! தேவரீர் திருவோலக்கத்துக்கு வருகிற சாஸ்த்ரீ ப்ரஸித்தனாயிருக்கிறவன், அவன் வந்தால் ஸாமான்யமாக வ்யவஹரித்தருளுகிறது; ஒருஸாது ஸ்ரீவைஷ்ணவர் வந்தாரென்றால், அவரை மிகவும் ப்ரதிபத்தி பண்ணியருளுகிறது; இதிரண்டையும் எனக்கு அருளிச் செய்யவேணும்' என்ன, "ஆனால் அவர்களிரண்டுபேரு மெப்போதும்போலே நாளையும் வருவர்கள், அப்போது நீயுமெப்போதும் போலே பார்த்திரு, இரண்டுஞ் சொல்லுகிறோம்' என்ன, அவருமப்படியே பார்த்திருக்க, மற்றைநாள் விடிவோறே அந்த ப்ராமணன் ப்ரதமம் வந்து ஸேவிக்க, அவனை யெப்போதும்போலே வினவியருளி, 'நீர் ஆரைத்தான் பரதத்வமென்று நினைத்திருக்கிறது' என்ன, 'சிறிது ப்ரமாணங்கள் ப்ரஹ்மாவையும் இவர்களையும் பரதத்வமென்று சொல்லுகிறது, சிறிது ப்ரமாணங்கள் விஷ்ணுவை பரதத்வமென்று சொல்லுகிறது; ஆகையினாலே நம்மாலே நிச்சயிக்கப் போமோ' என்ன, 'நல்லது' என்றிருந்து, அவன் போனவாறே ஸ்ரீவைஷ்ணவரெழுந்தருளி ஸேவிக்க, அவரையும் க்ருபை செய்தருளி, 'தேவரீர் ஆரைத்தான் பரதத்வமென்றிருப்பீர்' என்ன, "தேவரீர், ச்ரிய:பதி நாராயணனே பரதத்வம் என்றருளிச்செய்யுமே, அதொழிய அடியேன் வேறொன்றறியேன்" என்ன, 'இன்னமுமுமக்குத் தஞ்சமாக நினைத்திருப்பதேது' என்ன 'எம்பெருமானார் திருவடிகளே உபாயோபேயமாம்' என்று ப்ரஸாதித்தருளுமே, அத்தையே தஞ்சமாக நினைத்திருப்பன்' என்ன, திருவுள்ள முகந்து, 'அபசாரத்தை க்ஷமித்தருள, திருமாளிகைக்கெழுந்தருள' என்றருளிச்செய்து, பார்த்திருந்தவரைப் பார்த்து, 'கண்டீரே யிருவர்க்கு முண்டான தாரதம்மியம், ஆகையாலே, இவரைவணங்கவோ, அவனை வணங்கவோ? இப்படியன்றோ ஸ்வரூப ஸ்திதி யிருந்தது' என்றருளிச்செய்ய, அவரும் க்ருதார்த்தராய்ப் போனார்.

**மேல் சித்ரகவிகள் இருபத்தைந்தாம் உபந்யாஸமாகக் கொள்ளத்தக்கன.**

ஸ்ரீரஸ்து

பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்

ஆழ்வாரெம்பெருமானுர் ஜீயர் திருவடிகளே சரணம்

# ஸ்ரீபெரும்பூதூரில் ஸ்ரீமத்பரமஹம்ஸ பரிவ்ராஜகாசார்ய

ஸத்யஸங்கல்ப பிருதாங்கித

**ஸ்ரீமந்நாராயண ராமாநுஜ ஜீயர் ஸ்வாமி**

*15—8—73 முதல் ஐந்து நாள் நடத்தும்*

**பகவத் ராமாநுஜ மஹா க்ரதுவைச் சார்ந்த அகில பாரதீய ஸ்ரீ வைஷ்ணவ ஸம்மேளனத்தின் உபக்ரமத்தில்**

ஸ்ரீகாஞ்சீ ப்ரதிவாதிபயங்கரம் **அண்ணங்கராசாரியார்**

*உபந்யஸித்த எம்பெருமானுர் ஸ்துதி ரூபமான*

சித்ர கவித்வ ச்லோகமிரண்டு

முதல் ச்லோகம். வைதிக ப்ரக்ரியையில் அமைந்தது.

ப்ரமாதீச ஸம்வத்ஸரே தக்ஷிணாயநே க்ரீஷ்மர்தௌ கர்க்கட மாஸே க்ருஷ்ணபக்ஷே ப்ரதமாயாம் திதௌ ஸௌம்ய வாஸரே சதபிஷங்நக்ஷத்ரே—என்பது வைதிக ஸங்கல்பமாதலால் இந்த ஸம்வத்ஸராதிகளெட்டையும் முத்ராலங்கார ரீதியில் அமைத்து எம்பெருமானுரைத் துதித்து விஜ்ஞாபித்த ச்லோகம் வருமாறு:—

ப்ரமாதீசபலாத்மநாம் குமதபஞ்ஜநே தக்ஷிண:
பவாத்மக நிதாக ஹ்ருத் சுசிபி: ஆஸ்திகைஸ்ஸேவித:,
ஸிதேதர ஹ்ருதாம் ரிபு: விஜயதே த்விதீயாச்யுத:
ஸௌம்ய வதந: பரச்சதபிஷக்ஸமோ பாஷ்யக்ருத்.

(கருத்துச் சுருக்கம்) ப்ரமம், ப்ரமாதம், விப்ரலிப்ஸை என்கிற தோஷங்கள் கொண்டு அஸ்த்திர புத்திகளான துர்வாதிகளின் மதங்களைக் கண்டிப்பதில் வல்லவர் எம்பெருமானுர் என்கிறது முதற்பாதம். வ்யாகரண சாஸ்த்ரத்தில் ''ஏகதேச விக்ருதம் அநந்யவத் பவதி'' என்றுள்ள ந்யாயப்படிக்கு (ப்ரமாதிச) என்பதில் ப்ரமாதீச ஸம்வத்ஸரம் காட்டப்பட்டது. பாதத்தின் முடிவில் 'தக்ஷிண:' என்பதனுலே தக்ஷிணாயநம் காட்டப்பட்டது. (பவாத்மக நிதாக ஹ்ருத்) ஸம்ஸார தாபத்தைப் போக்குபவர் எம்பெருமானுர். இதில் ''நிதாக'' என்கிற பதத்தினுல் க்ரீஷ்மருது தெரிவிக்கப்பட்டது. (சுசிபி: ஆஸ்திகை: ஸேவித:) த்ரிகரண சுத்தர்களான ஆஸ்திகர்களால் ஸேவிக்கப்பட்டவர் எம்பெருமானுரென்கை. வேதத்தில் ''சுக்ரச்ச சுசிச்ச க்ரைஷ்மா வ்ருதூ'' என்று ஓதியுள்ளபடி 'சுசி' என்பது ஆடி மாதத்தின் பெயராதலால் 'சுசுபி:' என்றவிடத்தில் கர்க்கட மாஸம் ஸூசிதம். (ஸிதேதர ஹ்ருதாம் ரிபு:) ''ஸிதமநஸம் தமவேஹி விஷ்ணுபக்தம்'' என்று ஸ்ரீவிஷ்ணுபுராணத்தில் சொன்னபடி ஸிதமநஸ்கராக இல்லாமல் அஸிதமநஸ்கராக இருக்குமவர்களால் அணுகத்தகாதவர் என்கை. 'ஸிதேதர' என்

றதனால் க்ருஷ்ணபக்ஷம் ஸூசிதம். (**த்விதீய அச்யுத:**) எம்பெருமானைப் போன்றவ ராதலால் இரண்டாவது எம்பெருமான் நம் ஸ்வாமி என்கை. ஸ்வாமிக்குத் திருக் கோட்டியூர் நம்பி சாத்தின எம்பெருமானார் என்ற திருநாமம் இப்பொருளதேயா கும். (ஸுஸௌம்ய வதந:) "சோராத துய்ய செய்ய முகச்சோதி வாழி! தூமுறுவல் வாழி!" என்கிற வாழி திருநாமப் படியே தூமுறுவல் கொண்ட திருமுகமுடையவர். இங்கு 'ஸௌம்ய' என்பதனால் புதவாரம் ஸூசிதம். (பரச்சதபிஷக் ஸம:) 'மருத்து வனாய் நின்ற மாமணிவண்ணனன்' செய்த காரியத்தை ஸ்வாமி பலநூறு மடங்காகச் செய்தவராதலால் பலபல மருத்துவர்களுக்கு ஒப்பானவர் ஸ்வாமி. இங்கு சதபிஷங் நக்ஷத்ரம் ஸூசிதம். (இப்படிப்பட்ட) பாஷ்யக்ருத் விஜயதே—நம் ஸ்ரீபாஷ்யகாரர் ஸர்வோத்துங்கராக விளங்கா நின்றார். ஆக இந்த ச்லோகததில் ஸம்வத்ஸரம், அயநம், ருது, மாஸம், பக்ஷம், திதி, வாரம், நக்ஷத்ரம் ஆகிய எட்டும் ஸூசிதங்களாயின.

(2) லௌகிக ரீதியில் வருடம் மாதம் தேதிகளின் லக்கங்களை வரிசையாக அமைத்து விஜ்ஞாபித்த சுலோகம். (1973ஆம் வருடம், 8ஆம் மாதம், 15ஆம் தேதி.)

ஏகாகீ குருராட் நவோத்தமக்ருதி ப்ரக்க்யாபிதோ தாரதீ:
பக்த்யுத்தேஜநஹேது ஸப்தகம் அத ஜ்ஞாநாதிமுக்ய த்ரயம்,
பக்தீரஷ்டவிதாச் ச பக்த நிவஹே ஸ்வீயோபதேசைர் திசந்
ஏகஸ்த்தாத்மமநா: ப்ரஸீதது குருந் பஞ்சாச்ரிதோ பாஷ்யக்ருத்.

(சுருக்கவுரை) [ஏகாகீ குருராட்] "தஸ்மிந் ராமாநுஜார்யே குருரிதி ச பதம் பாதி நாந்யத்ர" என்று முதலியாண்டான் அருளிச் செய்தபடி அத்விதீயரான குரவர் எம்பெருமானார். [நவோத்தம க்ருதீத்யாதி.] நவநிதிகள் நவரத்னங்கள் என்னும் படியான ஸ்ரீபாஷ்யம் முதலிய ஒன்பது திவ்யக்ரந்தங்களை யருளிச்செய்து அவற்றால் தம்முடைய ப்ரஜ்ஞா வைபவத்தை விளங்கச் செய்தவர். ஆக முதலடி யில் 1, 9 லக்கங்களாயின. [பக்த்யுத்தேஜந ஹேது ஸப்தகம்] ஸ்ரீபாஷ்யத்தில் பக்தி ஹேதுவாக அருளிச்செய்யப்பட்ட விவேக, விமோக, அப்யாஸ, க்ரியா, கல்யாண, அநவஸாத, அநுத்தர்ஷங்களாகிற ஏழையும் (இதற்கு மேலே அந்வயம்) (அத ஜ்ஞாநாதி முக்ய த்ரயம்) ஞானபக்தி விரக்திகளான மூன்றையும் (அஷ்டவிதா: பக்தீச்ச) "மத்பக்த ஜந வாத்ஸல்யம்" என்று தொடங்கி பகவான் அருளிச் செய்த அஷ்டவித பக்தியையும் (பக்த நிவஹே ஸ்வீயோபதேசை: திசந்) (ஆக இவற்றைத்) தமது உபதேசங்களினால் சிஷ்யர்களுக்கு உண்டாக்கினவர் ஸ்வாமி. இதில் 7, 3, 8 ஆகிய லக்கங்கள் ஆயின. வருஷமும் மாதமும் ஸூசிதங்களாயின. (ஏகஸ்த்தாத்ம மநா:) "நைஷா பச்யதி ராக்ஷஸ்ய: நேமாந் புஷ்பபலத்ருமாந், ஏகஸ்த்த ஹ்ருதயா நூநம் ராமமேவாநுபச்யதி" என்று அசோகவனத்தில் திருவடி சொன்னபடியே ஏகஸ்த்த ஹ்ருதயையாக விருந்த பிராட்டியைப் போலவே ஐகாந்திகமான திரு வுள்ள முடையவர் ஸ்வாமி. (குருந் பஞ்ச ஆச்ரித:) "பஞ்சாசார்ய பதாச்ரித:" என்று வடுகநம்பி அருளிச்செய்தபடியே பெரிய நம்பி, திருமலை நம்பி, திருக்கோட்டி யூர் நம்பி, திருமாலையாண்டான், திருவரங்கப் பெருமாளரையர் ஆகிய ஆசார்யர் கள் ஐவரை அடிபணிந்து உய்ந்தவர் ஸ்வாமி. இதில் 1, 5 என்கிற தேதி லக்கங்கள் ஸூசிதம். ஆக இப்படிப்பட்ட (பாஷ்யக்ருத் ப்ரஸீதது) எம்பெருமானார் திரு வுள்ள முகந்தருள வேணும்.

இத்தம் அண்ணங்கராசார்யோதீரித ச்லோகயுக்மத:
ப்ரஸீதந்து ஸதாசார்யா: ப்ரஹ்ருஷ்யந்து ஸபாஸத:

எம்பெருமானார் திருவடிகளே சரணம்.

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

ஆழ்வாரெம்பெருமானுர் ஜீயர் திருவடிகளே சரணம்

*15—8—73ல் தொடங்கிய அகிலபாரதீய ஸ்ரீவைஷ்ணவ வித்வத்ஸம்மேளனத்தில் ஸ்ரீகாஞ்சி ப்ரதிவாதிபயங்கரம்* **அண்ணங்கராசாரியார்** *உபங்யஸித்த ஸ்ரீமத் பரமஹம்ஸ பரிவ்ராஜகாசார்ய ஸத்யஸங்கல்ப பிருதாங்கித* ***ஸ்ரீமந் நாராயண ராமாநுஜ ஜீயர் ஸ்வாமியின் புகழ்மாலை*** *யடங்கிய* ***ச்லோகமிரண்டு.***

(1) **ஸ்ரீ**ராமாநுஜ ஸம்ப்ரதாய ஸரணிப்ரக்க்யாபநே தீக்ஷிதாந்
**மந்**தாநாம் பவஸாகரே நிபததாம் ஸந்தாரணைகவ்ரதாந்
**நா**நாஸத்க்ருதிவர்க்கஸந்தத ஸமாரம்பைகஸக்தாசயாந்
**ரா**காந்தாந் மஹதோ ஜநாநபி வசீகர்த்தும் க்ஷணேதக்ஷிணுந்.

(2) **ய**த்நாநாம் ப்ரயுதைர்விதாதுமபிசாசக்யாநி க்ருத்யாநி-ஷண்
**ணு**டமாத்ரமிதாவகாச கலயா ஸம்பாத்ய லப்தப்ரதாந்
**சா**ரித்ரேண சுசோபநேநஸுரபீந் ஸர்வத்ர சிஷ்யாஞ்சிதாந்
**ஆர்யாந் ஸ்ரீயதிசேகராந் திசிதிசி ப்ரேக்ஷேமஹீஹாநிசம்.**

எட்டு பாதமுள்ள இவ்விரண்டு ச்லோகங்களில் ஒன்றுமுதல் ஏழு பதாங்களில் முதல் எழுத்துக்களைமட்டும், எட்டாவது பாதத்தைப் பூர்த்தியாகவும் வாசித்தால் ''ஸ்ரீமந்நாராயணுசாரியார், ஸ்ரீயதிசேகராந் திசி திசி ப்ரேக்ஷே மஹி இஹ அநிசம்'' என்கிற வாக்கியம் தேறும். இதுதான் இங்கு சித்ரகவித்வம் என்பது.

கருத்துச் சுருக்கம் வருமாறு:—

(1) எம்பெருமானுர் தரிசனத்தை எங்கும் பரவச் செய்வதிலேயே முழு நோக்குடையவரும்.

(2) ஸம்ஸார ஸாகரத்தில் மூழ்கிக்கிடப்பவர்களை கரையேற்றுவதிலேயே கருத்துடையவரும்.

(3) பலவகைப்பட்ட நற்காரியங்களைச் செய்வதிலேயே திருவுள்ளம் ஊன்றியவரும்.

(4) லௌகிக வழியில் ஊன்றியுள்ள பெரியார்களையும் ஒரு நொடிப்பொழுதில், ஈடுபடுத்திக்கொள்ளவல்ல ஸாமர்த்தியம் உடையவரும்.

(5) கோடிக்கணககான முயற்சிகளை செய்து நிறைவேற்றவேண்டிய மிகப் பெரிய காரியங்களையும், அவலீலையாகச் செய்து, புகழ் பெற்றவரும்,

(6) நல்லொழுக்கங்கள் நிரம்பி, அதன் நறுமணம் வீசப்பெற்றவரும்.

(7) எங்கும் சிஷ்யர்களால் பூஜிக்கப்பட்டவருமான, ஸ்ரீமந் நாராயண ராமாநுஜ ஜீயர் ஸ்வாமிகளை இப்பூதலத்தில் எத்திசைகளிலும், எக்காலத்திலும் ஸேவிக்கக் கடவோம்.

ஆழ்வாரெம்பெருமானுர் ஜீயர் திருவடிகளே சரணம்

# ஸ்ரீபெரும்பூதூரில் மஹா க்ரதுவின் நிகழ்ச்சிகள்

ஏற்கனவே வெளியிட்டிருந்தபடி ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி ஸ்ரீமந் நாராயண ராமாநுஜ ஜீயர் ஸ்வாமிகள் ஸ்ரீபெரும்பூதூரில் 15—8—73 தேதி முதல் 5 நாட்களில் நடத்த ஸங்கல்பித்திருந்த பகவத்ராமாநுஜ மஹா க்ரதுவும் ஜடீபந்தந ஸம்ப்ரோக்ஷணமும் அகிலபாரதீய ஸ்ரீவைஷ்ணவ வித்வத்ஸம்மேளனமும், லோகோத்தரமும் பரமவிலக்ஷணமுமான முறையில் நடைபெற்றன. நமது தென்னாட்டிலுள்ள ஸ்ரீவைஷ்ணவர்கள் பெரும்பாலும் எழுந்தருளி அருளிச்செயல் கோஷ்டியையும் வேதபாராயண கோஷ்டியையும் உபந்யாஸ கோஷ்டியையும் அலங்கரித்துச் சிறப்பித்தபடியினால் யாவரும் ஸாக்ஷாத்தாகவே அநுபவித்துணர்ந்த செய்திகளை இங்கு நாம் விவரிக்க வேணுமோ? நமது தெலுங்கு பாஷைப் பத்ரிகையிலும் ஸம்ஸ்க்ருத பாஷைப் பத்ரிகையான வைதிகமநோஹராவிலும் விவரிப்போம். ஸ்ரீபெரும்பூதூர் முழுவதும் ஸ்ரீவைஷ்ணவ ப்ருந்தமயமாகவும் பக்தபாகவத ப்ருந்த நிபிடமாகவுமிருந்ததென்பது அதிசயோக்தியன்று. இப்படிப்பட்ட காட்சி முன்பொருநாளும் இருந்ததுமில்லை, இனி இருக்கப்போவதுமில்லை. ஸ்ரீ கேசவப்பெருமாளும் எம்பெருமானாரும் ஐந்து நாளும் திருவவதார மண்டபத்தி லெழுந்தருளியிருந்து, அந்த மஹா மண்டபத்திலேயே திவ்யப்ரபந்த ஸேவையும் வேதபாராயண கோஷ்டியும் வித்வத்ஸபையும் நடைபெற்றன. உபந்யாஸகர்கள் விசேஷமாகவே ஸேவை ஸாதித்தபடியால் நூற்றுக்கால் மண்டபம் தவிர மற்றும் சில விடங்களிலும் உபந்யாஸ மேடைகள் ஏற்படுத்தப்பட்டிருந்தன. ஆனாலும் நூற்றுக்கால் மண்டப ஸதஸ்ஸை முக்கியமாகக் கருதப்பட்டிருந்தது.

ஏற்கனவே வெளியிட்டிருந்தபடி, 1. உபநிஷத்தினம், 2. ஸ்ரீபாஷ்யதினம், 3. கீதாபாஷ்யதினம், 4. பகவத்விஷயதினம், 5. பூர்வாசார்ய ஸ்ரீஸூக்தி அநுபவதினம் என்று உபன்யாஸங்கள் நிகழ்ந்தன. ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி திருமலை திருப்பதி பெரிய ஜீயர் ஸ்வாமியும் (அவ்விடத்து) சின்ன ஜீயர் ஸ்வாமியும் உள்ளூரில் யதிராஜ ஜீயர் ஸ்வாமியும் எம்பார் ஜீயர் ஸ்வாமியும் ஒவ்வொரு ஸந்தர்ப்பத்திலும் எழுந்தருளியிருந்து கோஷ்டியை ஸநாதமாக்கி யருளினபடியால் இம் மஹோத்ஸவத்தின் காட்சி மிக அற்புதமாயிருந்தது. (விசேஷித்து விஜ்ஞாபிக்கிறேன்) ஸ்ரீபாஷ்யகார தேவஸ்தான தர்மகர்த்தாவான ஸ்ரீமத்பரமஹம்ஸேத்யாதி யதிராஜ ஜீயர் மடாதிபதி பேரருளாள ராமாநுஜ ஜீயர் ஸ்வாமிகள் விசாலமான திருவுள்ளம் கொண்டு ஸகல ஏற்பாடுகளையும் மிக ஆச்சரியமாகவும் புனிதமாகவும் செய்தருளியிருந்தது இவ்வதிசயங்களுக்கெல்லாம் சிகரமாயிருந்தது.

1. உபநிஷதநுபவதினத்தில் ஸ்ரீமதுபயவே. நியாயவேதாந்த வித்வான் திருமலை அனந்தாண்பிள்ளை அக்காரக்கனி ஸம்பத்குமாராசார்ய ஸ்வாமி தலைமை வஹித்தார். 2. ஸ்ரீபாஷ்யாநுபவதினத்தில் ஸ்ரீமதுபயவே. நியாய வேதாந்த வித்வான் வாகம்ருதவர்ஷி வேளுக்குடி வரதாசார்ய ஸ்வாமி தலைமை வஹித்தார். 3. கீதாபாஷ்யாநுபவதினத்தில் ஸ்ரீமதுபயவே. வாவதூக ஸார்வபௌமர் ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சன பத்ராதிபர் (புத்தூர் வக்கீல்) S. க்ருஷ்ணஸ்வாமி ஐயங்கார் ஸ்வாமி தலைமை வஹித்தார். 4. பகவத் விஷயாநுபவதினத்தில் ஸ்ரீமதுபயவே. வியாகரண வேதாந்த வித்வான் ஸத்ஸம்ப்ரதாய ஸாரஜ்ஞர். திருமலை அனந்தாண்பிள்ளை (கோயில்) சதாபிஷேகம் கோவிந்த நரஸிம்ஹாசார்ய ஸ்வாமி தலைமை வஹித்தார். ஐந்தாம் நாள் பூர்வாசார்ய ஸ்ரீஸூக்த்யநுபவ தினமாகக் குறிப்பிடப்பெற்றிருந்தது. அன்று, ஸன்னிதி கார்யக்ரமங்களிலேயே அவகாசம் பூர்த்தியாகச் சென்றுவிட்டபடியால் கீழ் நான்கு தினங்களிற்போலே ஸதஸ்ஸு என்கிற முறையில் நடத்த இயலவில்லை.

கூடியிருந்த வித்வான்கள் ஆங்காங்கு பரஸ்பர ஸம்பாஷணைகளைச் செய்து சாஸ்த்ரார்த்தங்களை வெளியிட வேணுமென்று ஸ்ரீ ஜீயர் ஸ்வாமி நியமித்திருந்தபடியால் ஏழெட்டிடங்களில் அங்ஙனே நடைபெற்றது. திருவடி ஸன்னிதியுபந்யாஸ மேடையில் அடியேனுக்கும் ஸ்ரீமதுபயவே. மதுராந்தகம் ஸ்வாமிக்கும் நடந்த ஸம்பாஷணை உலகுக்கெல்லாம் தெரியவேண்டுமென்று அஃது இங்கே ஸாரமாக வெளியிடப்படுகின்றது. முன் நான்கு தினங்களில் ஸதஸ்ஸில் தலைமை வகித்த பஹான்களும் இந்த ஸதஸ்ஸில் ப்ரஸந்நராயிருந்தனர். தேவஸ்தான தர்மகர்த்தாவான ஜீயர் ஸ்வாமியும் எழுந்தருளியிருந்தனர். ஏறக்குறைய இருநூறு ஸ்வாமிகளும் வித்வான்களான இருபது ஸ்வாமிகளும் அப்போது அங்கு எழுந்தருளியிருந்தார்கள்.

## அடியேனுக்கும் மதுராந்தகம் ஸ்வாமிக்கும் நடந்த ஸம்பாஷணை

(சிறு குறிப்பு) ஸ்ரீமதுபயவே. மதுராந்தகம் வீரராகவாசாரியர் ஸ்வாமி "உமயா ஸார்த்தமீசாந:" என்னுமாபோலே தேவியாரோடும் தம்மிடம் வாசிக்கும் சில மாணுக்கர்களோடும் முன்னுடியே ஸ்ரீபெரும்பூதூர்க்கு வந்து சேர்ந்திருந்தார். நித்யமும் ஸதஸ்ஸில் ஸேவை ஸாதித்துக் கொண்டிருந்தாலும் அப்போது வார்த்தையாட அவகாசமின்மையால் (19—8—73) இன்றுதான் குசலப்ரச்நாதிகளுடன் ஸம்பாஷிக்க அவகாசம் வாய்த்தது. அப்போது நடந்த ஸம்பாஷணை ஆதியோடந்தமாக எழுதப்படுகின்றது.

—ஸம்பாஷணையின் தொடக்கம்—

**அடியேன்**—ஸ்வாமிந்! எல்லாம் பாங்கென்று நம்புகிறேன். இவ்விடத்தில் தேவரீருடைய ஸேவை கிடைக்காதென்று எண்ணியிருந்தேன். க்ருபையுடன் ஸேவை ஸாதித்தது பரமபாக்யம். "அநாஹூதோ த்வயம் கச்சேத்" என்கிற முறையில் எழுந்தருளினபடியோ, ஆஹ்வானமுண்டோ?

**மதுராந்தகர்**—அநாஹூதனுகவே வருவதாகத் தானிருந்தேன். ஸ்ரீமந் நாராயண ஜீயர் ஸ்வாமியின் பரமக்ருபாகனமான ஆஹ்வானமும் கிடைத்தது. இங்கு நித்யம் ஒருமணிகாலம் வெளி வீதிகளில் ஸ்ரீபாஷ்யம் சொல்லும்படியாக ஜீயர் ஸ்வாமி நியமித்து வரவழைத்திருக்கிறார். அதனுல் வந்திருக்கிறேன். கீழ் நாலு நாள்களில் ஸ்ரீ பாஷ்யோபந்யாஸம் என்று பெயரிட்டு ஏதோ சொல்லி வருகிறேன். அடியேன் ஊரில் புறப்படும்போது பலபேர்கள் இங்குச்செல்ல வேண்டாவென்று நிரோதித்தார்கள். "புத்தூர் வக்கீல் ஸ்வாமி வேளுக்குடி ஸ்வாமி காஞ்சீபுரம் ஸ்வாமி போல்வார் அங்கு அவச்யம் எழுந்தருளக் கூடுமாகையால் அவர்கள் தேவரீரைப்பிடித்துக்கொண்டு, சில கேள்விகள் கேட்டுத் திக்குமுக்கலாடச் செய்துவிடுவார்கள்" என்று சொல்லி 'அங்குப் போக வேண்டா' என்று தடுத்தார்கள். 'எல்லாரும் ஸஹ்ருதய ஸஹ்ருந்மணிகளாகையாலே எனக்கு ஒரு பரிபவமும்நேராது' என்று அவர்களுக்குச் சொல்லிவிட்டுத் துணிந்தே வந்திருக்கிறேன். எல்லாரும் பரமப்ரீதியோடிருப்பதாலும் செவிக்

குணவு விசேஷமாகக் கிடைத்து வருவதாலும் ஸந்துஷ்டனாகவே இருந்து வருகிறேன்.

[இனி எம்மிருவர்க்கும் (அண்) (மது) என்று ஸங்கேதம்.]

(அண்) நான் தேவரீர்க்கனுப்பிவரும் பத்ரிகைகளோ ஸஞ்சிகைகளோ நூல்களோ எல்லாம் தவறாது கிடைத்துவருகின்றனவன்றோ? ஓரக்ஷரம் விடாமல் பூர்த்தியாக வாசிப்பது முண்டன்றோ?

(மது) எதுவும் கிடைக்கத் தவறினதில்லை. வாசிப்பதில் ஓரக்ஷரமும் விடுவதில்லை. தேவரீர் பலபல ஸ்ரீஸூக்திகளில் ஸூர்க்கத்திப் பரீக்ஷை கொடுத்திருப்பதாகக் கேட்டிருக்கிறேன். அடியேனும் தேவரீருடைய வடமொழி தென்மொழி நூல்களனைத்திலும் ஸூர்க்கத்திப் பரீக்ஷை கொடுக்கத் தடையில்லை. ஏதேனுமொரு விஷயத்தை ப்ரஸ்தாவித்தால் அது தேவரீருடைய இன்ன நூலில் இன்ன பக்கத்திலுள்ளதென்று உடனே சொல்லுவேன். பக்கலக்கம் மட்டுமன்று, வரிலக்கமும் சொல்லுவேன். வேணுமானால் பரீக்ஷித்துப்பார்க்க.

(அண்) இது அடியேன் அறியாததன்று; நன்கறிந்ததே. அடிக்கடி நேரும் ஸல்லாபங்களில் இந்த சக்தி விசேஷத்தை ஸாக்ஷாத்கரித்துமிருக்கிறேனே. இப்போது பரீக்ஷிக்க ஆவச்யகதை ஒன்றுமில்லை. அடியேன் கேட்கிற கேள்விகளுக்கு ஆர்ஜவத்துடன் விடை தந்தருளவேணும். தேவரீரிடத்தில் விசிஷ்ய ப்ராமாணிகத்வ ப்ரதிபத்தி அடியேனுக்குண்டு. கேள்விகளை அடைவே கேட்கிறேன். விடை தந்தருளவேணும். தேவரீர் சிலவாண்டுகட்குமுன் ஸம்ப்ரதாயஸுதா என்கிற சுவடியை வெளியிட்டவுடனே அதற்கு ப்ரத்யக்ஷர கண்டனமாக ஸம்ப்ரதாய ஸாம்ராஜ்ய மென்கிற நூலை அடியேன் ஒரு வாரத்திற்குள் வெளியிட்டது உண்டா இல்லையா? அதற்கு மறுப்பாக தேவரீர் ஓரக்ஷரமாவது எழுதினதுண்டா? உள்ளபடி ஸாதிக்கவேணும்.

(மது) உள்ளபடி என்று விசேஷிக்க வேண்டா; "அந்ருதம் நோக்த பூர்வம் மே ந ச வக்ஷ்யே கதாசந."

(அண்) ஸ்ரீராமாநுஜன் 299-ல் புநர்வஸு பர்யவேக்ஷணம் என்ற சீர்ஷிகையில் "மதுராந்தக வித்வானுக்கு மதுரமான விண்ணப்பம்" என்று மகுடமிட்டு விரிவாக எழுதியிருந்தேனே, அதைக் கடாக்ஷித்திருக்குமே. கார்த்திகை மாதத்தில் நம்பெருமாள் ஸன்னிதியிலிருந்து அடியேன் திரும்பினவுடனே தேவரீருக்குச் சிரோபூஷணமாக "பரவாதி சிரோபூஷா" என்கிற ஸஞ்சிகையை அச்சிட்டு அனுப்பியிருந்தேனே. அதையும் கடாக்ஷித்திருக்குமே. அதில் தேவரீரை நோக்கிச் சில கேள்விகள் கேட்டு இவற்றுக்கு தேவரீர் ஸமாதானம் எழுதி வெளியிட்டால் இதுவரை நான் எழுதி வெளியிட்டிருக்கும் புத்தகங்களை யெல்லாம் கிழித்தெறிந்து விட்டு அஜ்ஞாதவாஸம் பண்ணக் கடவேன்" என்று எழுதியிருந்தேனே. அதைப் புநர்வஸு பர்யவேக்ஷணத்திலும் உதாஹரித்து அந்த ப்ரதிஜ்ஞையைப் புநருத்தாரம் செய்திருக்கிறேனே. இதற்கெல்லாம் ஏதேனும் பதில் எழுதினதுண்டோ?

(மது) எழுதினதுண்டோ வென்று அடியேனைக் கேட்கவேண்டுமோ? யதி ஸ்யாத் உபலப்யேத வென்பது தேவரீர்க்குத் தெரியாததோ? "இந்த்ரோ மஹேந்த்ரஸ் ஸுரநாயகோ வா த்ராதும் ந சக்தா: யுதி ராமவத்யம்" என்ற ஸ்ரீராமாயண ச்லோகத்தின் கணக்கிலேயன்றோ நிகழ்ச்சியுள்ளது! தேவரீரிடமிருந்து கிடைக்கிற ஸ்ரீ ஸூக்திகளை ஸேவித்து ஆனந்திப்பது தவிர வேறொன்றும் நானறியேன்.

(அண்) தேவரீரிடமிருந்து அடியேன் முக்கியமாக எதிர்பார்த்ததை இன்று இங்குக் கூடியுள்ள (தேவரீரை ஏற்கனவே கேட்டிருந்த விஷயம்) நூற்றுக் கணக்கான வித்வான்களின் எதிரே விஜ்ஞாபிக்கிறேன். அதாவது, "*கர்த்தா சாஸ்த்ரார்த்தவத்வாத்* என்கிறபடியே ஜீவனுக்கு கர்த்ருத்வம் ப்ராமாணிகமே யாகிலும் இது பராதீனமுமாய் அல்பவிஷயமுமாய் ப்ரதிஹதி யோக்யமுமாயிருக்கும். ஆகையால் இவன்தான் உபாயாநுஷ்டானம் பண்ணிற்றும் *வரத! தவ கலு ப்ரஸாதாத்ருதே சரணமிதி வசோபி மே நோதியாத்* என்றுசொல்லுகிறபடியே அவன் கடாக்ஷமடியாக வருகையால் அவனாலே ப்ரேரிதனாய், அவன் ஸஹகரியாதபோது நீட்ட முடக்கமாட்டாதே அவன் கொடுத்த கரணகளேபரங்களைக் கொண்டு அவன் காட்டின வுபாயத்தை அவன் துணைசெய்ய அநுஷ்டித்து அவனால் கொடுக்கப்படுகிற பலத்துக்கு சாதகம் போலே அண்ணுந்திருக்கிற விவனை ஸ்வாதீந ஸர்வ விஷய அப்ரதிஹத கர்த்ருத்வ முடையவனோடே துல்யமாக இரண்டாம் ஸித்தோபாயமாக வெண்ணுகை விவேகியான முமுக்ஷுவுக்கு உசிதமன்று... *என்னுணர்வினுள்ளே யிருத்தினேன் அதுவுமவனதின்னருளே யென்றும் *இசைவித்தென்னையுன் தாளிணைக் கீழிருத்து மம்மானே*யென்றுஞ் சொல்லுகிறபடியே உபாய பூதனை அவன் செய்விக்கச் செய்கிற வ்யாஜமாத்ரத்தை அவனோடொக்க உபாயமாக வெண்ணுகை உசிதமன்றென்று ஏகசப்தத்துக்கு தாத்பர்யம்.' இந்த ஸ்ரீ ஸூக்திகள் ரஹஸ்யத்ரய ஸாரத்தில் சரம ச்லோகாதிகாரத்தில் தேசிகனால் எழுதப்பட்டவை. இவற்றை ஸம்ஸ்க்ருதத்தில் மொழி பெயர்க்கக்கடவீர்.

தமிழில் மொழிபெயர்க்கவேண்டிய ஸம்ஸ்க்ருத ஸ்ரீஸூக்தியாவது: ஆளவந்தார் அருளிச்செய்த கீதார்த்த ஸங்க்ரஹத்தில் 'நிஜகர்மாதி பக்த்யந்தம் குர்யாத் ப்ரீத்யைவ காரித:, உபாயதாம் பரித்யஜ்ய ந்யஸ்யேத் தேவே து தாம் அபீ:' என்கிற (31) ச்லோகத்தின் ரக்ஷையில் 'முக்தவ்யாபார ந்யாயேந ஸ்வயம் ஸ்வாதுத்வாத் க்ஷணிகஸ்ய காலந்தரபாவிபலஸாதநத்வாநுபபத்திதர்சநாச்ச நாஸ்ய ஸ்வவ்யாபாரே மோக்ஷோபாயதா புத்திரபி ஸ்யாதிதி பாவ:. அத: தைஸ் தைராராதிதோ பகவாநேவ ஹி ஸர்வத்ரோபாய:' என்றிருப்பது. இதனோடுகூட *த்வய்யேகஸ்மிந்நபி விஜஹதோ முக்தவத் ஸாதநத்வம்* என்கிற ந்யாஸதிலக ஸ்ரீ ஸூக்தியும் சேர்த்துக் கொள்வது. இந்த ஸம்ஸ்க்ருத ஸ்ரீ ஸூக்திகளைத் தமிழில் மொழிபெயர்க்க வேண்டியது. க்ருபையுடன் இந்த வேண்டுகோளை நிறைவேற்றுக." என்று ப்ரார்த்தித்திருந்தேனே, அந்த ப்ரார்த்தனையை நிறைவேற்றினதுண்டா?

(மது) தேவரீர் இங்ஙனே கோரியிருந்தது உண்மையே. மொழிபெயர்ப்பு மார்க்கத்தில் அடியேனுக்கு பரிசயலேசமுமில்லை. மேலும் மொழிபெயர்த்தாக வேண்டிய ஆவச்யகதையும் தோன்றவில்லை. அடியேன் கருடபுரம் ஸ்வாமி ஸந்நிதியில் காலக்ஷேபம் செய்தவன். அந்த ஸ்வாமி பரமப்ராமாணிகர். பாபபீரு.

மனம்போனபடி எதையும் ஸாதிப்பவரல்லர். தேவரீர் எடுத்துக்காட்டியிருக்கிற தேசிக ஸூக்திகளை அந்த ஸ்வாமி ஸன்னிதியில் ஸேவித்தபோது இதெல்லாம் ஸ்ரீவசனபூஷண திவ்யார்த்த பரிமள ப்ரவாஹங்கள் என்று ஸாதிக்கக் கேட்டிருக்கிறேன். "த்வய்யேகஸ்மிந்நபி விஜஹதோ முக்தவத் ஸாதநத்வம்" என்கிற ந்யாஸதிலக ச்லோகத்தின் சுவைமிக்க பொருளை அந்த ஸ்வாமி பலகால் வ்யாக்யானித்தருளக் கேட்டிருக்கிறேன். "த்வயி ஏகஸ்மிந்நபி ஸாதநத்வம் விஜஹத:" என்ற சொல்லழகில் அந்த ஸ்வாமி யுருகிப் பேசுவர். கர்மஜ்ஞாநாதிகளில் உபாயத்வ புத்தியைத்தள்ளி எம்பெருமான் பக்கலிலே அதை அநுஸந்திக்கும்படி ப்ரமாணகதியுள்ளது. "த்வமேவ உபாயபூதோ மே பவ இதி ப்ரார்த்தநாமதி: சரணாகதிரித்யுக்தா" என்கிற தர்மி க்ராஹக ப்ரமாண ஸித்தமாய் எம்பெருமானிடத்திலே உண்மையாக வுள்ளதான உபாயத்வத்தையும் ஸஹியாதார் 'அது உபாயம், இது உபாயம், உது உபாயம்' என்று சொன்னால் இதைத் தேசிகன் திருவுள்ளம் ஸஹிக்கவே மாட்டாதென்று அடிக்கடி கருடபுரம் ஸ்வாமி ஸாதிக்கக் கேட்டிருக்கிறேன். "உபாய:ஸ்வப்ராப்தே:" என்று தொடங்கி "நிதாநம் தத்ராபி ஸ்வயமகிலநிர்மாண நிபுண:" என்றும் "ஸ்வப்ராப்த: ஸ்வயமேவ ஸாதநதயா ஜோகுஷ்யமாண: ச்ருதௌ" என்றும் 'குணக்ஷத விபிக்ரமாத் உபநிபாதிந: பாதி ந:' என்றுமுள்ள தேசிக ஸூக்திகளுக்கு நேர் விபரீதமாகச் சிலர் ஏதோ சொல்லிக் கொண்டிருந்தால் அதையெல்லாம் தேவரீர் போல்வார் பொருள்படுத்தலாமா?

(அண்) தேவரீருடைய இத்தகைய நிஷ்கபட ஸூக்திகளுக்கு மிகவுகக்கிறேன் மிகமிக உகக்கிறேன். முக்யமாக ஒன்று கேட்கிறேன். இதே போல் நிஷ்கபடமாக ஸாதித்தருளவேணும்.

## மிக முக்கியமான கேள்வியும் மதுராந்தக ஸ்வாமியின் ஆர்ஜவம் அமைந்த ஸமாதாநமும்

**(அண்ணாவின் கேள்வி)** ஸ்வாமிந்! இதோ அருகே எழுந்தருளியிருக்கிறாரே, ஸ்ரீமதுபயவே. வாகம்ருதவர்ஷி வரதாசார்ய ஸ்வாமி-இவர் எழுதின ஒரு வ்யாஸத்தைப் பற்றித் தேவரீர் விவாதத்தை வளர்த்தி வருவது உலகமறிந்தது. இந்த ஸ்வாமி தமது கட்டுரையில் தேசிக தூஷணமாக ஓரக்ஷரமும் எழுதவில்லை. அப்படியிருந்தும் அது தேசிக ஸூக்தி தூஷணத்தில் பர்யவஸிக்கிறதென்று கொண்டு ப்ரளயமான வாதப்போரைக் கிளப்பிவிட்டது. காலஞ்சென்ற D. T. தாதாசார்யர் நிரவத்யமான தத்வடீகா ஸூக்தியொன்றை எடுத்து "அத்ராஸ்தி பஹு அஸாமஞ்ஜஸ்யம்" என்றெழுதி அச்சிட்டிருப்பதை நீங்கள் கண்ணாரக் கண்டு வைத்தும் ஆக்ஷேபலேசமும் செய்யவில்லை, செய்யாததோடு அவரைத் தேசிக பக்தராகவே உகந்திருந்தீர்கள். இதற்கு என்ன காரணம்? வடகலைத் திருமணிட்டுக்கொண்டு தேசிகனைத் தூஷித்தால் அது பரமபோக்யமே என்பதேயன்றோ? இது தவிர மற்றொன்றும் கேட்கிறேன். வடக்கே ஷோலாபூரில் நடந்த தென்கலை வடகலை வைஷம்ய விவாதத்தின் சார்பாக அவர் ஸம்ஸ்க்ருதத்தில் எழுதி வெளியிட்டவொரு சுவடியில் "உடையவர் கூரத்தாழ்வானையிட்டுச் சூதாக ஸ்ரீரங்கக் கோயில்

சாவிகளை அபஹரித்து ஏற்கனவே இருந்த வடகலைத் திருமண்களை மாற்றித் தென் கலைத் திருமண்களாக்கி விட்டார் என்கிற ஐதிஹ்யம் உலகமறிந்தது'' என்று எழுதி வைத்திருப்பதற்குத் தேவரீர் அபிநந்தந பத்ரிகை கொடுத்து அதை முகப்பில் அச்சிடச் செய்திருப்பது நினைவிருக்கிறதா? இதெல்லாம் தேவரீருக்கு அந்தரங்க ஸாக்ஷிகமாக அபிநந்தநீயமாக வுள்ளதா? உள்ளபடி ஸாதிக்கவேணும்.

(மதுராந்தகம் ஸ்வாமியின் விடை) தேவரீருக்குத் தெரியாததை நான் என்ன விண்ணப்பஞ் செய்யப் போகிறேன்? பரமசிவன் நடநஞ்செய்தபோது பாணாஸுரன் தனது ஆயிரம் கைகளால் மத்தளம்தட்டித் தாளம்போட்டு மிக வுகப்பைக் காட்டினதற்காக அப்பரமசிவன் உகந்து தான் தன் பரிகரங்களோடு கூட அவன் வீட்டைக் காவல் செய்தான் என்கிற இதிஹாஸம் தேவரீர் அறியாததன்று. ''கார்த்திகையானும் கரிமுகத்தானும் கனலும் முக்கண் மூர்த்தியும் மோடியும் வெப்பும்'' என்கிற பாசுரமும் உள்ளதே. ''தம்மையுகப்பாரைத் தாமுகப்பர்'' என்பதும் ப்ரஸித்தம். நானெழுதுமவற்றை அவர் அபிநந்திப்பதும் அவரெழுதுமவற்றை நான் அபிநந்திப்பதுமாய்ப் பழுதே பல பகலும் போயினவென்றழுகின்றேன். பொய்கையாழ்வார் அஞ்சியழுதேன் என்றார். 'மேலும் இப்படிக் காலம் கழியுமோ' என்றஞ்சினபடியைத் தெரிவித்தார். D.T.T. காலம் சென்றுவிட்டபடியால் அடியேன் அஞ்சியழ ப்ரஸக்தியில்லை. வருந்தி யழுகிறேனித்தனை. தேசிக திவ்ய ஸூக்தியில் வெகு அஸாமஞ்ஜஸ்யம் இருப்பதாக வெழுதிக் காலஞ்சழித்தவர்க்கு தேசிகன் தண்டனை கொடாமலிருக்கமாட்டார் என்பது அடியேனுடைய அந்தரங்க நிலை. இந்த விஷயத்தை விட்டிட்டு வேறு விஷயங்களில் வினாவிடைகள் நடக்கலாமே.

(அண்) ஸ்வாமிந்! எம்பெருமான் பக்கலில் நாம் ரக்ஷை பெறுவதற்கு எது ஸாதநம் என்பதை நிஷ்கர்ஷித்து ஸாதிக்க முடியுமா? தேவரீருக்கு முடியாததுமுண்டோ? ஸாதிக்க வேணும்.

(மது) பகவத்ராமாநுஜ ஸம்ப்ரதாயத்தில் இவ்விஷயமான நிஷ்கர்ஷமே தலையானது. இதொன்று நிஷ்கர்ஷிக்கப்பட்டுவிட்டால் போதுமானது. அடியேன் நீண்ட காலமாக ''நம்முடைய க்ரியா கலாபங்கள்தான் எம்பெருமான் செய்யும் ரக்ஷைக்கு ஹேது'' என்றிருந்தேன். ''த்ராணே ஸ்வாமித்வமௌசித்யம் ந்யாஸாத்யாஸ் ஸஹகாரிண:, ப்ரதாநஹேது: ஸ்வாதந்த்ர்ய விசிஷ்டா கருணா விபோ:'' என்கிற ஸ்ரீமத் ரஹஸ்யத்ரயஸார காரிகையை தேவரீர் எடுத்துக்காட்டி விபுல விவரணமும் செய்திருப்பதை நடுநிலை நின்று ஆராய்ந்த பிறகு அந்த எண்ணத்தை முற்றிலும் மாற்றிக்கொண்டேன். இந்தக் காரிகையில் ''த்ராணே-ப்ரதாந ஹேது: விபோ: கருணா'' என்று ஸாதித்தார் ஸ்வாமி தேசிகன். இப்படிச் சொன்னால் ஸர்வமுக்தி ப்ரஸங்கம் வருமே, வைஷம்ய வாதம் தலையெடுக்குமே யென்று முசித்திருந்தேன். அந்தக் கருணைக்கு ''ஸ்வாதந்த்ர்ய விசிஷ்டா'' என்று விசேஷணமிட்டிருப்பதை தேவரீர் எடுத்துக்காட்டி மாசறுத்திருக்கிறதே. ''பட்டத்துக்குரிய ஆனையுமரசும் செய்யுமவை ஆராயாது'' என்கிற ஆசார்யஹ்ருதய திவ்ய ஸூக்தியைத் தழுவியே தேசிகன் இது அருளிச் செய்தாரென்பதில் விஸம்வாதம் கொள்வது விவேகிகளின் பணியன்றே.

(அண்) "இயம் கேவல லக்ஷ்மீசோபாயத்வ ப்ரத்யயாத்மிகா, ஸ்வஹேதுத்வ தியம் ருந்தே கிம் புநஸ் ஸஹகாரிணும்?" என்கிற நியாயஸித்தாஞ்ஜன காரிகைக்கு ரங்கராமாநுஜ ஸ்வாமியிட்ட வியாக்கியானத்தைத் தள்ளித் திருப்புட்குழி ஸ்வாமி தமது ரத்நபேடிகை என்கிற வியாக்கியானத்தில் ஆகாச தாண்டவமாடியிருப்பதை கடாக்ஷித்திருக்கிறதோ?

(மது) ஆகாச தாண்டவமென்று சொல்லுவதிற்காட்டிலும் வேறொரு விதமாகச் சொல்லலாமென்று அடியேன் நினைக்கிறேன். அதாவது "தர்க்க பாண்டித்யத்தாலே நினைத்ததெல்லாம் ஸாதிக்க வல்லமையுள்ளதாக" ஸ்வாமி தேசிகன் ஸ்ரீமத் ரஹஸ்யத்ரய ஸாரத்தில் ஸாதித்திருப்பதை ஸார்த்தகமாக்கினதாகக் கொள்ளலாம்.

(அண்) இங்கு வெளிவீதிகளில் ஏதோ ஸ்ரீபாஷ்யார்த்தம் சொன்னதாக ஸாதித்தது அதைச் சுருக்கமாக இங்குச் சொல்ல முடியுமா?

(மது) கருடபுரம் ஸ்வாமி ஒரு கதை ஸாதிப்பதுண்டு. ஸ்ரீபாஷ்யாந்வயம் செய்துகொள்ள வந்த வொரு சிஷ்யர்க்கு ஆசார்யர் ஆத்யந்தோபதேசம் செய்தாராம். 'அகிலபுவநஜந்ம' என்பது ஸ்ரீபாஷ்யோபக்ரம மாகையாலே அதில் 'அ' என்கிற அக்ஷரத்தையும் முடிவிலுள்ள 'ஸமஞ்ஜஸம்' என்கிற பதத்தையும் எடுத்துக் கொண்டு 'அஸமஞ்ஜஸம்' என்று உபதேசித்துப் போகவிட்டாராம். அதே ரீதியாக ஏதோ அஸமஞ்ஜஸமாகச் சொல்லித் தொலைத்தேன்.

(அண்) ஆத்யந்தமென்று தேவரீர் ப்ரஸ்தாபித்தபடியால் ஸ்ரீபாஷ்யத்தின் ஆதியிலும் அந்தத்திலுமாக இரண்டு கேள்விகள் கேட்கிறேன். ஆதியில் 'விநத விவித பூதவ்ராத ரக்ஷைகதீக்ஷே' என்றவிடத்தில் ச்ருதப்ரகாசிகையில் 'ப்ராஹ்மணஸமாஜ:' 'ராஜபரிஷத்' என்ற இரண்டு வ்யவஹாரங்களை யெடுத்துக்கொண்டு ஸாதித்திருப்பதும் அதைத் தேசிகன் தத்வடீகையில் மிக மிக விளக்கியிருப்பதும் நினைவிருக்கிறதா? அதை இங்கு ப்ரஸங்கித்ததுண்டா?

(மது) "ப்ராஹ்மண ஸமாஜமென்று சொன்னால் அந்த ஸமாஜத்தில் பிராமணர்கள் மட்டுமே கூடியிருப்பதாகவும் இதர ஜாதியர்களின் சேர்க்கை அங்கு இல்லையாகவும் உலகத்தில் ஸ்பஷ்டமாகக் காண்கிறது. ராஜபரிஷத்தென்று சொன்னால் இப்படிக் காணப்படுவதில்லை. கேவலம் ராஜாக்கள் மட்டுமே கூடுகிற கூட்டத்தையா ராஜபரிஷத்தென்கிறோம்? இல்லை; மந்த்ரிகளும் ப்ரஜைகளுமாகிய இதரர்களும் அரசனோடு கூடியிருக்குமிருப்பையே 'ராஜபரிஷத்' என்கிறோம். 'ப்ராஹ்மண ஸமாஜ:' என்றவிடத்திலும் 'ராஜபரிஷத்' என்றவிடத்திலும் அவிசேஷேண ஷஷ்டீதத்புருஷ ஸமாஸமே கொள்ளுகிறோம். ஸமாஸத்தில் வாசியில்லையாயினும் பொருளில் நெடுவாசியுள்ளது.

ச்ருதப்ரகாசிகாபட்டர் இவற்றையெடுத்துக்காட்டி விரிவாக அருளிச் செய்துள்ளார். விநதப்ராணிகளுக்குமட்டும் மோக்ஷமளிக்கை யன்றிக்கே அந்த ப்ராணிகளோடு ஸம்பந்தம் பெற்றவர்களுக்குங்கூட அந்த விநதப்ராணிகளின் விநதியே காரணமாக மோக்ஷமளிக்கிறானெம்பெருமானென்றருளி யுள்ளார். இங்கு 'தத ஏவ காரணாத்' என்கிற ஸ்ரீஸூக்தி ஜீவநாடியாக வுள்ளது.

இவ்வர்த்தத்தை தேசிகர் தத்வடீகையில் வெகு அழகாக உப பாதித்துப் பொருந்தவைக்கிறார். அவ்விடத்து ஸ்ரீஸூக்திகள் மிக அழகானவை. மூலத்தில் ரக்ஷாபதத்தாலே விவக்ஷிதமான ரக்ஷணம் 'அஸாதாரணஸ்ய பரம ப்ரயோஜநஸ்ய மோக்ஷஸ்யைவ ப்ரதாநம்' என்று நிர்ணீதமாயிருக்கையாலே இந்த மோக்ஷப்ரதாநம் விநதபூதங்களுக்குமட்டுமன்று, தத்ஸம்பந்தி ஸம்பந்திகளுக்கும் அப்ரதிஹதம் என்கிற அர்த்தமே தத்வடீகாஸூக்திகளாலும் விசதீக்ருதமாயிற்று. சரணாகதிகத்யத்தில் 'பகவந்நாராயணாபிமதேத்யாதி சூர்ணையினால் புருஷகாரப்ர பத்தி செய்தருளின எம்பெருமானார்க்கு ப்ரதிவசநமிட்டருளின ஸ்ரீரங்கநாச்சியார் 'அஸ்து தே' என்றவளவோடு நில்லாமல் 'தயைவ ஸர்வம் ஸம்பத்ஸ்யதே' என்று மருளிச் செய்த விடத்தில் அவ்விடத்து ச்ருதப்ரகாசிகையில் 'ஸம்பந்தி ஸம்பந்தி ஸர்வசப்தாபிப்ரேதம்' என்று அருளிச்செய்யப்பட்டிருப்பதும் இங்கு அநுஸந்தேயம்'' என்று பலகால் தேவரீர் எழுதியிருப்பதை மனப்பாடம் செய்திருக்கிறேன். அன்றியும் ந்யாஸதிலகத்தில் அந்தோநந்த ச்லோகத்தில் 'புங்க்தே போகாந் அவிதித ந்ருப: ஸேவகஸ்யார்ப்பகாதி:' என்றவிடத்திற்குத் தேவரீருடைய வ்யாக்யானத்தை யும் மனப்பாடம் செய்திருக்கிறேன். அதிலேயே 'உக்த்யா தநஞ்ஜய ச்லோகத் தில் 'ச்ருத்வா வரம் ததநுபந்த மதாவலிப்தே' என்ற விடத்தில் ப்ரஸ்தாவிக்கப் பட்ட வரத்தின் ஸ்வரூபத்தைத் திருக்குடந்தை வித்வான்களச்சிட்ட வ்யாக்யா னத்திலிருந்து தேவரீர் எடுத்துக் காட்டியதையும் சிக்கெனக் கொண்டிருக் கிறேன். ஸ்ரீமத் ரஹஸ்யத்ரய ஸாரத்தில் 'த்வயத்தின் ஆசார்யோச்சாரண அநூச்சாரண முகத்தாலே ப்ரபத்த்யநுஷ்டானம் பிறந்த பின்பு' என்கிற ஸ்ரீஸூக்தியையும், சரணாகதிகத்யபாஷ்ய முடிவிலும் அப்படியே ஸம்ஸ்க்ருதத் தில் அருளிச் செய்திருப்பதையும், எதையும் அடியேன் மறக்கவில்லை.

(அண்) ஸ்ரீபாஷ்யத்தில் ப்ரத்யாஹாரந்யாயேந ஆத்யந்தங்களில் இரண்டு விஷயங்கள் கேட்க விரும்பினேன். ஆதி விஷயம் கேட்டாயிற்று. இனி அவ ஸானத்தில் கேட்கிறேன்.

(மது) அந்த விஷயம் இன்னதென்பதை அடியேனே தெரிந்து கொண் டிருக்கிறேன். அடியேன் தேவரீருடைய நூல்களை யெல்லாம் கண்டபாடம் செய்திருப்பவனாதலால் அநாவ்ருத்தி ஸூத்ரபாஷ்யத்தில் உள்ள 'அத்யர்த்த ப்ரியம் ஜ்ஞாநிநம் லப்த்வா' என்கிற ஸ்ரீஸூக்தியைப்பற்றியே தேவரீர் வினவப் போகிற தென்பதை யறிவேன். இவ்விடத்து விஷய தத்துவத்தை அடியேனே விஜ்ஞாபிக்கிறேன். நேற்று இங்கே கூடியிருந்த சில நபர்களுக்கு இதை எடுத் துச் சொல்லியும் இருக்கிறேன். அவர்கள் கேட்டு மிகவும் ரஸித்தார்கள்.

(அண்) அதை இப்போது இங்குள்ள வித்வான்களும் அறிய ஸாதித் தருளினால் அனைவரும் கேட்டு உய்யலாமே. பத்தே நிமிஷத்தில் ஸாரமாக ஸாதித்தருளவேணும்.

(மது) ஐந்தே நிமிஷத்தில் விஜ்ஞாபிக்கிறேன். முக்தாத்மாவுக்கு மீட்சி உண்டா இல்லையா என்கிற விசாரத்தில் அது இல்லை என்று முடிக்கப்பட்டது. ஒரு

உபநிஷத்து வாக்கியத்தையும் ஒரு கீதா வசனத்தையும் ப்ரமாணமாகக் கொண்டு இவ்விஷயம் ஸாதித்து முடிக்கப்பட்டது. அவ்வளவோடு ஸூத்ரபாஷ்யம் நிற்க வேண்டும். இதர பாஷ்யகாரர்கள் அப்படியே முடித்து நிறுத்தியிருக்கிறார்கள். நமது பாஷ்யகாரர்மட்டும் அதிகப்படியாக இரண்டு வாக்கியங்களைப் பொறித்திருக்கிறார். அதில் இரண்டாவது வாக்கியம் நிதியானது. ஸ்வாமி அருளிச்செயற் கடலில் ஆழமூழ்கினவரென்பதை நன்கு காட்டுகின்றதது. (அதாவது) முக்தாத்மாவுக்கு மீட்சியில்லை என்பதை சாஸ்திரம் கொண்டு நிர்ணயிக்க வேண்டுமோ? எம்பெருமானுடைய இயல்பு கொண்டே எளிதாக நிர்ணயிக்கலாமே. சேதனர்களைத் தான் பெறுவதற்காக எத்தனையோ க்ருஷிகளைப் பண்ணினவன் அன்றோ அப்பெருமான்! அந்த க்ருஷிகள் பலித்துத் தான் பேறுபெற்று மகிழ்ந்திருக்கும்போது அந்த முக்தாத்மாவைத் திருப்பி அனுப்ப நினைப்பனோ? அவன் பரம ரஸிகன் அன்றோ! என்பதைத் திருவுள்ளத்தில் கொண்டன்றோ 'ஜ்ஞாநிநம் லப்த்வா' என்கிற ஸ்ரீஸூக்தியை அருளிச்செய்தார். இங்கு 'ஆகதம் ஜ்ஞாநிநம்' (தன்னிடம் வந்த ஜ்ஞாநியை) என்று எழுதாமல் 'ஜ்ஞாநிநம் லப்த்வா' என்று எழுதியது மிகவியக்கத் தக்க ஸாரப்பொருளாகும். உபநிஷத்தில் 'ரஸோ வை ஸ: ரஸம் ஹ்யேவாயம் லப்த்வா ஆநந்தீபவதி' என்று சேதநன் பரமசேதனனை லபித்து ஆநந்திப்பதாக ஓதி இருக்கச் செய்தேயும் நம் ஸ்வாமி சேதநலாபம் ஈச்வரனுக்கே ஒழிய ஈச்வரலாபம் சேதநனுக்கன்று என்கிற பரமார்த்தத்தை நன்குணர்ந்தவராதலால் இது ஸ்ரீபாஷ்யத்தில் குன்றிலிட்ட விளக்காக விளங்கவேணுமென்று திருவுள்ளம் பற்றியே இந்த ஸ்ரீஸூக்தியை இவ்விதமாக அருளிச்செய்தார். நம்மாழ்வார் திருவாய்மொழியில் 'வாரிக்கொண்டுன்னை விழுங்குவன் காணிலென்று ஆர்வுற்ற என்னை யொழிய என்னில் முன்னம் பாரித்து, தானென்னை முற்றப்பருகினான்' என்றருளிச் செய்த பாசுரத்தை நித்யாநுஸந்தாநம் செய்தருளினவர் எம்பெருமானார். ஸ்ரீபாஷ்யாவஸாநத்தில் இந்த ஸ்ரீஸூக்தியை அருளிச்செய்தது "திருக்கோட்டியூர்நம்பி பக்கலில் ரஹஸ்யார்த்தங்கள் சிக்ஷித்தார்" என்பதை மூதலிக்கின்றது. 'அத்யர்த்தப்ரியம் ஜ்ஞாநிநம் லப்த்வா' என்கிற இந்த ஸ்ரீஸூக்தி ஸ்ரீபாஷ்யத்தில் இடம் பெறாதிருந்தால் 'பாஷ்யகாரர் இதுகொண்டு ஸூத்ரவாக்யங்கள் ஒருங்கவிடுவர்'—என்கிற ஆசார்ய ஹ்ருதய ஸூக்தி அர்த்தமற்றதாகவே யிருக்குமென்று தேவரீர் ஏழெட்டு நூல்களில் ஆணித்தரமாக எழுதியிருப்பதை அடியேன் க்ருதஜ்ஞதையுடன் அநுஸந்தித்து வருவதோடு ஆங்காங்கு உபந்யஸித்தும் வருகிறேன். இவ்வரிய பெரிய விஷயம் தேவரீருடைய நூல்களில் மட்டுமே காணப்படுகிறது. ஸ்ரீமத்ரஹஸ்யத்ரயஸாரத்தில் 'யத்யேதம் யதிஸார்வபௌம கதிதம்' என்னும் ச்லோகத்தில் 'தத்ரைகத்ர ஜடித்யுபைதிவிலயம்......கல்லோல கோலாஹல:' என்றாப்போலே இந்த ஸ்ரீபாஷ்யகாரஸூக்தியின் முன்னிலையில் நவீனர்களின் வாக்கோலாஹலமெல்லாம் மாய்ந்தொழிந்ததாக தேவரீர் எழுதியிருப்பதைக் கண்டித்தெழுதவேணுமென்று சிலர் என்னைத் தூண்டினதுண்டு. நானும் முயன்றதுண்டு. 'சரக்கில்லாத செருக்கு' என்று மகுடமிட்டு அடுத்த நாளிலேயே தேவரீருடைய ப்ரஹ்மாஸ்த்ரம் வந்து விடுமென்றஞ்சியே வாளாவிருந்து வருகிறேன். வாளாவிருப்பது மட்டுமன்று. அந்த ஸ்ரீபாஷ்ய ஸூக்தியின் காம்பீர்யத்தையும் ஔதார்யத்தையும் அடிக்கடி நினைந்துநைந்துள்கரைந்துருகி வருகின்றேன்.

(அண்) தேவரீருடைய பரமப்ராமாணிகத்வத்தை மிகமிக மெச்சி மகிழ்கின்றேன். கடைசியாக ஒன்று கேட்கிறேன். 'யமேவைஷவ்ருணுதே தேந லப்ய:' என்ற உபநிஷத்வாக்யம் தேவரீருக்குத் தெரியுமல்லவா? இதன் உண்மைப் பொருளைச்சிறிது விவரிக்க முடியுமா? இதையும் ஐந்தே நிமிஷத்தில் ஸாதித்தருளவேணும்.

(மது) இரண்டே நிமிஷத்தில் விஜ்ஞாபிக்கிறேன். இந்த வாக்யம் *நாயமாத்மா ச்ருதியிலுள்ளது. அந்த ச்ருதியாவது 'நாயமாத்மா ப்ரவசநேந லப்ய: ந மேதயா ந பஹுநா ச்ருதேந, யமேவைஷ வ்ருணுதே தேந லப்ய: தஸ்யைஷ ஆத்மா விவ்ருணுதே தநூம் ஸ்வாம்'—என்பதாம். இந்த ச்ருதியை நம் ஸ்வாமி கீதாபாஷ்யத்திலும், ஸ்ரீபாஷ்யத்திலும் பலகால் உதாஹரித்தருளியுள்ளார். 'ஏஷ: யம் வ்ருணுதே தேநைவ லப்ய:''—பரமபுருஷன் தானே எந்த சேதநனை ஸ்வீகரிக்கிறானோ அந்த சேதனனால்தான் (பரமபுருஷன்) லபிக்கத்தக்கவனுவன் என்று நிஸ்ஸந்தேஹமாகப் பொருள் கிடைக்கிறது. வஸுதேவன் தவம்புரிந்து கண்ணனைப் பிள்ளையாகப் பெற்றான். பிறந்த கண்ணன் அடுத்த க்ஷணத்தில் நந்தகோபனை ஸ்வஸ்வீகாரத்திற்கு விஷயமாக்கினன் 'நந்தன் பெற்றனன் நல்வினையில்லா நங்கள் கோன் வசுதேவன் பெற்றிலனே' என்றும், 'எல்லாம் தெய்வ நங்கை யசோதை பெற்றாளே' என்றும் குலசேகர ஆழ்வார் பாசுரம் பாடும்படியாயிற்று மேலெடுத்த ச்ருதி 'ஏஷ: யம் வ்ருணுதே தேநைவ லப்ய:' என்ற அளவோடு நில்லாமல் அதற்கு மேல் 'தஸ்யைஷ ஆத்மா ஸ்வாம் தநூம் விவ்ருணுதே' என்றும் ஓதினதற்குச்சேர கண்ணபிரானுடைய பாதாதிகேசாந்தமான திவ்யமங்கள விக்ரஹாநுபவத்தை *பெரியாழ்வாருடைய சீதக்கடல் திருமொழிப்படியே நந்தகோப யசோதைகளுக்குப் பெறுவித்த பாங்கையும் தேவரீர் விவரித்திருக்குமழகை அடியேன் ஆர அமர அனுபவித்தவன், அனுபவித்துக்கொண்டிருப்பவன், யாவதாத்மபாவி மேலும் அனுபவித்துக் கொண்டேயிருக்கப் போகிறவன். நியமனப்படி இரண்டே நிமிஷத்தில் விண்ணப்பித்து முடித்து விட்டேன். திருவுள்ளம் உகந்ததா?

(அண்) அடியேனுடைய உள்ளவுகப்பு ஏதுக்கு? இதைத் தேவரீர் ஸாதிக்கும்போது—'கண்ணநீரும் நில்லா, உடல் சோர்ந்து நடுங்கிக்குரல் மேலுபெழா மயிர் கூச்சுமறா'—என்ற பெரியாழ்வார் பாசுரத்தின்படி இருந்த இருப்பை ஒருநாளும் மறவேன். ஸந்நிதியில் சாற்றுமுறை ஸமயமென்று அழைக்க வந்துவிட்டார்கள். இத்தோடு ஸதஸ்ஸு கலையவேணும். மீண்டும் பிற்பகலில் கூடிப் பேசுவோம். 'ஸுஷா ச மே ஸுதிநஞ்ச மே' என்றநுஸந்தித்துக்கொண்டு ஸந்நிதிக்கு விடைகொள்ளுகிறோம். தேவரீரும் அசநசயந விச்ராந்திகளுக்கு எழுந்தருள்வது.

### மதுர ஸ்வாமிந்! கடைசியாக ஒன்று விஜ்ஞாபிக்கிறேன்.

இந்த ஸம்பாஷணைகளை யெல்லாம் அடியேன் ஸ்ரீராமாநுஜன் மூலமாக வெளியிட நேரும். அதோ ஒருவர் ஷார்ட்—ஹாண்ட் எடுக்கிறார் என்பதைக் கடாக்ஷித்திருக்குமே. இவ்வளவையும் அநுநாநதிரிக்தமாக வெளியிடுவேன். எதற்காக வென்றால் லோகோபகார்த்தமாக என்பது மட்டுமன்றிக்கே தேவரீருடைய ப்ராமாணிகத்வமும் ஆர்ஜவமும் உலகோர் புகழ விளங்குவதற்குமாம். மறுபடியும் 3 மணிக்குமேல் ஸேவை ஸாதிக்கவேணும். (தொடரும்)

ஸ்ரீ:
ஸ்ரீமதே ஹயக்ரீவாய நம:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# பேரவிவைணவர்

## பொய்யுரை மறுப்பு

ஸ்ரீகாஞ்சீ. ஜகதாசார்ய ஸிம்ஹாஸநாதிபதி பத்மவிபூஷண மஹாமஹிமோபாத்யாய ப்ரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசாரியார் எழுதியது

ஸ்ரீவிஷ்ணுபுராணத்தில் "காயந்தி தேவா: கில கீதகாநி தந்யாஸ்து தே பாரதபூமி பாகே, ஸ்வர்காபவர்காஸ்பத மார்கபூதே பவந்தி பூய: புருஷாஸ் ஸுரத்வாத்" (2-4-24) என்று போரப் பொலியப் புகழப்பட்ட விடத்தில்—ஜம்பூத்வீபே பாரதவர்ஷே ப்ரதகண்டே ஜனிக்கப் பெற்று, அது தன்னிலும் க்ருமிகீடபசு பதங்காதி யோனிகளிலன்றிக்கே "துர்லபோ மாநுஷோ தேஹ:" "மானிடப்பிறவி யந்தோ மதிக்கிலர்" என்று புகழப்பட்ட மநுஷ்ய யோனியில் பிறந்து, அது தன்னிலும் த்ருஷ்க யவநாதிகளின் திரளிலன்றிக்கே "தஸ்மாத் ப்ராஹ்மணோ ந பரோச்ய:" என்று குலாவப்பட்ட ப்ராஹ்மண யோனியில் பிறந்து, அது தன்னிலும் "த்ருச்யம் மித்த்யா த்ருஷ்டி கர்த்தாச மித்த்யா தோஷோ மித்த்யா ஸர்வ மேவேஹ மித்த்யா" என்பார் திரளிலன்றிக்கே ஆழ்வாராசாரியர்களைப் போற்றுங் குடியான ஸ்ரீவைஷ்ணவ குலத்திலே பிறந்து வைத்தும் ஒருவர் பாக்யஹாநியாலே நல்லவமுதத்தைப் பருகப்பெறாதே வைஷ்ணவ ஸமயத்தையே தூஷிக்கத் தோன்றியவாறு என்னே! என்னே!! தைத்ரீய ஸம்ஹிதையில் ஐந்தாவது காண்டம் முதல் ப்ரச்நத்தில் "ந ஹி ஸ்வ: ஸ்வம் ஹிநஸ்தி" (ஒருவனும் தன்னைத் தானே நலிந்து கொள்ள மாட்டான்) என்றோதினதற்கு நேர் முரணாகத் தனது ஜந்மமான வைணவத்தையே இழித்துரைக்கத் தோன்றினது ஆச்சரியத்திலும் தலையான ஆச்சரியம்.

தற்போது நமது கையில் "வரலாற்றில் பிறந்த வைணவம்" என்னும் சுவடியுள்ளது. சில காலமாக நமக்கு நேத்ரபாடவம் குன்றியிருப்பதால் இதை இயற்றியவர் பெயரையும் இதிலுள்ள விஷயங்களையும் ஆப்தர்கள் எடுத்துரைக்கக் கேட்டேன். பலவாண்டுகட்கு முன்பு எம்பெருமானார்க்கும் ஆழ்வாரருளிச் செயல்களான திவ்வியப்பிரபந்தங்களுக்கும் ஸம்பந்தகந்தமும் இல்லை என்றெழுதி 'த்ரமிடோபநிஷத் ப்ரபாவ ஸர்வஸ்வம்' என்னும் நமது நூல் நம்மால் வெளியிடப்பெற்று உண்மையறிந்து ஓய்ந்தவரும் அதற்குச் சில்வாண்டுகள் கழிந்தபின் மும்மூர்த்திகளுக்கு மேலான ஒரு சக்தி உண்டென்றெழுதி அதற்கும் நம்மால் விடைபெற்று ஓய்ந்தவரும் சமீப காலத்தில் "திருப்பாவை உண்மைகள்" என்கிற அபத்தக் கட்டுரையை எழுதி அக்னிஹோத்ர கண்டகோத்தாரமென்னும் நமது நூலினால் தெளிவு பெற்றவருமான ஒரு ஸ்ரீவைஷ்ணவ வ்யக்தி இப்போது மேலே குறித்த சுவடியை வெளியிட்டிருப்பதாக அறிகிறோம். உண்மையில் இதை எழுதியவர் இவரல்லரென்று அறியலாகிறது.

ஒரு தமிழ்ப்பண்டிதர் வாக்கியங்களை ஒழுங்குபடுத்திக் கொடுத்திருப்பதாகவும் அவற்றின் கருத்து மட்டுமே இவருடையதாகவும் கேள்விப்படுகிறோம். இது எங்ஙனேயாயினுமாகுக. இச்சுவடியைத் தமிழ் நாட்டிலுள்ள ஆஸ்திகர்கள், அந்தணர்கள், வைணவர்கள் யாவருமே கண்டித் தொழிக்கக்கடமைப்பட்டவர்கள். ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனம், ஸ்ரீரங்கநாதபாதுகா, ந்ருஸிம்ஹப்ரியா போன்ற பத்திரிகைகளும் கண்டிக்க முன்வர வேண்டியது மிகவவசியம். இப்போது நாம் இச்சுவடியிலுள்ள சிலசில வாக்கியங்களை எடுத்து இவை ஸர்வாத்மநா அஸம்பத்தங்கள் என்பதை மூதலிக்கிறோம். ஸ்த்தாலீபுலாக ந்யாயேந நமது இந்நூல் அவதரிப்பதாகக்கொள்க.

விவாதச் சுவடியின் இரண்டாவது பக்கத்தில்,

> "வேதத்தின் வழிநூல் சார்புநூல்களாகிய ஏனையவற்றின் காலமும் வேத காலமும் ஒன்றே என்று எண்ணியஎண்ணம் மாறவேண்டிய காலம் வந்துவிட்டது."

என்றுள்ளது. இதில் 'வேதகாலம்' என்கிற சொல் வடிவம் ஆஸ்திகர்கள் எழுதக்கூடியதன்று. உலகத்தில் வார்த்தையாடுமவர்கள் "என் தகப்பனுர் காலத்தில்" "என் பாட்டனுர் காலத்தில்" என்று வ்யவஹரிப்பதுண்டு. அதுபோல் இவர் 'வேதகாலம்' என்கிறார். வேதம் ஒரு காலத்தில் தோன்றியதாக இவருடைய எண்ணம் வெளியாகிறது. உண்மையான வைதிகர்கள் முந்துறமுன்னம் இதை மறுத்தொழிப்பர்கள். பகவத்ராமாநுஜருடைய ஸ்ரீபாஷ்யத்தில் தேவதாதி கரணத்தில் "ஏததேவ ச வேதஸ்ய அபௌருஷேயத்வம் நித்யத்வம் ச, யத் பூர்வபூர்வோச்சாரணக்ரமஜநித ஸம்ஸ்காரேண தமேவ க்ரமவிசேஷம் ஸ்ம்ருத்வா தேநைவ க்ரமேணோச்சார்யத்வம்"—இத்யாதியாகவுள்ள ஸ்ரீஸூக்திகள் வேதகாலமென்னுஞ் சொல்லை ஸஹிக்கமாட்டா. உபநிஷத்தில் 'யோ ப்ரஹ்மாணம் விததாதி பூர்வம் யோ வை வேதாம்ச்ச ப்ரஹிணோதி தஸ்மை' என்றோதியதும் அதைத் தழுவித் திருமங்கையாழ்வார் பெரிய திருமடலில்,

> "உன்னிய யோகத் துறக்கம் தலைக் கொண்ட பின்னை
> தன்னுபி வலயத்துப் பேரொளிசேர்
> மன்னிய தாமரை மாமலர்பூத்து—அம்மலர்மேல்
> முன்னம் திசைமுகனைத் தான் படைக்க—மற்றவனும்
> முன்னம் படைத்தனன் நான்மறைகள்"

என்றருளிச் செய்ததும் காண்க. இவற்றையெல்லாம் சேரப்பிடித்து ஸ்ரீபராசரபட்டர் "ஸம்ஸ்காரம் ப்ரதிஸஞ்சரேஷு நிதநத் ஸர்கேஷு தத் ஸ்மாரிதம் ரூபம் நாம ச தத்ததர்ஹ நிவஹே வ்யாக்ருத்ய ரங்காஸ்பத! ஸுப்தோத்புத்த விரிஞ்ச பூர்வஜந தாம் அத்யாப்ய தத்தத்திதம் சாஸத் நஸ்ம்ருதகர்த்ருகாந் வஹஸியத் வேதா: ப்ரமாணம் தத:" என்று ச்லோகமிட்டருளினர். அநாதிகாலமாக ஓலைப்படா ப்ரமாணமாய்க் கொண்டு "பூர்வே பூர்வேப்யோ வச ஏததூசு:" என்று வேதமே ஓதினபடி பரம்பரையாக வந்திருக்கிற வேதத்திற்கு 'வேதகாலம்' என்று சொல்லும்

படியாக ஒரு காலத்தை உத்தேசிக்க ந்யாயமில்லை. 'வழிநூல்களும் சார்புநூல்களும் மூல நூல்களின் ஸம காலத்தவை' என்று ஒரு பேதையனும் பேசமாட்டான். ப்ரஹ்மஸூத்ரகாலமும் தத்பாஷ்ய காலமும் ஒன்றே யென்று யாரேனும் சொல்வதுண்டோ? இந்த அஸமஞ்ஜஸோக்தியைப்பற்றி மிக விரிவாக எழுத வேண்டியதுண்டு. அது க்ரமேண ஆகும். மேலெடுத்த வாக்யத்தின் முடிவில் '......எண்ணிய எண்ணம் மாறவேண்டிய காலம் வந்துவிட்டது' என்றுள்ளது. தீவட்டிக் கொள்ளைக் காரர்கள் ஊர்த்தெருக்களிலே புகுந்து 'உங்களுடைய பொருள்கள் உங்களுடையவை என்று எண்ணுமெண்ணம் மாறவேண்டிய காலம் வந்துவிட்டது' என்று பறைசாற்றுமாபோலே இருந்ததிது.

"நாம் மிகத்தவருக எழுதியதெல்லாம் அஸமஞ்ஜஸம் அஸம்பத்தம்"

என்று இவர் கொள்ளவேண்டிய காலந்தான் குறுகிவிட்டது. ஆஸ்திகர்களின்-ஆப்தர்களின்-பரம வைதிகர்களின் எண்ணம் ஒருகாலும்மாருது; எதனுலும்மாருது.

இவருடையசுவடியில் பக்கம் ஐந்தில்

"வைணவம் வேத காலத்திற்குப் பிற்பட்டு ஒரு காலத்தில் உண்டாகிப் படிப்படியாகப் பல துறைகளிலும் வளர்ச்சியடைந்து ஓர் ஆசார்யனை ஒப்புக்கொண்டு சிந்தனைக்கு முற்றுப்புள்ளி வைக்கத் தொடங்கியதும் தன் வளர்ச்சிக்கு முற்றுப்புள்ளி வைத்துள்ளது என்பது புலனுகின்றது."

என்றுள்ளது. மீண்டுமீண்டும் வேதகாலம் என்ற சொல்லையிவர் எழுதிவருகிருர். வேதம் ஒரு காலத்தில் உண்டாயிற்றென்று இவர் கருதுகிறபடியே இசைந்து கொள்வோம். எந்நாளில் வேதம் தோன்றியதோ அந்நாளுக்கு முன்னமே வைணவம் வீறுபெற்றுள்ளது என்பது வேதங்சொண்டே மூதலிக்கப்படுகின்றது காண்மின்! வைணவத்திற்கு மூலாதாரம் எதுவென்பதை முன்னம் முடிவு செய்து கொள்ளவேண்டும். திவ்யதேசங்களென்று சொல்லப்படுகிற நூற்றெட்டுத் திருப்பதிகளே வைணவத்திற்கு மூலாதாரமானவை. இந்த நூற்றெட்டுத் திருப்பதிகளில் திருநாடு ஒன்று தவிர மற்ற நூற்றேழும் இப்பூமண்டலத்திலுள்ளவை. 'ஈரிருபதாம் சோழம் ஈரொன்பதாம் பாண்டி' என்று தொடங்கி பிள்ளைப்பெருமாள் ஐயங்கார் பாடிய வெண்பாவின் முடிவில் "கூறுதிரு நாடொன்ருக் கொள்' என்ற ஈற்றடியின் படி ஸ்ரீவைகுண்டமாகிற—திருநாடொன்று தவிர மற்ற நூற்றேழும் இந்நிலத்தில் உள்ளன. இதை வேதம் ஓதியுள்ளது. தைத்திரீய ஸம்ஹிதையில் நான்காவது காண்டத்தில் இரண்டாம் ப்ரச்நத்தில்—'யா ஜாதா ஓஷதய:' என்று தொடங்கும் அநுவாகத்தில் "மந்தாமி பப்ருணும்ஹம் சதம் தாமானி ஸப்த ச" என்று வைதிகர்கள் யாவரும் ஓதிவருகிருேம். இதில் தாமாநி என்றது தலங்கள் என்றபடி. 'சதம்ஸப்த ச தாமாநி' என்றது, நூற்றேழு திவ்யஸ்தலங்கள் என்றபடி. இங்கு 'ஸப்தோத்தரசதம்' என்னுமல் சதம் என்றும் ஸப்த ச என்றும் பிரித்து ஓதினதானது வடநாட்டுத் திருப்பதிகள் ஏழில் உள்ளவொரு தனிச்சிறப்பைக் காட்டுவதற்காம். இதைக் கண்டவிவர் என்ன கூறுவர் என்ருல் 'வேதபாஷ்யகாரர்கள் இப்படி பாஷ்யம் செய்யவில்லையே' என்பர்.

# வைதிகர்கள் குறிக்கொள்க.

இந்நூலில் நாம் மேலே பலபல வேத வாக்கியங்களை எடுத்துக் காட்டப் போகிறோம். 'இது வேத பாஷ்யத்திலில்லாத அர்த்தம்' என்று இவர் கூறுவர். வேதபாஷ்யகாரர்களை நாம் எவ்வளவு தூரம் கௌரவிக்கலாம் என்பதைச் சிறிது ஆராய்வோம். தைத்திரீய ஸம்ஹிதை இரண்டாவது காண்டம் இரண்டாம் ப்ரச்நத்தில் பத்தாவது அநுவாகத்தில் "யத் வை கிஞ்ச மநுரவதத் தத் பேஷஜம்" என்று ஓதப்பட்டுள்ளது. மநுமஹர்ஷி சொன்னதெல்லாம் மருந்து என்பது இதன் பொருள். சாரீரக மீமாம்ஸையில் ஸ்ம்ருத்யதிகரணபாஷ்யத்தில் ஆதிசங்கராசார்யர் உட்பட ஸகல பாஷ்யகாரர்களும் இப்பொருளையே ஆதரித் தெழுதியுள்ளார்கள். சங்கராசார்ய பரம்பரையில் வந்தவரான வித்யாரண்யரோ அவர்க்கும் மூற்பட்ட பட்டபாஸ்கரரோ இப்பொருளை நெஞ்சாலும் நினைத்தவர்களல்லர். மீமாம்ஸையில் விநியோக ப்ருதக்த்வ ந்யாயமென்று ஒன்றுண்டு. அதை அநுஸரித்து பூர்வாசார்யர்கள் பல வேதவாக்கியங்களுக்குப் பொருள் கூறியிருப்பதைக் கண்ணுடையார் காணவேணும். "சரணம் பவித்ரம் விததம் புராணம்.........ப்ரபுர்காத்ராணி பர்யேஷி விச்வத:...அதப்ததநூர் ந தததாமோ அச்நுதே" இத்யாதி வேத வாக்யங்களுக்கு நம்முடைய பூர்வாசார்யர்கள் பணித்துள்ளபொருள்கள் சிலாலிபிகளாக வுள்ளன. கீழே நாம் ப்ரஸ்தாவித்த விநியோகப்ருதக்த்வ ந்யாயங் கொண்டே அவை வெற்றி பெறுகின்றன. "சதம் தாமாநி ஸப்த ச" என்கிற வேத வாக்கியம் எம்பெருமான் உகந்தருளின திவ்யதேசங்களையே குறிக்குமவை என்பது சிலாலிகிதம். இது நாலாவது காண்டம் இரண்டாவது ப்ரச்நத்தில் என்று சொன்னோம். அதே காண்டத்தின் முதல் ப்ரச்நத் தொடக்கம் கேண்மின்.

> "யுஞ்ஜாந: ப்ரதமம் மந: தத்வாய ஸவிதா திய: அக்நிம் ஜ்யோதிர் நிசாய்ய ப்ருதிவ்யா அத்யாபரத்"

என்பது முதல் ருக்கு. இது நம்மாழ்வாரை ஸ்பஷ்டமாக நினைவூட்டும் ருக்காகும். ஸ்ரீமந் நாதமுனிகள் நம்மாழ்வாரை யோக தசையில் ஸாக்ஷாத்கரித்து திவ்யப்ரபந்தங்களைப் பெற்றபோது "யத்கோஸஹஸ்ரம் அபஹந்தி தமாம்ஸி பும்ஸாம்" என்று தொடங்கி "தஸ்மை நமோ வகுள பூஷண பாஸ்கராய" என்று தலைக்கட்டி நம்மாழ்வாரை பூலோக ஸூர்யனாக அநுஸந்தித்தார். இங்கு நாம் மேலே காட்டிய "யுஞ்ஜாந: ப்ரதமம் மந: ஸவிதா...இத்யாதி ருக்கை திருவுள்ளத்தில் கொண்டே அவர் அங்ஙனம் ஸாதித்தது. நம்மாழ்வார் தமது திருவாய்மொழியின் முதற் பாசுரத்தில் "தொழுதெழு என்மனனே!" என்றருளிச் செய்ததற்கு ஸ்மாரகமாக "யுஞ்ஜாந: ப்ரதமம் மந: தத்வாய" என்றோதியுள்ளது. உடனே "ஸவிதா" என்றது வகுளபூஷண பாஸ்கரனையேயாகும்.

ஸ்ரீமதுரகவிகள் வடநாட்டு யாத்திரையாக எழுந்தருளியிருந்தபோது ஒரு நாள் ஸாயம் ஸந்த்யாவந்தனத்தில் "ப்ராச்யை திசேநம:" என்று சொல்லிக் கிழக்கே திரும்பிப் பின் தக்ஷிணையை திசேநம: என்று சொல்லி தெற்கே திரும்பியபோது ஒரு பெரிய ஜ்யோதிஸ் தென்பட்டது. ஒரு பெரிய நகரம் தீப்பற்றி எரிவது போலவும் தென்பட்டது. அதைக் கண்டுபிடிக்க வேண்டுமென்றே தென்

திசையாகத் திரும்பிச் செம்பொன்மாடத் திருக்குருகூரை வந்தடைந்தார் என்பது நாதமுனிகள் கேட்டுணர்ந்த இதிஹாஸமாகும். பேலேகாட்டிய, புஞ்ஜாந: என்று தொடங்கும் ருக்கில், 'அக்நிம் ஜ்யோதிம் நிசாய்ய' என்னும் வாக்யசேஷம் இவ் விதிஹாஸத்தையே நினைவூட்டுகின்றதென்று பெரியோர் பணிப்பர். இத்தகைய வ்யாக்யானங்கள் இவர்க்கு ருசியாவிடில் அவைஷ்ணவத்வபூர்த்தி யுள்ளார்க்கு ருசிக்கவில்லை யென்பதில் வியப்பொன்றுமில்லை.

இங்கு முக்கியமாக ஒன்று கேளீர். காடகத்தின் முதல் ப்ரச்நத்தில் பரத்வாஜோபாக்யாநம் ஒன்று ஓதப்பட்டுள்ளது. அம்முனிவர் முந்நூறுண்டு காலம் ஓதிவ வேதமெல்லாம் மூன்று கைம்மண்ணளவே என்று காட்டின இந்திரன் அம் முனிவர்க்கு *ஏஹீமம் வித்தி அயம் வை ஸர்வவித்யா* என்று சொல்லி ஸாவித்ர வித்யையை உபதேசித்து அவரை க்ருதக்ருத்யராக்கினதாகச் சொல்லிற்று. அந்த ஸாவித்ர வித்யை வகுளபூஷண பாஸ்கரீயவித்யைதான் என்பதை நெடு நாள் முன்னமே த்ரமிடோபநிஷத் ப்ரபாவ ஸர்வஸ்வத்தில் விளக்கியுள்ளோம். "ஸஹஸ்ர பரமா தேவீ சதமூலா சதாங்குரா" என்கிற ச்ருதி வாக்யத்தில் 'தேவீ' என்றது தீவ்யதீதி தேவீ என்றாகி "திவு—க்ரீடா விஜகீஷா வ்யவஹார த்யுதி ஸ்துதி மோத மத ஸ்வப்ந காந்திகதிஷு" என்கிற தாது பாடத்தில் 'ஸ்துதி' என்கிற பொருளைக் கொண்டுள்ளது. ஸ்தோத்ரம் பண்ணுவது தேவீ என்றாகி அதை 'ஸஹஸ்ர பரமா' என்றும் 'சதமூலா' என்றும் 'சதாங்குரா' என்றும் ஓதி வைத்தது. ஸஹஸ்ரமென்றது திருவாய்மொழியாயிரம். சதமூலா என்றது "சொல்லார் தொடையல் இந்நூறும்" என்கிற திருவிருத்தம் அதன் முடிவில் 'திருமால் திருப் பேர் வல்லாரடிக் கண்ணி சூடிய மாறன்' என்றருளிச் செய்ததை மிகமிக விவரிக்கத் தொடங்கினது இராமாநுச நூற்றந்தாதியாதலால் அதைநோக்கி 'சதாங்குரா' என்றது.

இங்ஙனே நிரூபிக்க வேண்டிய அர்த்தவிசேஷங்கள் இவர் போல்வார்க்கு ருசிக்கமாட்டா. ஸ்ரீவைஷ்ணவ குலத்தில் பிறந்து உ.வே. ஸ்ரீ உ.வே. ஸ்ரீமது பயவே. என்கிற பட்டங்களையிழந்து ப்ரஹ்மஸ்ரீ என்கிற பட்டத்தையும் கூட இழந்து தவிக்குமவர்களுக்கு இத்தகைய பொருள்கள் எங்ஙனே ரஸிக்கும்?

> "வேதகாலத்திற்குப் பிறகே வேதம் இட்டவித்தில் வளர்ந்த வைணவ மதமாகிய மரம், பிற்காலச் சிந்தனையாளர்களால் செழிப்பான மரமாக வளர்க்கப்பட்டது." என்பது இவருடைய அடுத்த வாக்கியம்.

மீண்டுமீண்டும் 'வேத காலத்திற்கு' என்கிற சொல்லைக்கண்டு மிகவும் சோகிக்கிறோம். 'வேதமிட்ட வித்தில் வளர்ந்த வைணவமதமாகிய மரம்...' இத்யாதி வாக்கியமானது மிகவும் அஸம்பத்தம். வேதவ்ருக்ஷத்தோடு கூடவே ஸ்ரீவைஷ்ணவ வ்ருக்ஷமும் சாகோபசாகமாக விளங்கினதென்கிற தத்துவத்தை இவர் உணரப் பிறந்தவரல்லர்.

ப்ரபத்தி மார்க்கத்தை ப்ரஸ்தாவித்து,

> "உண்மையில் ப்ரபத்தி மார்க்கமே வேதம் குறிப்பிடும் வழியானால், வேத காலத்திலேயே அக்கொள்கை பின்பற்றப்பட்டிருக்கும்"

என்று மேலே எழுதுகிறார். இதனால் ப்ரபத்தி மார்க்கத்தை வேதம் கொள்ளவில்லை என்று இவர் தவறாக நினைத்தமை தெரியவருகின்றது. வேதத்திலும் உபநிஷத்திலும் ஆதரிக்கப்பட்டதே ப்ரபத்தி மார்க்கம். அதாவது கர்மகாண்டத்திலும் ப்ரஹ்ம காண்டத்திலுமென்கை. கர்மகாண்டத்தில் ஸம்ஹிதை ஆறாவது காண்டத்தில் ஐந்தாவது ப்ரச்நத்தில் 'ப்ராபத்யத', ப்ராபத்யந்த' 'தஸ்மாதபி வத்யம் ப்ரபந்நம் நப்ரதி ப்ரயச்சந்தி' என்று இருமுறை ஓதப்பட்டுள்ளது. இதற்கு பதக்ரமஜடா கனங்களும் அமைந்துள்ளன. இவ்வாக்கியத்தை நம் பூர்வாசார்யர்கள் சரணாகதிக்குச் சார்பாகக் கையாண்டுள்ளனர். சக்ரவர்த்தி திருமகனார் சரணாகத ரக்ஷணம் அவர்ஜநீய மென்பதற்கு இதை ப்ரமாணமாக எடுத்துக் கூறுவதாக விளக்கியுள்ளார்கள். உபநிஷத்திலும் (ச்வேதாச்வதரமஹோப நிஷதாதிகளில்)

''தகும் ஹதேவம் ஆத்மபுத்தி ப்ரஸாதம் முமுக்ஷுர்வை சரணமஹம் ப்ரபத்யே.''

என்றோதியுள்ளது. வேத ஸம்ப்ரதாய மார்க்கங்களில் ப்ரவேசியாத காளிதாஸாதி மஹா கவிகளும் சரணாகதியின் பெருமையை உணர்ந்து (ரகுவம்சே 4 ஸ.)

''அபநீத சிரஸ்த்ராணா: சேஷாஸ்தம் சரணம்யயு:
ப்ரணிபாத ப்ரதீகார: ஸம்ரம்போ ஹி மஹாத்மநாம்''

இத்யாதி ச்லோகங்களை இட்டுவைத்திருக்கின்றார்கள். உதாஸீநர்களுமறிந்த ப்ரபத்தி வைபவம் இவர்க்குத் தெரியாமைக்குக் காரணமென்ன வென்னில் கீழே உதாஹரித்த உபநிஷத் வாக்யத்தில் 'ஆத்மபுத்தி ப்ரஸாதம்' ''என்றுள்ளதே அந்த ப்ரஸாத மில்லாமையேயாகும்: ஆக ப்ரபத்தி மார்க்கம் ஸகலவேதபரிக்ருஹீதம் என்பது நிரூபிக்கப் பட்டதாயிற்று.

மேலும் வேதமே 'மூலாதாரம்' என்று தலைப்பிட்டு இவர் மிகவும் ஸாஹஸமாக எழுதியுள்ளார். பகவானுக்கே அஸஹ்யமான அபசார வகையில் மிக்க ஸாஹஸமாக எழுதியுள்ளசில வாக்கியங்களை அநுவதிக்கவும் கூசுகிறோம். ஆனாலும் அவை கிள்ளிக்களைய வேண்டியவையாதலால் அநுவதிக்கிறோம். எழுதுகிறாரிவர்.

> ''தொடக்கவளர்ச்சி:— வைணவ சம்பிரதாய ஆசாரியர்கள் விஷ்ணுபுராணத்தை அடிப்படையாகக் கொண்டு வைணவ மதத்தைத் தொடக்கத்தில் வளர்த்தனர். உபநிஷத்துக்களில் கூறப்படும் உருவம் இல்லாத பிரும்மத்தை உருவமுடைய விஷ்ணுவாக ஆக்கி, குணமில்லாத பிரும்மத்தைக் குணமுடையதாக விளக்கிய பெருமை விஷ்ணுபுராணத்தையே சாரும்'' என்று.

இதற்கு மறுப்பு ஸ்ரீவைஷ்ணவ குலத்தில் பிறந்த ஒருவர் பரமபுருஷனை உருவற்றவனாகவும் குணசூந்யனாகவும் கூசாமல் எழுதத் துணிந்தது மஹத்தான ஸாஹஸமென்று பலகால்கூறினாலும் புனருக்தி துஷ்டமாகாது. தேசிகன் சததூஷணியில் ஓரிடத்தில், ''நிர்க்குணமாயும் நிரவயவமாயும் அலக்ஷ்மீகமாயுமுள்ள பரபரஹ்மத்தை சாரீரகமீமாம்ஸையின் பஞ்சமாத்யாயத்தில் காணலாம்'' என்றெழுதிவைத்தார். அதன் ஹ்ருதயத்தை அறியாதவர்கள் பஞ்சமாத்யாயம் எங்குள்ளதென்று தேடிக்கொண்டிருந்தார்கள். அவ்வத்யாயம் இவர்க்குக் கிடைத்து விட்டது போலும்!

"மாநாதீநா மேயஸித்தி:" என்பது சாஸ்த்ரஜ்ஞர்களின் கொள்கை. ப்ரமாணங்கொண்டு ப்ரமேய நிஷ்கர்ஷம் பண்ணவேணும். இவர் எதைப் பிரமாணமாகக் கொள்ளுகிறாரென்று கேட்கவேணும். சார்வாகன் ப்ரத்யக்ஷத்தையாவது பிரமாணமாகக் கொள்ளுகிறான். அதுவும் இவர்க்கு ப்ரமாணமன்றென்று திடமாகத் தெரிகிறது.

"விச்வதச்சக்ஷுருத விச்வதோமுக: விச்வதோ ஹஸ்த உத விச்வதஸ்பாத்" இத்யாதி ச்ருதிவாக்யம் கர்மகாண்டத்திலும் ப்ரஹ்மகாண்டத்திலும் ஓதப்பட்டுள்ளது. அவ்வளவுதூரம் போகவேண்டா. "வேதேஷு பௌருஷம் ஸூக்தம்" என்று கொண்டாடப்பட்ட புருஷ ஸூக்தமானது "ஸஹஸ்ர சீர்ஷா புருஷ: ஸஹஸ்ராக்ஷஸ் ஸஹஸ்ரபாத்" என்று தொடங்குகின்றது. இப்படி ஓதியுள்ளவேதம்

"பச்யத்யசக்ஷு: ஸ ச்ருணோத்யகர்ண: அபாணிபாதோ ஜவநோக்ரஹீதா"

இத்யாதிகளையும் ஓதியிருப்பதானது பரமபுருஷனுக்கு அஸ்மதாதிகளுக்குப் போலே கர்மோபாதிகமான அங்கங்களில்லாமையைக் கூறுவதென்று வேதாந்திகள் நிஷ்கர்ஷித்துள்ளார்கள். "ஸ்ரீவிஷ்ணு புராணத்தை அடிப்படையாகக்கொண்டு" என்றிவரெழுதுகிறபடியே வைத்துக் கொள்வோம். வேதமானது (தைத்திரீயாரண்யகம்) வ்யாஸரை ப்ரஸ்தாவித்துமிடத்து "ஸஹோவாசவ்யாஸ: பாராசர்ய:" என்றே ஓதி வ்யாஸனுக்கு அமைந்த ஏற்றம் பராசராத்மஜ ப்ரயுக்தமென்று காட்டிற்று. அத்தகைய வைபவமுள்ள பராசரர்—ஆளவந்தாரால் மிகப் புகழப்பட்ட பராசரர்—மூல புருஷராக இருந்ததனால் உத்கர்ஷமேயொழிய அபகர்ஷமொன்றுமில்லை. உண்மையில் வேதபுருஷன் பரமபுருஷனை சரீரவானாகக் கருதியுள்ளானா, அசரீரவானாகக் கருதியுள்ளானா என்பதை வைதிகர்கள் ஆராயவேண்டும். மிகமுக்கியமாக ஆராயவேண்டும். வைதிக கோஷ்டிகளில் கப்யாஸச்ருதி ப்ரஸித்தம். ச்சாந்தோக்யத்தில்

"ய யேஷோந்தராதித்யே ஹிரண்மய: புருஷோ த்ருச்யதே. ஹிரண்யச்மச்ரு: ஹிரண்யகேச: ஆப்ரணகாத் ஸர்வ ஏவ ஸுவர்ண. தஸ்ய யதா கப்யாஸம் புண்டரீகம் ஏவமக்ஷிணீ"

என்கிற ச்ருதிவாக்யத்தில் விசாரம் ப்ரவ்ருத்தமாயிற்று. இங்கு சரீர ஸம்பந்தம் சொல்லியிருக்கையாலும் பரமபுருஷன் அசரீரனாகையாலும் இங்குப் பரமபுருஷன் விவக்ஷிதனாயிருக்க ஔசித்யமில்லையென்று பூர்வபக்ஷம் ப்ராப்தமாக, பரமபுருஷன் தான் இங்கு விவக்ஷிதன் என்பதை ஸ்தாபிக்கிறது சாரீரக மீமாம்ஸையில் அந்ததிகரணம். அங்கு பாஷ்யங்களில் பரமபுருஷனுக்கு திவ்யமங்கள விக்ரஹ யோகமுண்டென்கிற கொள்கை நிரூபிக்கப்பட்டுள்ளது. சங்கராசார்யர் தமது கொள்கைப்படி அந்த விக்ரஹம் மாயாரூபம் என்றார். நமது பாஷ்யகாரர் பாரமார்த்திகமென்றார். மாயாவாதமும் தந்திராஸமும் கீதாபாஷ்ய அவதாரிகையிலும் மேலே நான்காமத்யாயத்தில் *ஸம்பவாம்யாத்ம மாயயா* என்றவிடத்து பாஷ்யத்திலும் பரக்கக் காணத்தக்கது. எம்பெருமானை நிரவயவன் என்று ஆஸ்திகனான ஒருவன் ப்ரஸங்கிப்பதும் மஹாபாதகம். ஜிதந்தா ஸ்தோத்ரம் வேதபர்யாயமாகக் கொள்ளப்பட்டு வருகிறது. அதில் *நதே ரூபம் ந சாகாரோ நாயுதாநி ந சாஸ்பதம்

ததாபி புருஷாகாரோ பக்தாநாம் த்வம் ப்ரகாசஸே* என்கிற ச்லோகம் நம் பூருவா சாரியர்களின் வ்யாக்யானத்தோடு சேர்த்து அநுபவிக்கத்தக்கது. யாருக்கு? இவருக்கன்று. *ப்ரமாணஞ்ச ப்ரமேயஞ்ச ப்ரமாதாரச் ச ஸாத்விகா:* இத்யாதிகளை அருளிச்செய்த எம்பெருமானுர் திருவடி ஸம்பந்திகளுக்கு. *யதுக்தயஸ்த்ரயீ கண்டே யாந்தி மங்கள ஸூத்ரதாம்* என்கிறபடியே வேதமாதுக்குத் தாலிகட்டின, எம்பெருமானுர்திருவடிகளிலே ஸகலார்த்தங்களையும் கேட்ட கூரத்தாழ்வான்

''பரிஜந பரிபர்ஹா பூஷணுந்யாயுதாநி
ப்ரவர குணகணுச்ச ஜ்ஞாந சக்த்யாதயஸ்தே,
பரமபதமதாண்டாநி ஆத்ம தேஹஸ்ததாத்மா
வரத ஸகலமேதத் ஸம்ச்ரிதார்த்தம் சகர்த்த.''

என்றருளிச் செய்தார். இவற்றில் ஒன்றையும் ப்ரமாணமாகக் கொள்ளாமல் கடைவீதிப்புராணம் என்று சொல்லும் முறையில் மனந்தோன்றினபடியெல்லாம் எழுதுமவர்களுக்கு எவ்வளவுதான் சொல்லுவது? ஆழ்வார் உபதேசம் செய்யத் தொடங்கினபோது *ஆரானும் ஆதானும் செய்ய அகலிடத்தை ஆராய்ந்து அது திருத்தலாவதே* என்றும், *ஏபாவம்பரமே* என்றும் முடிமேல் மோதிக்கொண்டார். அப்படியே நாமும் மோதிக்கொண்டே எழுதுகிறோம்.

பகவான் என்று வாய்திறக்குப்போதே 'அச்சொல்லுக்கு என்ன பொருள்?' என்று ஒருவர் வினவினுல் *ஷண்ணும் பக இதீரணு* என்று சொல்லி 'ஜ்ஞாநம், சக்தி, பலம், ஐச்வர்யம், வீர்யம், தேஜஸ் என்கிற ஆறுகுணங்களை உடையவன் பகவான்' என்று சொல்லித்தீர வேண்டும். நம்போல்வார்க்கும் ஜ்ஞாநம், சக்தி முதலியவை ஒரளவு இருந்தாலும் நம்மை பகவான் என்று சொல்லார்கள். *ப்ரக்ருஷ்டம் விஜ்ஞாநம் பலம் அதுலம் ஐச்வர்யம் அகிலம் விமர்யாதம் வீர்யம் பரமா சக்தி: பரம் தேஜ:* (ஆழ்வான் ஸ்ரீ ஸூக்தி) என்று ஒவ்வொரு குணத்திற்கும் சிறப்படைமொழியிட்டுப் பேசுகிறுர்கள் நம்மாசார்யர்கள். ஆக, பகவான் என்கிற சொல்லே நிர்குணப்ரஹ்மவாதிகளை நெடுந்தூரத்தில் தள்ளி இருக்க அவர்களோடு கூடவே தள்ளுண்டு போனவிவர் எங்கிருந்து பேசுகிறுர்? என்ன பேசுகிறுர்? என்று ஆஸ்திகர்கள் ஆராயவேண்டும்.

## வேதமும் — வைணவமும்

வைணவக் கொள்கைகளையும் வேதத்தையும் ஒருங்கே நோக்குமிடத்து, வேதத்திலிருந்து வைணவக் கொள்கைகள் தோன்றினவா? வைணவக் கொள்கைகளை நிலைநாட்டுவதற்காக வேதம் ப்ராதுர்ப்பவித்ததா? என்று விகல்பிக்கலாம்படியுள்ளது. வேதத்தில் அடிக்கடி ''ப்ரஹ்மவாதிநோ வதந்தி'' என்று ஓதப்படுதலாலும் கீதோபநிஷத்திலும் ''ஜ்ஞாநிந: தத்வதர்சிந: உபதேக்ஷ்யந்தி'' என்றிருப்பதனுலும் ப்ரஹ்மவாதிகளும் தத்வதர்சிகளுமான ஸ்ரீவைஷ்ணவாசார்யர்கள் அநாதி காலமாகச் சேமித்துவந்த சிறந்த பொருள்களை நிலைநாட்டுவதற்கே வேதமும்,

உபநிஷத்தும், கீதையும் ப்ராதுர்பவித்தனவென்று திண்ணமாகக் கொள்ளவேண்டும். பரமாத்மா, ஜீவாத்மா, உபாயம் என்கிற மூன்றே முக்யமாகக் கொள்ளத்தக்கன. வைணவக் கொள்கைகளில் இம்மூன்றைப் பற்றின நிஷ்கர்ஷமே முக்கியமானது.

(1) (பரமாத்மாவைப்பற்றி.) ஸ்ரீ மஹாவிஷ்ணுவே பராத்பரன், அவனே ஜகத்காரணபூதன், அவனே ஸர்வவ்யாபகன், அவனே ஸர்வ நியாமகன், அவனே பரமகாருணிகன், அவனே ஸர்வலோகசரண்யன், அவனே ஸர்வ சக்தியுக்தன், அவனே ஸத்யகாமன், அவனே ஆபத்ஸகன், அவனே ஸகலார்த்திஹரன். பரமாத்மாவைப்பற்றி வைணவர்களுக்கே உரிய இத்தகைய நிர்ணயங்கள் வேதத்தில் விளங்குபவை.

(2) (ஜீவாத்மாவைப்பற்றி.) ஈச்வர சேஷத்வமும், அநந்யார்ஹ சேஷத்வமும், ஜீவாத்மாவின் வடிக்கட்டின வடிவு.

(3) (உபாயத்தைப்பற்றி) சரணாகதியே தஞ்சம்.

வைணவக் கொள்கைகளில் இன்னும் பலபல விருந்தாலும் அவற்றையெல்லாம் விவரித்துக் காடுபாயாமல் இப்போது இவ்வளவோடு நிற்கிறோம்.

## (1) பரமாத்மாவைப்பற்றி

பரமாத்மாவைப்பற்றி மற்றுமுள்ள வைதிகர்கள் கொண்டிருக்கிற கொள்கைகளுக்கும் ஸ்ரீவைஷ்ணவர்கள் கொண்டிருக்கிற கொள்கைகளுக்கும் நெடுவாசியுண்டு. சாரீரகமீமாம்ஸையில் ஜன்மாத்யதிகரணம் உள்ளதனால் அவனே ஜகத்காரணபூதன் என்று மற்றவரும் இசைந்திருப்பார்கள். அதிலும் அவர்களுக்கு தேவதாநிஷ்கர்ஷம் கிடையாது. நம்முடைய க்ருஷ்ண யஜுர் வேதத்தில் ஐந்தாவது காண்டத்தில் ஐந்தாவது ப்ரச்னத்தில் "அக்நிரவமோ தேவதாநாம் விஷ்ணு: பரம:" என்று ஸ்பஷ்டமாக ஓதியிருப்பதையும், தைத்திரீயோபநிஷத்தில் "ஸ ஆத்மா, அங்காந்யந்யா தேவதா:" என்று ஓதியிருப்பதையும் கொண்டு ஸ்ரீமஹாவிஷ்ணு ஒருவனையே பரதேவதையாகக் கொள்ளும் கொள்கை வைணவர்களுக்கே உரியது. இங்கு முதலில் காட்டிய வேதவாக்கியத்தில் "தேவதாநாம்" என்றது நிர்த்தாரணே ஷஷ்டீ. (தேவதைகளுக்குள்ளே என்றபடி) ஸகல தேவதைகளுக்குள்ளும் ஸ்ரீமஹாவிஷ்ணுவே பரன், அக்னி கடையான தேவதை என்று இதில் நிஷ்கர்ஷிக்கப்பட்டது. இதைக்கொண்டே நம்மாழ்வார் திருவாய்மொழியில் "மனிசர்க்குத் தேவர்போலத் தேவர்க்கும் தேவாவோ" என்றருளிச்செய்தார்.

வேதத்தில் 'விஷ்ணு' என வருமிடங்களில் ஸ்ரீ மஹாவிஷ்ணு விவக்ஷிதனல்லன் என்று சிலர் சொல்லுவதை நாம் செவியேற்போமல்லோம். "உருக்ரமாய விஷ்ணவே," என்றும் "உருகாயாய விஷ்ணவே" என்றும் ஓதியிருப்பதை வைதிகர்கள் உணர்வர்கள். உலகளந்த சரிதையை உணர்த்துவது உருக்ரமபதம். கண்ணன் வேணுகானம் செய்ததை உணர்த்துவது உருகாயபதம். உருகாய என்றவிடத்தில் ககாரமானது, கவர்க த்ருதீயம். "உரு—காயதி இதி உருகாய:". மிகநன்றாகப் பாடுமவன் என்றபடி. இப்படிப்பட்ட ஸ்ரீ மஹாவிஷ்ணுவுக்கே பரத்வாதிகளைப் பேணுமவர்களான வைணவர்களே வைதிகர்களாவர்.

## (2) ஜீவாத்மாவைப்பற்றி

ஜீவாத்மாவுக்கு சேஷத்வமும், அநந்யார்ஹ சேஷத்வமும் வடிக்கட்டின வடிவமென்று கீழே சொன்னோம். வைணவர்கள் அல்லாதார்க்கு இச்சொற்களும் தெரியாது, இவற்றின் பொருளும் தெரியாது. க்ருஷ்ண யஜுர் வேதத்தில் மூன்றாவது அஷ்டகத்தின் ஏழாவது ப்ரச்னமான அச்சித்ரத்தில் "யோஹமஸ்மி ஸ ஸந் யஜே" என்று சேஷத்வத்தைச் சொல்லி (அவ்விடத்திலேயே) "யஸ்யாஸ்மி ந தம் அந்தரேமி" என்று அநந்யார்ஹ சேஷத்வத்தைச் சொல்லிற்று. இந்த வேதவாக்யத்தின் பொருளாவது—அஹம் யஸ்ய அஸ்மி தம் அந்தரா நைமி—நான் எந்தப் பரனொருவனுக்கு உரியேனோ அவனை யன்றிப் பிறிதொரு தெய்வத்தினிடம் செல்லமாட்டேனென்கை. காடிச்சால் மூலத்தெய்வங்களைத் தொழமாட்டேன் என்கை. இச்சீரிய பொருளை அநாதிகாலமாகப் பேணிவருவது வைணவம். திருமழிசையாழ்வார் "திருவடிதன் நாமம் மறந்தும் புறந்தொழா மாந்தர்" என்றருளியது காண்க.

## (3) உபாயத்தைப்பற்றி

சரணாகதியே தஞ்சமென்பதை நம்முடைய வேதம் ஓதியிருக்கின்றதென்பதை முந்துற முன்னமே காட்டியுள்ளோம் ஆறாவது காண்டத்தில் ஐந்தாவது ப்ரச்னத்திலிருந்து. வைணவர்களல்லாதார்க்கு ப்ரபத்தி என்கிற பதமும் தெரியாது, அதன் பொருளும் தெரியாது. அது ரூபாய்க்கு எத்தனை கிலோ? என்று கேட்பர்கள். ஆக பரமாத்மாவைப்பற்றியும் ஜீவாத்மாவைப்பற்றியும் உபாயத்தைப் பற்றியும் தெளிந்த ஞானமுள்ள வைணவர்களே வேதத்தை உள்ளபடி வழிபடுமவர்களாவர்.

# மணவாள மாமுனிகளின் சிறந்ததொரு திருவாக்கு

அரங்கேசனுக்கும் ஆசார்யரான மணவாளமாமுனிகள் உபதேச ரத்தின மாலையின் தொடக்கத்தில்,

"ஆழ்வார்கள் வாழி அருளிச்செயல் வாழி
தாழ்வாது மில்குரவர் தாம்வாழி—ஏழ்பாரும்
உய்ய வவர்கள் உரைத்தவைகள் தாம்வாழி"

என்று ஆழ்வார்களுக்கும் அவர்களின் அருளிச்செயல்களுக்கும், ஆசார்யர்களுக்கும் அவர்களது திவ்யஸூக்திகளுக்கும் வாழ்த்துக்கூறியருளி அப்பாசுரத்தின் ஈற்றடியை, "செய்யமறை தன்னுடனே சேர்ந்து" என்றமைத்தருளினர். இத்தால் ஆழ்வார் ஆசார்யர்கள் திவ்ய ஸ்ரீஸூக்திகளின் வேதநறுமணம் கமழப் பெற்றவை யென்பது விளங்கும். நம்மாழ்வாரும் திருவாய்மொழி தொடங்கும்போதே 'உளன் சுடர்மிகு சுருதியுள் இவையுண்ட சுரனே" என்றருளிச்செய்தார்.

# திருவரங்கம் பெரிய கோயிலில் ஓர் அமைப்பு

ஸ்ரீரங்கநாதன் ஸந்நிதிக்குள் சந்திரபுஷ்கரிணி யுள்ளதை அனைவருமறிவர். அதற்குக் கிழக்கே வாஸுதேவப்பெருமாள் ஸந்நிதி உள்ளது. அங்கே ஓர்

அமைப்பு. ஸ்ரீபராசரபட்டர் (இற்றைக்கு ஏறக்குறைய 900 வருஷங்களுக்கு முன்பு எழுந்தருளியிருந்தவர்.) சில வருஷங்கள் திருக்கோட்டியூரிலெழுந்தருளி யிருந்து அங்கிருந்து கோயிலுக்கு எழுந்தருளா நின்றவர் திருக்காவேரி முதலாக புனிதமான தலங்கள் பலவற்றையும் (ச்லோக மூலமாக) அனுபவித்து வருபவர் சந்த்ர புஷ்கரிணியை இரண்டு ச்லோகங்களால் அனுபவித்து, உடனே "பூர்வேண தாம் தத்வத் உதார நிம்ந ப்ரஸந்ந சீதாசய மக்நநாதா:, பராங்குசாத்யா: ப்ரதமே புமாம்ஸ: நிஷேதிவாம்ஸோ தச மாம் தயேரந்" என்றொரு சுலோகம் பணித்துள் ளார். (இதன் விரிவான பொருளை நம்முடைய ஸ்ரீரங்கராஜஸ்தவ வ்யாக்யானம் கொண்டு அறிக.) நம்மாழ்வார் முதலான ஆழ்வார்கள் பதின்மரும் வீற்றிருந்த திருக்கோலமாக அங்கு ஸேவை ஸாதித்தருள்வதை, (அதாவது அர்ச்சா மூர்த்தி யாக எழுந்தருளி யிருப்பதை) தெரிவிக்கும் சுலோகமிது. அப்படியே இற்றைக்கும் ஆழ்வார்களை நாம் ஸேவித்து வருகிறோம். ஆழ்வார்களின் உத்ஸவ மூர்த்திகள் ஆளவந்தார் காலத்திலோ எம்பெருமானார் காலத்திலோ ஏறியருளப் பண்ணப்பட் டிருக்கலாம். மேலே குறித்த சுலோகத்தில் காணும் மூலமூர்த்திகள், புராதன மானவை யென்பதில் ஐயமில்லை. ஒருவர்க்கு விக்ரஹப்ரதிஷ்டை ஏற்படவேணுமே யானால் அது அவருடைய வாழ்நாளுக்கு ஸமீபத்தில் ஏற்படாது. அவருடைய புகழ் உலகில் நெடுங்காலம் பரவினபின்பு ஏற்படக்கூடியது. இவ்விஷயங்களையெல் லாம் இப்போலி வைணவர்க்கு நாம் தெரிவிக்கிறோமல்லோம்; இவற்றை யறியாத ஆஸ்திக வைணவர் பலருக்குத் தெரிவிக்கிறோம்.

வேதமோதின இப்போலி வைணவர் "அத்ப்யஸ் ஸம்பூதோ ஹிரண்யகர்ப்ப இத்யஷ்டௌ" என்கிற வாக்கியத்தை ஓதியிருப்பரே. இந்த வாக்கியத்தில் "ஹிரண்யகர்ப்ப இத்யஷ்டௌ" என்று பொறிக்கப்பட்ட எட்டு ருக்குக்கள் நமது யஜுஸ் ஸம்ஹிதையில் நான்காவது காண்டத்தில் முதல் ப்ரச்நத்தில் "ஊர்த்வா அஸ்ய ஸமிதோ பவந்தி" என்று தொடங்குமநுவாகத்தில் வரிசையாக ஓதப்பட் டுள்ளன. இவ்வெட்டு ருக்குக்களாலும் கூறப்பட்ட பொருள் எதுவோ அது வைணவ ஸம்பிரதாயத்தவர்களாலேயே ஆதரிக்கப்பட்டு வருகின்றது. சோளஸிம்ஹபுரம் தொட்டயாசார்ய ஸ்வாமி (சண்டமாருதகாரர்) தாம் பணித்த பஞ்ச விஜயங்களில் ஒன்றான பரிகரவிஜயத்தில் இந்த எட்டு ருக்குக்களையுமெடுத்து விபுல வியாக்கியானம் செய்தருளியுள்ளார்.

இந்த ருக்குக்களின் அர்த்தங்களை வைணவரல்லாத அந்தணர்களும் சேமித்து வருகிறார்களென்று இந்தப் போலிவைணவர் சொல்லி உய்யகில்லார். இவற்றுள் இரண்டு ருக்குக்கள் ஏழாவது காண்டம் ஐந்தாவது ப்ரச்நத்திலும் ஓதப் பட்டிராநின்றன, "ய ஆத்மதா பலதா யஸ்ய விச்வ உபாஸதே ப்ரசிஷம் யஸ்ய தேவா:, யஸ்யச் சாயா அம்ருதம் யஸ்ய ம்ருத்யு: கஸ்மை தேவாய ஹவிஷா விதேம" என்றிருக்குமதை வைணவரல்லாதார் ஓதியும் ஓதுவித்துக் கொண்டு மிருக்கலாமே யொழிய ஒரு ஸதஸ்ஸில் பொருளை விவரிக்கத் தொடங்கினால், வாய் குழறித் தத்தளிக்க வேண்டியதேயாகுமன்றோ?

இந்த ருக்கின் பொருளை ஆழ்வார்கள் கூறுகொண்டு அநுபவித்துப் பாசுர மிட்டருளியுள்ளார்கள். இதில் (ஆத்மதா:) என்றதை நம்மாழ்வார் திருவாய்

மொழியில் "எற்பரனென்னை யாக்கிக் கொண்டு எனக்கே தன்னைத் தந்த கற்பகம்" என்று மொழி பெயர்த்தருளினர். (பலதா:) என்றதைத் திருமங்கையாழ்வார் "வலந்தரும்—நாராயணவென்னும் நாமம்" என்று பொறித்தருளினர். "யஸ்ய ப்ரசிஷம் விச்வே தேவா உபாஸதே" என்றதை நம்மாழ்வார் திருவாசிரியத்தில் "ஆணைமெய் பெறநடாய தெய்வம் மூவரில் முதல்வனுகி" என்று பொறித்தருளினர். "யஸ்ய சாயா அம்ருதம் யஸ்ய ம்ருத்யு:" என்பதை "அருளார் திருச்சக்கரத்தால் அகல் விசும்பும் நிலனும் இருளார் வினைகெடச் செங்கோல் நடாவுதிர்" என்ற பாசுரத்தில் நம்மாழ்வாரும், "பொங்கோதஞ் சூழ்ந்தபுவனியும் விண்ணுலகும் அங்காதுஞ் சோராமே ஆள்கின்ற வெம்பெருமான்" என்ற பாசுரத்தில் சூடிக்கொடுத்த நாச்சியாரும் பொறித்துவைத்தனர். "விஷ்ணோ: பதே பரமே மத்வ உத்ஸ:" என்று ஓதினதை "உன்தேனே மலரும திருப்பாதம்" என்று பொறித்தனர். 'ஸஹஸ்ரசீர்ஷா புருஷ:' இத்யாதி ச்ருதியை நம்மாழ்வார் *தோள்களாயிரத்தாய் முடிகளாயிரத்தாய் துணைமலர்க்கண்களாயிரத்தாய் தாள்களாயிரத்தாய்* என்றருளினர்.

இங்ஙனே விவரிக்குமிடத்து வேதம் முழுதும் வைணவமாகக் காணும்.

## வேதமுணர்த்திய வைணவக்கொள்கை யொன்று

வேதத்தோடு இணங்காத வைணவக்கொள்கை ஏதுமில்லை யென்பது சிலாலிகிதம். அத்தகைய கொள்கைளில் மிகச்சிறந்த கொள்கை ஒன்று. அதாவது பரகதஸ்வீகாரமென்பது. எம்பெருமானை நாம் பற்றினலும் பற்றுவிப்பவன் அவனே என்பது இதன் ஸாரமான கருத்து. இதை ப்ரஹ்ம காண்டம் தெளிவித்திருப்பது போலவே கர்மகாண்டமும் தெளிவித்துள்ளது. ப்ரஹ்ம காண்டத்தில் "நாயமாத்மா ப்ரவசநேந லப்ய: ந மேதயா ந பஹுநா ச்ருதேந யமேவைஷ வ்ருணுதே தேந லப்ய:" என்கிற ச்ருதியை பகவத்ராமாநுஜர் பலவிடங்களில் எடுத்து விளக்கியுள்ளார் என்பது நிற்க. கர்மகாண்டத்தில் கேண்மின். தைத்திரீய ஸம்ஹிதையில் முதற்காண்டம் ஆறுவது ப்ரச்நத்தில் *ப்ரஜாபதிம் த்வோ வேத ப்ரஜாபதிஸ்த்வம் வேத யம் ப்ரஜாபதிர்வேத ஸ புண்யோ பவதி* என்றுள்ள வாக்கியத்தை *நிவேதயத மாம் க்ஷிப்ரம்* என்றவிடத்தில் பெரியவாச்சான்பிள்ளை காட்டியருளுகிறர். இந்த வாக்கியத்தில் ப்ரஜாபதி என்றது நிருபாதிக ப்ரஜாபதியான எம்பெருமானைச் சொல்லுகிறது. கீதையில் *ஸஹ யஜ்ஞை:ப்ரஜாஸ் ஸ்ருஷ்ட்வா புரோவாச ப்ரஜாபதி:* என்றதுபோல. அவ்விடத்தில் சங்கர பாஷ்யம் வேறுவகைப்பட்டிருந்தாலும் ராமாநுஜ பாஷ்யமே பொருத்தமானதென்று வேதாந்த தேசிகன் விளக்கியுள்ளார். அது நிற்க. எம்பெருமானை ஒருவன் பற்றுகிறன். எம்பெருமான் ஒருவனைப் பற்றுகிறன். இவ்விருவரில் எம்பெருமானுல் பற்றப்படுபவனே சிறந்தவன் என்னும் பொருளை ஓதுகின்றது இந்த வாக்கியம். "த்வோவேத" என்பதும் "த்வம்வேத" என்பதும் முழுப்பதம். இவ்வர்த்தம் வைணவரல்லாதார்க்கு ருசிக்க விரகில்லை.

நிகழும் வருஷத்தின் லக்கம் 1973 என்பவர்கள் இந்த ப்ரபஞ்ச ஸ்ருஷ்டியாகி இத்தனை வருஷங்கள் தான் ஆயின வென்றும் அதற்கு முன்பு இந்த ஸம்

ஸாரமண்டல மென்பதே கிடையாதென்றும் கூறிவருகிறுர்கள். அன்னவர்களின் திரளிலே சேர்ந்தவரேயிவர். பகவத் கீதை நான்காமத்யாயத் தொடக்கத்தில் 'இமம் விவஸ்வதே யோகம் ப்ரோக்தவாஹமவ்யயம்' என்று கூறின கண்ணபிரானை நோக்கி அர்ஜுநன்

' அவரம் பவதோ ஜந்ம பரம் ஜந்ம விவஸ்வத:,
கதமேதத் விஜாநீயாம் த்வமாதௌ ப்ரோக்தவாநிதி''

என்றுன். அவ்விடத்து பாஷ்யத்தில் நம் ஸ்வாமி எம்பெருமானுர் விவஸ்வத ச்சஜந்ம கால ஸங்க்யயா பரம் — அஷ்டாவிம்சதி சதுர் யுக ஸங்க்யாஸங்க்யாதம் — என்றருளிச் செய்துள்ளார். இத்தால் ஸ்ரீக்ருஷ்ண பரமாத்மாவிடம் உபதேசம் பெற்ற விவஸ்வானுடைய காலம் க்ருதத்ரேதாத்வாபரயுகங்களின் இருபத்தெட்டு பர்யாயங்களுக்கு முற்பட்ட தென்று தெரியவருகிறது. அப்போதே தான் விவஸ்வானுக்குச் சொல்வதும் விவஸ்வான் மநுவுக்குச் சொல்வதும் மநு இக்ஷ்வாகுவுக்குச் சொல்வதுமான பரம்பரை நிகழ்ந்து வந்திருப்பது நிஸ்ஸந்தேஹமாகிறது. நம்முடைய வைணவ மும் அப்போதேயிருந்ததென்பதில் ஐயமில்லை. அதனையும் பாஷ்யகாரருடைய ஸ்ரீஸூக்தி கொண்டே தெரிவிக்கிறேம் கேண்மின். அவரம் பவதோ ஜந்மேத் யாதியாலே கேள்வி கேட்ட அர்ஜுநனுக்குக் கண்ணன் விடை கூறிவருகையில் (4-8) பரித்ராணய ஸாதூநாம் இத்யாதி ச்லோகமுள்ளது. அதில் ஸாதூநாம் என்பதற்கு பாஷ்யமருளிச் செய்யா நின்ற ஸ்வாமி

''ஸாதவ: — உக்த லக்ஷண தர்மசீலா: வைஷ்ணவாக்ரேஸரா: மத்ஸமாச்ர யணே ப்ரவ்ருத்தா: மந்நாமகர்மஸ்வரூபாணாம் வாங்மநஸாகோசரதயா மத்தர்சநேந விநா ஸ்வாத்ம தாரணபோஷணுதிகமலபமாநா: க்ஷணமாத்ர காலம் கல்ப ஸஹஸ்ரம் மந்வாநா: ப்ரசிதில ஸர்வகாத்ரா பவேயுரிதி மத்ஸ்வ ரூப சேஷ்டிதாவலோகநாலாபாதி தாநேந தேஷாம் பரித்ராணய''

இத்யாதி பரம போக்ய பங்க்திகளைப் பொறித்துள்ளார் இத்தால் எம்பெருமான் அவதரிக்கும் தோறும் வைஷ்ணவாக்ரேஸரர்கள் விளங்கியுள்ளார்களென்பது கல்வெட்டாகத் தேறுகிறது. எம்பெருமான் என்றைக்கு அவதரிக்கத் தொடங்கினு னென்பதை 'அஜாயமாநோ பஹுதா விஜாயதே' என்றும், 'ஸ உச்ரேயாந் பவதி ஜாயமாந:'' என்றும் ''பிதா புத்ரேண பித்ருமாந் யோநியோநௌ'' என்றுமுள்ள ச்ருதிகளாலும் 'பஹூநி மே வ்யதீதாநி ஜந்மாநி' என்கிற கீதா வசனத்தா லும் அறிந்து கொள்க. இத்தகைய திவ்யஸூக்திகளை அம்ருதமாகப் பானம் பண்ணி வாழ்கிற நாம் இவற்றை விஷமாக நினைக்கிறவிவர்க்கு எடுத்துக் காட்ட வும் லஜ்ஜிக்கிறேம். மன்னார்குடியில் அண்ணுஸாமி ஐயங்கார் வித்வத் ஸபைக்கு நாம் சென்று கொண்டிருந்த காலத்தில் ஒரு ஸம்வத்ஸரத்தில் இவ ருடைய தகப்பனர் (தாது ஸ்வாமி என்பவர்) ஸபையில் ச்ரோதாவாக இருந்தார். அங்கே இந்த விஷயங்களை யெல்லாம் நாமெடுத்து உபந்யஸித்தபோது 'நய நேந உத்கீர்ண பாஷ்பாம்புநா—காத்ரைஸ் ஸரோமோத்கமை:' என்னும்படி யிருந்ததை அடிக்கடி நினைத்து மகிழ்கிறேன்.

ஆசார்ய ஹ்ருதயத்தில்

> "மேகம் பருகின ஸமுத்ராம்புபோலே நூற்கடற் சொல் இவர் வாயன வாய்த் திருந்தினவாறே ஸர்வதா ஸர்வோபஜீவ்யமாமே"

என்கிற சூர்ணையையும்,

> "தமிழ்மாமுனிதிக்கு சரண்யமென்றவர்களாலே க்வசித் க்வசித்தென்று இவராவிர்ப்பாவம் கலியும் கெடும்போலே ஸூசிதம்"

என்ற சூர்ணையையும் ஸேவித்த தேசிகன் தமது குருபரம்பரா ஸாரமென்னும் ரஹஸ்யத்தில் இவ்விரண்டு சூர்ணைகளையும் வ்யாக்யானித்தருளினர். எங்ஙனே யென்னில், கேண்மின்.

"........பராங்குச பரகாலாதி ரூபத்தாலே அபிநவமாக ஒரு தசாவதாரம் பண்ணி மேகங்கள் ஸமுத்ர ஜலத்தை வாங்கி ஸர்வோபஜீவ்யமான தண்ணீராக உமிழுமாப்போலே வேதார்த்தங்களில் வேண்டும் ஸாரதமாம்சத்தை ஸர்வருக்கும் அதிகரிக்கலான பாஷையாலே ஸங்க்ரஹித்துக் காட்டியும், இப்படி தான் ப்ரவர்த்திப்பித்த ஸத்பதத்துக்கு ப்ரகடராயும் ப்ரச்சந்நராயும் இருந்துள்ள பாஷண்டிகளால் உபரோதம் வாராமைக்காக, "ஸாக்ஷாந் நாராயணோ தேவ: க்ருத்வா மர்த்யமயீம் தநும், மக்நாதுத்தரதே லோகாந் காருண்யாச்சாஸ்த்ர பாணிநா" என்றும், 'பீதகவாடைப்பிரானர் பிரம குருவாகி வந்து' என்றும் சொல்லுகிற படியே அகஸ்த்யஸேவிதமான தேசத்திலே அனேக தேசிகாபதேசத்தாலே அவதரித்தருளினன். இத்தைக் கணிசித்து: "கலௌ கலு பவிஷ்யந்தி நாராயணபராயணா:, க்வசித் க்வசிந்மஹாபாக! த்ரமிடேஷுச பூரிச:, தாம்ரபர்ணீ நதீ யத்ர க்ருதமாலா பயஸ்விநீ, காவேரீ ச மஹாபாகா ப்ரதீசீ ச மஹாநதீ" என்று மஹர்ஷி அருளிச்செய்தான்"

இந்த ச்லோகங்கள் ஸ்ரீபாகவதத்தில் பதினோராவது ஸ்கந்தத்தில் ஐந்தாமத்யாயத்தில் விளங்குமவை. இந்த ச்லோகங்களில் தாம்ரபர்ணீ, க்ருதமாலா, பயஸ்விநீ (அதாவது பாலாறு) காவேரீ, ப்ரதீசீ என்கிற ஐந்து நதிகள் குறிப்பிடப் பட்டுள்ளன. நம் ஆழ்வார்கள் இந்நதிகளின் கரையிலேயே திருவவதரித்தவர்கள். நம்மாழ்வாரும் மதுரகவியாழ்வாரும் தாம்ரபர்ணிக்கரையில். பெரியாழ்வாரும் ஆண்டாளும் க்ருதமாலா நதிக்கரையில். முதலாழ்வார்களும் திருமழிசையாழ்வாரும் பாலாற்றங் கரையில். தொண்டரடிப்பொடியாழ்வார், திருப்பாணாழ்வார், திருமங்கையாழ்வார் ஆகியமூவரும் காவிரிக் கரையில். ப்ரதீசீ என்பது கிழக்கிலிருந்து மேற்கே பெருகும்நதி. அது மலை நாட்டிலுள்ளது. அதன் கரையில் குலசேகராழ்வார் அவதரித்தார். இந்த நதிகளின் கரைகளில் சிவபக்தர்களான நாயன்மார்களும் தோன்றியிருந்தாலும் "நாராயணபராயணா: பவிஷ்யந்தி" என்றும் "தேஷாம் நாராயணே பக்தி:" என்றும் கூறியவற்றால் அவர்கள் தள்ளுண்டனர். ஆகவித்தால் இந்தப் போலிவைணவர் நினைக்கிறபடி வைணவம் புதியதன்று, புராதனம் என்பது நிலை நாட்டப்பட்ட தாயிற்று.

# போலிவைணவரின் ஓர் அபத்தமான வார்த்தை

எழுதுகிறுரிவர் ''வேதத்தில் யாகங்களே சொல்லப்பட்டுள்ளன. உருவ வழிபாடு சொல்லப் படவில்லை'' என்று.முறைப்படி வேத மோதினவர்கள் இங்ஙன மெழுதார்கள். தைத்திரீய ஸம்ஹிதை நான்காவது காண்டத்தின் உபக்ரமத்தில் ''யஸ்ய ப்ரயாணமநு அந்ய யித் யயு: தேவா தேவஸ்ய மஹிமாநமர்ச்சத:'' என்றுள்ள வாக்கியமானது ஸ்ரீமஹாவிஷ்ணுவின் அர்ச்சா மூர்த்தியையும் அவருடைய உத்ஸவயாத்திரையையும் அவரைப்பின் தொடர்ந்து செல்லும் நிலத்தேவர்களின் கோஷ்டியையும் ஸ்பஷ்டமாகத் தெரிவிக்கின்றது. 'ச்சந்தஸி பஹுளம்' என்ற ஸூத்ரத்தின்படி 'அர்ச்சத:' என்கிறபதம் கர்த்தரியாயிருந்தாலும் கர்மணியாகக் கொள்ளவேணும். 'அர்ச்யமாநஸ்ய தேவஸ்ய ப்ரயாணமநு அந்யே தேவா: யயு:' என்று அந்வயித்துப் பொருள் காண்க. அந்த எம்பெருமான் ஸ்ரீ மஹாவிஷ்ணுவே என்பதை ''ய: பார்த்திவாநி விமமே'' என்கிற அடுத்த வாக்கியம் விளக்குகின்றது. இதையெல்லாம் ஊமையரோடு செவிடர்வார்த்தையாகு மித்தனே.

# அன்பார்ந்த ஆஸ்திக நண்பர்களுக்கு

''தெரித்தெழுதி வாசித்துங் கேட்டும் வணங்கி வழிபட்டும் பூசித்தும் போக்கினேன் போது'' என்ற திருமழிசைப் பிரா னருளிச்செயலின் படி போதுபோக்கிவரும் நமக்கு இப்போலி வைணவரின் பொய்யுரைகளை ஆராய்ச்சி செய்வதில் போதைப் போக்குவது மிகமிக வருந்தத் தக்கதும், வெறுக்கத் தக்கதுமே ஆகின்றது. ஸஹஸ்ரநாம பாஷ்யத்தில் பட்டர் ஓரிடத்தில் *நதே நிரஸநீயா: அபி து சோசநீயா:* என்று அருளிச்செய்தபடி இவரை நிரஸனவிஷயமாக்காமல் சோக விஷயமாக்கி நிற்றலே உற்றது. ஒருகால் திருக்குடந்தையிலிருந்து ஒரு.நண்பர் காஞ்சிக்கு வந்தபோது அகல்யையைப்பற்றிச் சாதிக்கவேணுமென்று கேட்க, தேசிகன் *நமஸ் தஸ்மை கஸ்மைசநபவது* என்ற மங்களச்லோகமொன்றில் *ஸூராதீச ஸ்வைர க்ஷண குபித ஸாபாயுத வதூ த்ருஷத்தா துர்ஜாத ப்ரசமன பதாம்போஜ ரஜஸே*, என்றும், பாதுகாஸஹஸ்ரத்தில் *யோஷித்பூதத்ருஷந்தி*, என்றும் ரஹஸ்யத்ரயஸாரத்தில் *சிலாதே: ஸ்த்ரீத்வாதி:*, என்றும் ........ஸாதித்திருப்பவற்றை நாம் எடுத்துரைக்கக்கேட்ட அவர் மனமுவந்து சென்று இப்போலி வைணவரிடம் இவற்றை எடுத்துரைக்க அவை கேட்டவிவர் ''இதெல்லாம் பேத்தல்கள், பித்துக்கொள்ளிகளின் பேத்தல்கள்'' என்று சொன்னாராம். ஒரு ஆசார்யரையும் பேணுமல் ஒரு ப்ரமாணத்தையும் சாராமல் சண்டவாபிதற்றித் திரிகின்றவர்களின் பேத்தல்களை ''கலையறக்கற்ற மாந்தர் காண்பரோ கேட்பரோ தான்'' என்ற திருமாலைப் பாசுரப்படி கண்ணிலும் செவியிலும் கொள்ளாதே கிடப்பதுதான் ஸ்வரூபாநுரூபம். ஆயினும் கலங்கினவர்களைத் தெளிவிப்பது கடமையாகும். ஆஸ்திகர்களும், பிராமாணிகர்களுமான பல மகான்கள் இத்தொண்டில் பங்கு கொள்ளவேணும். இப்போலிவைணவர் தமது சுவடியில் ஆளவந்தார், எம்பெருமானர், பிள்ளைலோகாசாரியர், வேதாந்ததேசிகர், மணவாளமாமுனிகள், ப்ரதிவாதிபயங்கரமண்ணன் என்று நம் ஆசார்யர்களின் திருநாமங்களைப் பொறித்திருப்பதற்கு இறையேனும் தகுதியற்றவர். இதை இவருடைய நெஞ்சமே யுணரும்.

(தொடரும்)

ஸ்ரீ:

பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்



ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்

ஸ்ரீகாஞ்சீ. ப்ரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசாரியார் எழுதிய

# வேதாந்த தேசிக ஸித்தாந்தஸாரம்

(ச்லோகம்)

நிகமாந்த குருத்தம ஸூக்திததீ:
நிகமாஞ்சல யுக்ம மஹார்த்த மயீ:
நிகமாந்த யுகாம்புதி மக்ந ஹ்ருதாம்
ஹ்ருதயே நிததே ரஸிகா:! பிபத.

உபயவேதாந்தக் கடலில் ஆழ்ந்த பொருள்களை எடுத்துரைக்குமவையான ஸ்ரீமந் நிகமாந்த மஹாகுருவின் ஸ்ரீஸூக்திகளை உபயவேதாந்த ஸாகர பாரங்கதர்களின் உள்ளத்தில் பதியவைக்கிறேன். ரஸிகர்கள் அநுபவிக்க வேணுமென்கை.

(வெண்பாக்கள்)

வேதக் கடல்கடைந்த வேதாந்த வாசிரியன்
போதக் கடலாய்ப் புனிதமாய்க்—கோதற்ற
தேன்மொழிகள் தந்தருளித் தீய பொருள்திரளைத்
தானொழித்தான் தாளே சரண்.

தேசார்ந்த தேசிகனார் தேர்ந்தருளிச் செய்தபல
வாசா மகோசரமாம் வாய்மொழியால்—மாசார்ந்த
தீயபொரு ளனைத்தும் தீயினில் தூசாகிப்
போயின வெண்பதுரைப் போம்.

—முன்னுரை—

"நாதோபஜ்ஞம் ப்ரவ்ருத்தம் பஹுபிருபசிதம் யாமுநேய ப்ரபந்தை: த்ராதம் ஸம்யக் யதீந்த்ரைரிதமகிலதம: கர்சநம் தர்சநம் ந:" என்கிற தேசிக ஸூக்திப்படியே, நம்மாழ்வார் திருவருளால் ஸகலார்த்த விசேஷங்களையும் நிதிபெற்றாற்போலே பெற்றுவாழ்ந்த ஸ்ரீமந்நாதமுனிகள் அநுஸந்தித்துக்கொண்டிருந்த ஸத்ஸம்ப்ரதாயார்த்தங்களை மணக்கால்நம்பி வழியாக லபிக்கப்பெற்ற ஆளவந்தார் அவ்வர்த்த விசேஷங்களைத் தம்முடைய திவ்யகடாக்ஷ மூலமாகவும் பெரியநம்பி திருமலைநம்பி திருக்கோட்டியூர்நம்பி திருமாலையாண்டான் முதலான ஸ்வசிஷ்ய வர்க்க மூலமாகவும் எம்பெருமானார் பக்கலிலே தேக்கியருள, அவை எம்பார் ஆழ்வான் பட்டர் நஞ்சீயர் நம்பிள்ளை முதலான ஆசாரியர்களின் வழியாகவும், திருக்குருகைப்பிரான்பிள்ளான் கிடாம்பியாச்சான் எங்களாழ்வான் நடாதூரம்மாள் முதலான ஆசார்யர்களின் வழியாகவும் ப்ரவஹித்து அஸ்மதாதி ஸம்ஸாரி சேதந ஸமுஜ்ஜீவந ஸாதனங்களாய் விளங்கி வாரா நின்றன.

மேலே நிர்தேசித்த ஆசார்யவர்யர்கள் பேசிற்றே பேசும் ஏககண்டர்களா கையாலே இவர்களின் திவ்யஸூக்திகளிலே அர்த்தபேதம் காண்கைக்கு அவகாச மில்லை. ஸ்வல்பயோஜனுபேதம் கண்டால் காணலாமத்தனை. இது ஸம்ப்ரதாய பரி சுத்தியில்—"ஸ்ரீபாஷ்யகாரருடைய சிஷ்ய ஸம்ப்ரதாயங்களில் ஒன்றிலும் அர்த்த விரோதமில்லை. வாக்ய யோஜநா பேதமே யுள்ளது. தேசகாலாவஸ்தா விசேஷங் களாலே வரும் அநுஷ்டான வைஷம்யம் சாஸ்த்ராநுமதம்" என்கிற ஸ்ரீஸூக்தியினு லும் விசதம். இவ்வுண்மையை யுணராதார் சிலர், வேதாந்தவாசிரியர் தனிப்பட் டிருந்து வேறுபட்ட கொள்கைகளைக் கொண்டிருந்தாரென்றும், நம்பிள்ளை, பிள்ளை லோகாசாரியர் முதலானோர் கொண்டிருந்த கொள்கைகளை அசாஸ்த்ரீயங்களென்று கண்டித்துவிட்டாரென்றும் சொல்லிப்போருவது ஆதாரமற்றதென்பதையும், நவீ நர்கள் ஆதரித்துவருகிற அர்த்தங்களுக்கும் ஆசரித்துப் போருகிற அனுஷ்டானங் களுக் நம் வேதாந்ததேசிக க்ரந்தங்களில் ஆதாரமில்லையென்பதையும் ஸாரமாகவும் ஸம்க்ஷேபமாகவும் உபபாதிப்போமிதில்.

பல துறைகளிலும் அமைந்த நமது நூல்களில் ஸம்ப்ரதாயார்த்தத் துறை நூல்கள் நூற்றுக்கு மேற்பட்டவை. அவற்றில் நாம் ஸம்க்ஷேபமாகவும் விஸ்தர மாகவும் உபபாதியாத விஷயமில்லை. அவற்றைக் காணுத ஸ்ரீவைஷ்ணவர்களு மில்லை. அவற்றைக்கண்ட சிலர் சொல்லுவதென்னவென்றால் "தேசிக ஸூக்தி களில் சிலவற்றை இவர் எடுத்துக்காட்டிச் சிலரை மயக்குகிறார்"—என்று. அப் படிப் பேசுமவர்கள் ஸ்வாத்மவஞ்சனையாகவும் உலக வஞ்சனையாகவுமே பேசுகிறார் களென்பதை நன்கு நிரூபிக்கவே இந்த நூலை எழுதுகிறோம். தேசிக ஸூக்திகளைக் கொண்டு இதில் நாம் நிரூபிக்கும் அர்த்தங்களைத் தேசிக ஸூக்திகளைக் கொண்டே கண்டிக்க வேணுமென்று ப்ரார்த்திக்கிறோம்.

## உபய ஸம்ப்ரதாயத்திலுமுள்ள முக்கியமான ஒரு வாசி.

தென்னுசார்ய ஸம்பிரதாயத்தில் ஆதரிக்கப்படும் அர்த்தங்கள் எவை? வட கலை ஸம்பிரதாயத்தில் ஆதரிக்கப்படும் அர்த்தங்கள் எவை? என்று பலர் தெரிந்து கொள்ள விரும்புகிறார்கள். அவற்றை இன்னவை யின்னவையென்று அடுத்தபடியா கத் தெரிவிப்போம். அதற்குமுன்னே ஸாரமாக வொன்று தெரிவிக்கிறோம். நற்கதி பெறவேணுமென்கிற நசை இரு கலையார்க்கும் துல்யமாயிருக்கச் செய்தேயும், நாம் பேறு பெறுவதற்கு முக்கிய ஸாதனம் பகவத் ப்ரவ்ருத்தியே யல்லது ஸ்வப்ரவ்ருத்தி யன்று என்பது தென்னுசாரியர்களின் கொள்கை. நம்முடைய ப்ரவ்ருத்தியினால் தான் நாம் பேறு பெற முடியுமென்பது மற்றையோர்களின் கொள்கை. இதுதான் இரு கலையார்க்கும் தலையான பேதமென்று ஸாரமாகக் கொள்ளக்கடவது. மற் றைப்படியான பேதங்களாவன—

| தென்கலை ஸம்ப்ரதாயார்த்தங்கள். | வடகலை ஸம்ப்ரதாயார்த்தங்கள் |
|---|---|
| 1. பகவத்க்ருபை நிர்ஹேதுகம் | 1. பகவத் க்ருபை ஸஹேதுகம் |
| 2. சேதநனைப்பெறுவது ஈச்வரனுக்குப் பேறு | 2. ஈச்வரனைப்பெறுவது சேதநனுக்குப் பேறு |

3. பரகத ஸ்வீகாரமே நன்று
4. ப்ரபத்தி அநுபாயம்
5. பிராட்டிக்குப் புருஷகாரத்வ மாத்ரமேயுள்ளது, உபாயத்வமில்லை
6. பிராட்டிக்கு அணுத்வமேயுள்ளது
7. பிராட்டிக்கு ஜகத்காரணத்வமில்லை
8. தயை என்பது பரது:கது:கித்வம்
9. வாத்ஸல்யம் தோஷபோக்யதா ரூபம்
10. ப்ரபந்நனுக்கு விஹிதவிஷய நிவ்ருத்தி தன்னேற்றம்
11. எம்பெருமானுடைய வ்யாப்தி பரிஸமாப்ய வர்த்தநம்
12. ஜாதி நசிக்கும்
13. உபாயாந்தரங்கள் ஸ்வரூப விருத்தம்
14. கைவல்ய மோக்ஷம் புநராவ்ருத்தி யற்றது
15. நமஸ்காரம் ஸக்ருத் போதும்
16. அத்ருஷ்டார்த்தாநுஷ்டானமென்று தனியே யில்லை

3. ஸ்வகதஸ்வீகாரமேதான் உள்ளது
4. ப்ரபத்தி உபாயம்
5. பிராட்டிக்கு புருஷகாரத்வத்தோடு மோக்ஷப்ரதாத்ருத்வமுமுண்டு
6. பிராட்டிக்கு விபுத்வமே யுள்ளது
7. பிராட்டிக்கு ஜகத்காரணத்வமுண்டு
8. தயை பரது:க நிராசிகீர்ஷை
9. வாத்ஸல்யம் தோஷாதர்சித்வரூபம்
10. விஹிதவிஷய ப்ரவ்ருத்தி அவர்ஜநீயம்
11. எம்பெருமானுக்கு பரிஸமாப்ய வர்த்தநம் கிடையாது
12. ஜாதி நசிக்கமாட்டாது
13. உபாயாந்தரங்கள் ஸ்வரூபாநுரூபமே
14. கைவல்ய மோக்ஷத்திற்குப் புநராவ்ருத்தியுண்டு
15. அஸக்ருந் நமஸ்காரம் வேண்டும்
16. அத்ருஷ்டார்த்தாநுஷ்டானம் தனிப்பட ஆவச்யகம்

இப்படியொரு பதினாறு விஷயங்களை வைத்துக்கொள்வோம். "இப்பதினாறு விஷயங்களில் தானா பேதம்? வேறு கிடையாதா?" என்று கேட்கவேண்டாம். மற்றும் சிலவோ பலவோ இருக்கலாம்; அவை முக்யமானவை யல்லவென்று விடுக்கத் தக்கன. முக்கியமான விஷயங்களைச் சர்ச்சிக்கும்போது அவாந்தர விஷயங்களாகக் கிளரும் பேதங்களை இங்குக் கொள்ளவில்லை.

மேலே காட்டிய பேத விஷயங்களில் தென்கலை ஸம்ப்ரதாயார்த்தங்களென்று நம்காட்டியுள்ள அர்த்தங்களை தென்னாசார்யர்களென்று ப்ரஸித்தர்களான ஸதாசார்யர்களின் ஸ்ரீஸூக்திகளிற் போலவே ஸ்ரீமந் நிகமாந்த மஹாகுரு திவ்யஸூக்திகளிலும் காண்கிறோம். இதை மட்டும் விளக்கவே இச்சிறு நூல் அவதரிக்கின்றது. இதராசார்ய ஸூக்திகளையும்காட்டி விஸ்தரம் செய்யாமல் தேசிகஸூக்திகளை மட்டுமே காட்டி நிற்போமிதில்.

{ மதுராந்தகம் வீரராகவார்யாந் மதுரார்த்தாவகமோத்ஸுகாந் பஹுஜ்ஞாந்
விதிதாகிலதேசிகோக்திதத்வாநிஹ கர்த்தும் கலயே நிபந்த மேதம். }

(மதுராந்தக ஸ்வாமிக்கு தேசிக ஸூக்திதத்வங்களை உணர்த்தவே இந்நூலை இயற்றுகிறேனென்கை.)

## 1. பகவத்க்ருபை நிர்ஹேதுகம்

பகவத்க்ருபை நிர்ஹேதுகமென்று கொண்டால் ஸர்வமுக்தி ப்ரஸங்கம் வருமென்றும் வைஷம்ய நைர்க்ருண்யாபத்தியைப் பரிஹரிக்கின்ற "வைஷம்யநைர்க்ருண்யே ந ஸாபேக்ஷத்வாத்" என்கிற ப்ரஹ்ம ஸூத்ரம் விரோதிக்குமென்றும் சில வாதங்கள் கிளம்புவதுண்டு. உலகத்திலுள்ள ஸகல ப்ராணிகளிடத்திலும் எம்பெருமான் நிர்ஹேதுகமாகவே அருள் செய்வதாகக் கூறினால் தான் மேற்சொன்ன வாதங்களுக்கு ப்ரஸக்தியுண்டு. அப்படி யாரும் கொள்வதில்லை. அதிகாரிவிசேஷங்

களிடத்தில் நிர்ஹேதுகமாக அருள்செய்கிறனென்றே ஸகலாசார்யர்களுமருளிச் செய்வது. இக்கொள்கையில் தேசிகன் வேறுபாடுகொண்டவரல்லர். நிர்ஹேதுக க்ருபையைப் பற்றிப் பல விடங்களிற் பேசுகிறார். சில விடங்கள் காட்டினுல் போதுமன்றே.

**பரமபத ஸோபாநத்தில்**—"அஜ்ஞாத யாத்ருச்சிக ஆநுஷங்கிக ப்ராஸங்கிக ஸாமாந்ய புத்திமூல ஸுக்ருத விசேஷங்களை வியாஜமாகக்கொண்டு விசேஷகடாக்ஷம் பண்ணி" என்றருளிச்செய்தார். இதில் "**வ்யாஜமாகக் கொண்டு**" என்றதையும் ஸஹியாமல் அவ்யாஜக்ருபையையும் அருளிச்செய்து போந்தார். அது எங்கே யென்னில்; திருவாய்மொழியில் முதற்பத்தில் *பொருமா நீள்படையென்கிற பத்தாவது பதிகத்திற்கு ஆறுயிரப்படியிலில்லாத விஷயம் அவ்வாறுயிரப்படிக்குப் பிற்பட்ட வியாக்கியானங்களிலுள்ளது. அதாவது, இப்பதிகத்தினுல் ஆழ்வார் எம்பெருமானுடைய நிர்ஹேதுக க்ருபாப்ரபாவத்தை யநுபவிக்கிறரென்று பட்டர் நிர்வஹித்தருளினதாகக் காட்டப்பட்டது. அந்த நிர்வாஹத்தையே தேசிகன் ஆதரித்து த்ரமிடோபநிஷத்தாத்பர்ய ரத்நாவளியில் *ஆதாவித்தம்பரத்வம்* என்கிற ச்லோகத்தில் "அவ்யாஜோதாரபாவாத்" என்றருளிச் செய்தார். நிர்ஹேதுக க்ருபா விசிஷ்டனுகையாலே என்றபடி. இவ்விடத்தில் இரண்டு விசேஷங்கள். (1) எம்பெருமானை நிர்ஹேதுகக்ருபாவானுகச் சொன்னது ஒன்று; (2) இவ்விஷயம் ஆறுயிரப்படியில் இல்லாமல் அதற்குப்பின் தோன்றிய வியாக்கியானங்களில் மட்டும் விளங்காநிற்கவும் இதையே ஆதரித்துப் பரிக்ரஹித்தது மற்றொன்று. இங்கு முன்னமெடுத்துக்காட்டிய பரமபத ஸோபாந ஸ்ரீ ஸூக்தியானது, ஸ்ரீவசந பூஷணம் நான்காவது ப்ரகரணம் ஆரம்பத்திலுள்ளதான "த்ரிபாத்விபூதியிலே பரிபூர்ணநுபவம் நடவாநிற்க......என்னுரைச்சொன்னுய் என் பேரைச்சொன்னுய் என்னடியாரை நோக்கினுய் அவர்கள் விடாயைத் தீர்த்தாய் அவர்களுக்கொதுங்க நிழலைக் கொடுத்தாய் என்னுமாபோலே சிலவற்றை ஏறிட்டு......ஜந்ம பரம்பரைகள் தோறும் யாத்ருச்சிகம் ப்ராஸங்கிகம் ஆநுஷங்கிகமென்கிற ஸுக்ருத விசேஷங்களைக் கற்பித்துக்கொண்டு தானே அவற்றை ஒன்று பத்தாக்கி நடத்திக் கொண்டு போரும்" என்கிற ஆச்சரியமான சூர்ணையை தேசிகன் அநவரதம் சிந்தனை செய்து போந்தவரென்பதைப் பேதையருமறியும்படி அமைந்துள்ளது.

தயாசதகத்தில் *நிஷாதாநம் நேதா கபிகுலபதி: காபி சபரீ குசேல: குப்ஜா ஸா வ்ரஜயுவதயோ மால்யக்ருதிதி, அமீஷாம் நிம்நத்வம் வ்ருஷகிரிபதேருந்நதிமபி ப்ரபூதை: ஸ்ரோதோபி: ப்ரஸபமநுகம்பே! ஸமயஸி* என்கிற ச்லோக ரத்நத்தின் பொருளை உபந்யஸிக்கப் புக்கால் குஹப்பெருமாள் ஸுக்ரீவ மஹாராஜர் சபரி குசேலர் கூனி ஆய்ச்சியர் மாலாகாரர் என்னுமிவர்கள் இராமபிரானுடையவும் கண்ணபிரானுடையவும் நிர்ஹேதுக கருணைக்கு இலக்கானவர்கள் என்றல்லது வேறென்று சொல்லிப் பிழைக்க வொண்ணுதாயிற்று.

ஸ்தோத்ர க்ரந்தங்களில் பணிப்பது ப்ரசம்ஸைகபரமாதலால் அதுதன்னை சாஸ்த்ரார்த்தமாகக் கொள்ள வொண்ணுதென்று கூறவருவர்கள். முநிவாஹந போகமென்று பெயரிட்டு ரஹஸ்ய க்ரந்தமாகப் பணித்த அமலனுதிபிரான் வியாக்கியானத்தின் உபக்ரம ஸ்ரீஸூக்தி இது காணீர்;—"காரணவிசேஷம் இன்னதென்று அறுதியிட அரிதாயிருப்பதொரு பகவத் கடாக்ஷத்தாலே அயத்நலப்தமான......" என்று. இவ்விஷயத்தில் இவ்வளவே போதும். ஒரு ஹேதுவில்லாமல் எம்பெருமான் அருள் செய்யமாட்டானென்கிற வார்த்தை ஸ்ரீவைஷ்ணவ கோஷ்டிகளில் விலை செல்லுமதன்று.

## 2. சேதநனைப்பெறுவது ஈச்வரனுக்குப் பேறு

ஸம்ப்ரதாயத்தில் சேதநலாபம் ஈச்வரனுக்குப் பேறு? ஈச்வரலாபம் சேதனனுக்குப்பேறு? என்ற விசாரம் தலைமை பெற்றிருக்கும். இந்த விசாரத்தின் முடிவை உள்ளபடி தெரிந்துகொள்வதே மிகச் சிறக்கும். சாஸ்த்ரங்களை மேலெழப் பார்க்கும்போது 'ஈச்வரனை அடைவது சேதநனுக்குப் பேறு' என்பதாகவே தோற்றி நிற்கும். ஈச்வரனை ப்ராப்யனென்றும், சேதநனை ப்ராப்தாவென்றும் ஸ்பஷ்டமாகப் பல விடங்களிலும் சொல்லி யிருக்கையாலே 'ஈச்வரலாபம் சேதநனுக்குப் புருஷார்த்தம் என்றே க்ரஹிக்க நேரும். நவீநர்கள் இப்படியே மதமாகக் கொண்டிருக்கிறார்கள். "ஈச்வரனுக்குத்தான் சேதநலாபம் புருஷார்த்தம்" என்பது ஸித்தாந்தஸாரம். தேசிகனுடைய திருவுள்ளமும் சேதநலாபம் ஈச்வரனுக்குப் பேறு என்பதேயாம். இதனை அவர் கீதாபாஷ்ய தாத்பர்ய சந்த்ரிகையில் வெகு அழகாகக் காட்டியுள்ளார். கீதையில் ஒன்பதாமத்யாயத்தின் முடிவிலுள்ள *மந்மநா பவ* என்கிற ச்லோகத்தின் பாஷ்யத்திற்கு விவரண மெழுதுகையில்—"𑌆𑌶𑍍𑌰𑌿𑌤𑌸𑌂𑌰𑌕𑍍𑌷𑌣𑌂 𑌸𑍍𑌵𑌲𑌾𑌭𑌂 𑌮𑌤𑍍𑌵𑌾 𑌪𑍍𑌰𑌵𑌰𑍍𑌤𑌤𑍇" ("ஆச்ரித ஸம்ரக்ஷணம் ஸ்வலாபம் மத்வா ப்ரவர்த்ததே") என்றருளியிருக்கிறார்.

சேதநனைப் பெறுவது ஈச்வரனுக்குப் பேறு என்றால் இவ்வர்த்தம் ஹ்ருதயத்தில் அவகாஹிப்பது சிரமமேயாகும். ஆனாலும் எளிதாக உணர்த்துகிறோம். சேதநன் முக்தனாகிப் பரமபதத்தில் சென்றபின் அங்கு என்ன கோஷிக்கிறானென்பதை நம் உபநிஷத்து தெளிவிக்கின்றது. "அஹமந்ந மஹமந்ந மஹமந்நம்" என்பது முக்தனுடைய முதல் வார்த்தை. 'பகவானுக்கு நான் அன்னமாகிறேன்' என்று ஒரு தடவைக்கு மூன்று தடவையாக இதில் சொல்லுகிறது. இதனால், ஈச்வரனானவன் சேதனனைப் பெற்று அநுபவிக்க வேணுமென்று பெரும்பசி கொண்டிருந்தானென்றும், அப்பசி முக்தாத்மாவால் முதலில் தீருகிறதென்றும் ஸ்பஷ்டமாகிறது. இல்லையாகில், *அஹமந்நம்* என்று ஓதவேண்டியதில்லையன்றோ?

"கஸ்தூரி கிடைப்பது மிகவும் அரிதாயிருக்கின்றது" என்று ஒருவன் சொன்னால் அவன் கஸ்தூரியைப் பெறுவதற்கு மிகவும் முயற்சி செய்தவன் என்பது எளிதாகத் தெரியவருமன்றோ! இதேபோல, எம்பெருமான் "வாஸுதேவஸ் ஸர்வமிதி ஸ மஹாத்மா ஸுதுர்லப:" என்று கீதையில் சொல்லுகிறான். 'எல்லாம் கண்ணன்' என்றிருக்கிற மஹாத்மா எனக்குக் கிடைக்கவில்லையே யென்கிற வருத்தத்தையன்றோ இதில் காட்டுகிறான். எம்பெருமான்தான் அப்படிப்பட்ட சேதனனைப் பெறுதற்குப் பெருமுயற்சி செய்பவனென்பது இதனால் ஸ்பஷ்டமாக விளங்கவில்லையா?

ஒரு வஸ்துவைப் பெறுவதனால் ஆனந்தம் உண்டாவது எவனுக்கோ அவன்தான் பேறுபெறுபவன் என்பது விவாதமற்ற விஷயம். சேதநனைப் பெறுவதனால் ஆநந்திப்பவன் எம்பெருமானென்பது தேறிவிட்டால் அவனே லாபமடைபவன் என்பதும் அநாயாஸமாகத் தேறிவிடுமன்றோ? ஆளவந்தார் * கதாஹமைகாந்திக

நித்யகிங்கர: ப்ரஹர்ஷயிஷ்யாமி ஸநாதஜீவித:* என்றார். இதில் ப்ரஹர்ஷயிஷ்யாமி என்கிற க்ரியாபதம் ஆச்சரியமாக அமைந்தது. உனக்குத் தொண்டு செய்து நான் எப்போது ஆநந்திக்கப் போகிறேனென்னாமல் 'நான் எப்போது உன்னை ஆநந்திப்பிக்கப்போகிறேன்' என்றார். ணிஜந்தப்ரயோகம் நோக்குக. இங்கு வியாக்கியானத்தில்— "தன்னுடைய அநுவ்ருத்தியால் ஈச்வரனுக்குப் பிறக்கும் ஹர்ஷமேயிறே சேதநனுக்குப்ராப்யம்" என்று பெரியவாச்சான்பிள்ளை யருளிச் செய்ததை ஸ்தோத்ர பாஷ்யத்தில் தேசிகன் மொழிபெயர்த்தார்— "[ப்ரஹர்ஷயிஷ்யாமி] த்வத்தாஸபூதஸ்ய மே த்வத் ப்ரஹர்ஷ ஏவ ப்ரதாநம் ப்ரயோஜநமிதி பாவ:" என்று. இவற்றுக்கெல்லாம் சிகரமாக விளங்குவது "ந ச பரமபுருஷ: ஸத்யஸங்கல்ப: அத்யர்த்தப்ரியம் ஜ்ஞாநிநம் லப்த்வா கதாசிதா வர்தயிஷ்யதி" என்கிற ஸ்ரீபாஷ்ய ஸூக்தி. இதில் "பரமபுருஷ: ஜ்ஞாநிநம் லப்த்வா" என்றது உயிரான ஸூக்தியன்றோ? இதையே தேசிகன் பலவிடங்களில் பலமுகமாக விவரித்தருளினாராயிற்று.

ஞானங்களில் மேலெழுந்த ஞானமென்றும் ஆழ்ந்த ஞானமென்றும் இருவகையுண்டு. அப்படியே விஷயங்களும் இருவகைப்பட்டிருக்கும். சேதநலாபம் பரமபுருஷனுக்குப் பேறு என்னுமிவ் விஷயமும், பரகதஸ்வீகாரமே ப்ரசஸ்தமென்னும் அடுத்த விஷயமும் ஆழ்ந்த ஞானத்தினால் அறியத்தக்கவை. இவ் விஷயங்களில் ஸ்மார்த்த மாத்வாதிகளுக்கு ப்ரவேசப்ரஸக்தியே கிடையாது. இவற்றை ஆழ்ந்து அநுபவிக்க ஸ்ரீ வைஷ்ணவர்களே இட்டுப் பிறந்தவர்கள். ஏனென்றால், இவை ரஹஸ்யங்களில் நுட்பமாகத் தேறுமவை. ரஹஸ்யாதிகாரிகள் எம்பெருமானார் திருவடி ஸம்பந்திகளான ஸ்ரீவைஷ்ணவர்களே யல்லது மற்றையோர்களல்லர். தேசிகன் குருபரம்பராஸாரத்தில் எம்பெருமானார் இன்னாரிடம் இன்னது அதிகரித்தாரென்பதைச் சொல்லுமிடத்து திருக்கோட்டியூர்நம்பி பக்கலிலே ரஹஸ்யார்த்தங்களை 'அதிகரித்தா'ரென்னாமல் சிக்ஷித்தார் என்றார். அதிகரித்தாரென்கிற சொல்லுக்கும் சிக்ஷித்தாரென்கிற சொல்லுக்கும் நெடுவாசியுண்டு. குளத்து நீரை அப்படியே யெடுத்துப் பருகுவதற்கும் வடிக்கட்டிப் பருகுவதற்கும் வாசியில்லையா? அங்ஙனம் வடிக்கட்டின அர்த்தங்களை எம்பெருமானாருடைய பரம்பரையிலே படிந்தவர்கள் ரஸிக்கத்தக்கவர்களே யொழிய மற்றையார்க்கு இவற்றின் சுவை தெரிய விரகில்லை. இவற்றை அவர்கள் தூஷிக்கிறார்களென்பதில் வியப்பில்லை. இதையிட்டும் இவர்களை நாம் நவீநர்களென்பது.

இராமபிரானை *சந்த்ரகாந்தாநநம்* என்றார் முனிவர். இங்கு உபமித ஸமாஸம் கொண்டு சந்திரனைப்போலே அழகிய முகமுடையவர் பெருமாள் என்று பொருள் கூறினாரொருவர். மற்றொருவர் அப்பொருளைக் கண்டித்து, "சந்திரன் போலழகிய முகமுடையவரென்று பொருளன்று; சந்திரனிற் காட்டிலும் அழகிய முகமுடையவரென்று பொருளப்பா!" என்கிறார். 'சந்த்ரவத் காந்தம்' என்பது சிறந்ததா, சந்த்ராத் காந்தம் என்பது சிறந்ததா? என்பதை ஆராயகில்லாமல் உபமித ஸமாஸந்தான் சாஸ்த்ரஸம்மதம்; பஞ்சமீதத் புருஷன் இங்குப் பொருந்தாது என்று சிலர் விவாதத்தை வளர்த்திக் கொண்டு கிடந்தால் 'இந்த அரஸிக

சிகாமணிகளோடு நமக்கென்ன விவாதம்? *உங்களோடெங்களிடையில்லையே* என்று நாம் விலகவேண்டியதே' என்று நினைத்து விலகுவதே ரஸிகர்கள் பணியாம்.

இது போலவே ஸத்ஸம்ப்ரதாயஸ்த்தர்கள் எம்பெருமானைப்பற்றிச் சொல்லுமவையெல்லாம் தாம் தாம் நேராக அநுபவித்துச் சொல்லுமவை. அப்படிப்பட்ட அநுபவரஸிகர்களில் தேசிகனும் அந்யதமரே யொழிய அந்யரல்லர். அன்னுர் உருகி யுள் கனிந்து வெளியிட்ட அர்த்தவிசேஷங்களில் நவீனர்களுக்கு அவகாஹனம் ஏற்படாதது ஆச்சரியமன்று. இடையருத தொடர்பு வந்திருந்தாலன்ரோ அவ்வர்த்தச்சுவைகளில் அபிநிவேசமுண்டாகும். (2)

### 3.பரகதஸ்வீகாரமே நன்று.

சேதநன் தான் எம்பெருமானைப் பற்றுவது ஸ்வகதஸ்வீகாரமென்றும், எம்பெருமான்தானே சேதநனை வரிப்பதானது பரகத ஸ்வீகாரமென்றும் வழங்கப் படுகின்றது. முறையே மர்க்கடகிசோர ந்யாயமென்றும் மார்ஜாரகிசோர ந்யாய மென்றும் வழங்குவர். நாம் அநுஸந்திக்கிற த்வய மென்னும் மந்த்ரத்தில் 'ப்ரபத்யே' என்று நாம் அவனைப் பற்றுவதாகச் சொல்லப்படுகிறதேயொழிய அவன் நம்மைப் பற்றுவதாக ஒரு மந்த்ரமும் ஏற்பட்டிருக்கவில்லை. ஆழ்வார்களும் * உன்னை நானடைந்தேன் * உன்னடிக்கீழமர்ந்து புகுந்தேனே *பற்றிலார் பற்ற நின்ருனே* என்றிப்புடைகளிலே பணித்துள்ளார்களேயல்லது வேறு வகையாகப் பணித்திருக்கக் காண்கின்றிலோம். இப்படியிருக்க, பரகத ஸ்வீகாரமென்று ஒன்றைப் பேசுவதும், 'நாம் பற்றும் பற்று அவத்யகரம், அவன் பற்றும் பற்றே க்ஷேமங்கரம்' என்று கூறுவதும் அர்த்தமில்லாத வார்த்தைகள் என்று ஏசுவர் நவீநர். இவர்கள் ஏசுகிற ரஸ்ய ரஹஸ்யார்த்தத்தை தேசிகன் நிலைநாட்டி யிருக்கும் பரிசு காட்டப்படுகின்றதிங்கு.

* அறிவினல் குறைவில்லா அகல்ஞாலத்தவரறிய நெறியெல்லாமெடுத் துரைத்த நிறைஞானத்தொரு மூர்த்தி * என்னப்பட்ட பரமபுருஷன் கீதாசாஸ்த்ர மருளிச்செய்தது மஹாபாக்யம். அதற்கு நம்மிராமானுசன் பாஷ்யமருளிச் செய்ததும் அதற்கு ஸ்வாமி தேசிகன் தாத்பர்யசந்த்ரிகை பணித்ததும் பேரின்பமான பரமபாக்யம். கீதையில் எட்டாவது அத்யாயத்தில் பதினுன்காவது ச்லோகம்—

𑌅𑌨𑌨𑍍𑌯𑌚𑍇𑌤𑌾𑌃 𑌸𑌤𑌤𑌂 𑌯𑍋 𑌮𑌾𑌂 𑌸𑍍𑌮𑌰𑌤𑌿 𑌨𑌿𑌤𑍍𑌯𑌶𑌃 ।
𑌤𑌸𑍍𑌯𑌾𑌹𑌂 𑌸𑍁𑌲𑌭𑌃 𑌪𑌾𑌰𑍍𑌥 ! 𑌨𑌿𑌤𑍍𑌯𑌯𑍁𑌕𑍍𑌤𑌸𑍍𑌯 𑌯𑍋𑌗𑌿𑌨𑌃 ॥

[அநந்ய சேதாஸ் ஸததம் யோ மாம் ஸ்மரதி நித்யச:
தஸ்யாஹம் ஸுலப: பார்த்த! நித்யயுக்தஸ்ய யோகிந:.] என்பது.

''ஜ்ஞாநீ து ஆத்மைவ மே மதம்'' என்று பகவான் தான் தனக்கு உயிர் நிலையாகக் கொண்டாடும் ஞானியானவன் தன்னை உபாஸிக்க வேண்டியபடியை யும் பேறுபெறும் பரிசையும் இனியருளிச் செய்கிருன் (கண்ணபிரான்)—என்று அவதாரிகையிட்டு சுலோகத்தை வியாக்கியானித்தருளியுள்ளார் பாஷ்யகாரர்.

இந்த சுலோகத்தின் கருத்து என்னவென்றால், 'அர்ஜுநா!, எவன் இடைவிடாமல் எப்போதும் வேறொன்றிலும் நெஞ்சைச் செலுத்தாதவனாய் என்னையே ஸ்மரிக்கிறானோ, என்னோடு நித்ய ஸம்ச்லேஷத்தை விரும்பியிருக்கின்ற அந்த பக்தனுக்கு நான் ஸுலபன்—என்பதேயாம். இதில் [தஸ்யாஹம் ஸுலப:] "அவனுக்கு நான் ஸுலபன்' என்கிற பகுதிக்கு பாஷ்யம் செய்தருளி யிருக்கின்ற வகையாவது,

> [தஸ்ய நித்யயுக்தஸ்ய-நித்யயோகம் காங்க்ஷமாணஸ்ய யோகிந:, அஹம் ஸுலப:—அஹமேவ ப்ராப்ய:; ந மத்பாவ ஐச்வர்யாதிக: ஸுப்ராபச்ச, தத்வியோக மஸஹமாந: அஹமேவ தம் வ்ருணே. மத்ப்ராப்த்யநுகுணோபாஸந விபாகம் தத்விரோதிநிரஸநம் அத்யர்த்தமத்ப்ரியத் வாதிகம் ச அஹமேவ ததாமீத்யர்த்த: *யமேவைஷ வ்ருணுதே தேந லப்ய:* இதி ஹி ச்ரூயதே. வக்ஷ்யதி ச* தேஷாம் ஸததயுக்தாநாம்...... இதி.]

இவ்வளவும் கீதாபாஷ்ய ஸ்ரீஸூக்திகள். (இவற்றின் பொருளாவது-) என்னோடு எப்போதும் கூடியிருக்கவேணுமென்கிற விருப்ப முடையவனுக்கு அடையத் தகுந்தவன் நானேயாகிறேன். மிக எளிதாக அடையத் தகுந்தவனுமாகிறேன் நான். (அதாவது) அவனுடைய பிரிவைப் பொறுக்க மாட்டாதவனாய் [அவனைப் பிரிந்து தரித்திருக்க மாட்டாதவனாய்] நானே அவனை வரிக்கிறேன். என்னை யடைவதற்கான உபாஸனத்தின் பரிபக்குவ நிலைமையையும், அதற்குற்ற இடையூறுகள் நீங்குதலையும், என்னிடத்தில் அதிகமான ப்ரீதி முதலியவைகளையும் நானே கொடுக்கிறேன். * நாயமாத்மாச்ருதியில் இவ்வர்த்தம் ப்ரஸித்தமாயிருப்பதோடு இந்த கீதையிலே மேலே பத்தாவது அத்யாயத்தில் 10, 11 ச்லோகங்களாலும் சொல்லப்படுகின்றது—என்பதாம்.

கீதாபாஷ்ய ஸ்ரீஸூக்தியை ஒவ்வொன்றாக எடுத்து விளக்குவோம். தத்வியோகம் அஸஹமாந: அஹமேவ தம் வ்ருணே *] ஞானியான சேதநனைப் பிரிந்திருப்பதை எம்பெருமான் தான் பொறுத்திருக்கமாட்டாதவனாய்த் தானே அந்த சேதநனை வரிப்பதாகக் கூறுகின்றவிதுதான் பரகத ஸ்வீகார மென்பது.

இந்த வாக்கியமானது ஸ்வகத ஸ்வீகாரப்பற்றாசை நன்றாகக் கழிக்கிறது. இத்தலையில் விளைவதெல்லாம் எம்பெருமானுடைய க்ருஷிபலமாக விளைகின்றதேயன்றி இவன் தலையாலே விளைவித்துக்கொள்ளுமது ஒன்றுமில்லை என்கிற ஸத்ஸம்பிரதாய ஸாரார்த்தம் தெளிவிக்கப்பட்டது. இந்த இடத்தில் * நாயமாத்மா ச்ருதியையும் எடுத்துக்காட்டியருளின பாஷ்யகாரர், பரகத ஸ்வீகாரத்திற்கு அதுவே பிரமாணமென்று நிரூபிக்கிற முகத்தாலே பிறருடைய அசட்டு வாதங்களை அகற்றினாராயிற்று.

இவ்விடத்தில் தாத்பர்ய சந்த்ரிகையில் ஸ்வாமி தேசிகன் அருளிச் செய்துள்ள திவ்ய ஸூக்திகள் தேனே பாலே கன்னலே யமுதே யத்தனை; [உக்தஸ்ய அதிவாத மாத்ரத்வ சங்காவ்யுதாஸாய ச்ருதிமூலதாமாஹ யமேவேதி] என்றருளிச் செய்திருப்பது ஆழ்ந்து நோக்கத்தக்கது.

பாஷ்யகாரரருளிச் செய்ததில் *நாயமாத்மாச்ருதியானது ஜீவநாடியாக எடுத்துக்காட்டப்பட்டுள்ளது. இந்த ச்ருதிக்குப் பிறர் எழுதியுள்ள அபார்த்தங்களுக்கு இடமில்லாதபடி செய்தருளியிருக்கிறார் ஸ்வாமி தாத்பர்ய சந்த்ரிகையில். சேதநன் தலையிலே ஒன்றையும் வைத்திடாமல் ''அஹமேவ தம் வ்ருணே......அஹமேவ ததாமீத்யர்த்த:'' என்று ஒவ்வொன்றையும் எம்பெருமான் தலையிலே யாக்கி பாஷ்யகாரர் அருளிச்செய்திருப்பதை அக்காலத்தில் சிலர் அதிவாதமென்று சொல்லிக் கொண்டிருந்தார்கள் போலும். அது தேசிகன் திருச்செவியில் விழுந்தபடியால் அதை ஸஹித்திருக்கமாட்டாமல் ''உக்தஸ்ய அதிவாதமாத்ரத்வ சங்காவ்யுதாஸாய ச்ருதிமூலதாமாஹ —யமேவேதி'' என்று ப்ராமாணிகமான அவதாரிகையை இட்டருளினர். பரகதஸ்வீகாரமென்பது உபநிஷத்ஸித்தமான அர்த்தமாகையாலே அதிவாதமென்று நெஞ்சாலும் நினைக்கத்தகாது என்று வெட்டொன்று துண்டிரண்டாக அருளிச்செய்தாராயிற்று தேசிகன்.

எம்பெருமானுக்குப் பெருமையாகச் சொல்லப்படுகிற எதையும் 'அதிவாதம் அதிவாத' மென்றே பிறர் ஒதுக்குகிறவர்களாகையாலே அவர்கள் வாக்கை அவலீலையாகக் கண்டித்தொழித்தார் தேசிகன். இங்கு முக்கியமாகத் தேறினது என்னவென்றால், *நாயமாத்மா ச்ருதியில் *யமேவைஷ வ்ருணுதே தேந லப்ய: என்றது பரகதஸ்வீகாரந்தன்னையே யென்பதை பாஷ்யகாரரும் தேசிகனும் ஸமகண்டமாக வெளியிட்டார்களென்பதேயாம்.

இங்கு ஸாரமாகத் தெரிவிக்கவேண்டியதிவ்வளவே; *த்வத்பாதமூலம் சரணம் ப்ரபத்யே* என்றும் *புகலொன்றில்லாவடியேன் உன்னடிக்கீழமர்ந்து புகுந்தேனே* என்றும் நாம் பற்றுகிறோமாகக் காட்டிக்கொண்டு திருவடிகளிலே விழுந்தாலும், 'இது நாம் பற்றின பற்றன்று; எம்பெருமான் தானே பற்றுவித்தானத்தனை; அவன் நெடுநாளாகப் பண்ணிப் போந்த க்ருஷி பலித்ததத்தனை' என்கிற அநுஸந்தானம் ஊடுருவச் செல்லவேணு மென்பதேயாம். இவ்வநுஸந்தானம் நித்யமாகவும் ஸத்யமாகவுமிருந்தால் பரகதஸ்வீகாரமென்பதைப் பழிக்கவும் ஸ்வகதஸ்வீகாரமென்று வாய்திறக்கவும் அவகாசமேயிராது. (3)

## 4. ப்ரபத்தி அநுபாயம்.

எம்பெருமான் நிர்ஹேதுகமாக அருள்செய்கிறானென்பது கொண்டு நாம் வாளா இருக்ககில்லோம். ''நிஜகர்மாதி பக்த்யந்தம் குர்யாத் ப்ரீத்யைவ காரித:, உபாயதாம் பரித்யஜ்ய ந்யஸ்யேத் தேவே து தாம் அபீ:'' என்று கீதார்த்தஸங்க்ரஹத்திலே ஆளவந்தாரருளிச் செய்தபடியே முறைவழுவாது செய்யக்கடவோம். ''ஸ்ரீ பகவதாஜ்ஞயா பகவத் கைங்கர்ய ரூபம்'' என்று ஸங்கல்பித்துக்கொண்டு சிலபல செய்யாநின்றோம். ஸதாசார்யஸமாச்ரிதர்களாய் த்வயோச்சாரணாநுச்சாரணத்தாலே ப்ரபத்திஸித்தியும் பெறுகிறோம் அது தனக்கு உபாயத்வமுண்டென்று சொல்லுமவர்களை முக்கியமாகக் கண்டிப்பவர் நிகமாந்த மஹா குருவேயாவர். மேலே உதாஹரித்த கீதார்த்தஸங்க்ரஹச்லோக வியாக்கியானத்தில் (ரக்ஷையில்) தேசிகனருளிச் செய்வது காணீர் :—

''ஸ்வயம் ஸ்வாதுத்வாத் க்ஷணிகஸ்ய காலாந்தர பாவி பலஸாதநத்வாநுப பத்தி தர்சநாச்ச நாஸ்ய ஸ்வவ்யாபாரே மோக்ஷோபாயதா புத்திரபி ஸ்யாதிதி பாவ:. அத: தைஸ்தைராராதிதோ பகவாநேவ ஹி ஸர்வத்ரோபாய:'' என்று.

இந்த வொரு ஸ்ரீஸூக்தி போதும் இவ்விஷயத்தில் தெளிவுபெற. *உபபத்தேச்ச* (3-2-34) *பலமத உபபத்தே:* (3-2-37.) என்கிற ப்ரஹ்மஸூத்ரங்களின் ஸ்ரீபாஷ்யத்தில் ஸ்வாமி விபுலமாக அருளிச்செய்திருக்கும் ஸ்ரீஸூக்திகளின் ஸாரமாகவே மேலே உதாஹரித்த கீதார்த்த ஸங்க்ரஹரக்ஷாஸூக்தி அமைந்தது.

ந்யாஸதசகத்தில் ''ஸ்வாமீ ஸ்வசேஷம் ஸ்வவசம் ஸ்வபரத்வேந நிர்பரம், ஸ்வதத்தஸ்வதியா ஸ்வார்த்தம் ஸ்வஸ்மிந் ந்யஸ்யதி மாம் ஸ்வயம்.'' என்னும் சுலோகத்தில் ஒன்பதின்கால் ஸ்வசப்தப்ரயோகம் செய்தருளியுள்ளார் தேசிகன். இதனால் சேதனனுடைய முயற்சிநாற்றம் வேரறுக்கப்படுகின்றமையறிந்தால் உபாயமென்றும் ஸாத்யோபாயமென்றும் வாய் திறக்க வழியில்லை. ஸாத்யோபாயமென்றால் யாரால் ஸாதிக்கப்படுமுபாயம்? என்று கேள்வி வரும். சேதநனால் ஸாதிக்கப்படுவதாகச் சொல்லியாகவேணும். இச் சொல்லை ஒன்பது வாள்கள் கொண்டு கண்டிக்கின்றதன்றோ கீழே காட்டிய தேசிக சுலோகம்!

ப்ரபத்தியாவது என்ன? *த்வமேவோபாயபூதோ மே பவேதி ப்ரார்த்தநாமதி: சரணாகதி:* என்று சாஸ்த்ரம் கூறுகின்றது. எம்பெருமானையே உபாயமாக அத்யவஸிக்குமதுவே ப்ரபத்தியென்பது. இத்தகையதான ப்ரபத்தியானது தன்னிடத்தில் உபாயத்வபுத்தியை எங்ஙனம் ஸஹிக்கும்? ப்ரபத்தியென்கிற வஸ்து தேறும்போதே அதன் அநுபாயத்வமும் தேறியே தீரும் என்று நியாய ஸித்தாஞ்ஜநத்தில் ஸ்பஷ்டமாகவருளிச் செய்கிறார். (அதில் ஜீவபரிச்சேதத்தில்) ''இயம் கேவலலக்ஷ்மீசோபாயத்வப்ரத்யயாத்மிகா, ஸ்வஹேதுத்வதியம் ருந்தே கிம் புநஸ்ஸஹகாரிணாம்'' என்கிற சுலோகம் ஸித்தாஞ்ஜனமேயாகும். இந்த சுலோகத்தினால் ப்ரபத்தியின் அநுபாயத்வம் தர்மிக்ராஹகப்ரமாணஸித்தம் என்று சிலாலிகிதமாக்கினபடி. சாஸ்த்ரஜ்ஞர்களில் தலைவரான தேசிகன் சாஸ்த்ரகதி விருத்தமாக ப்ரபத்தி உபாயமென்று நெஞ்சாலும் நினைக்கமாட்டாரன்றோ?

சாஸ்த்ரங்களில் ஒன்று விதிக்கப்படுமானால் அது உபாயமாக (ஸாதனமாக) இருந்து தீரும் என்பது பொதுவான வொரு கொள்கை. உபாயமாக மாட்டாததை சாஸ்த்ரம் எதற்காக விதிக்கும்? எப்போது விதி ஏற்படுகிறதோ அப்போது விதிக்கப்படுகின்றவதின் உபாயத்வமும் கூடவே ஸித்திக்குமாதலால் சரமச்லோகத்தில் *மாம் ஏகம் சரணம் வ்ரஜ* என்று விதிக்கப்படுகிற ப்ரபத்திக்கு உபாயத்வம் அநிவார்யம்-என்று பிறர் நினைக்கக்கூடியதுண்டு. இதையும் ந்யாஸ திலகமென்கிற க்ரந்தத்தில் தேசிகனே எடுத்துக்காட்டி ஸமாதானமும் வகுத்துள்ளார். *ஹேதுர் வைதே விமர்சே* என்கிற ச்லோகம் காண்க. இதன் கருத்தாவது-ப்ரபத்தியானது விதிக்கப்பட்டிருப்பதனால் உபாயமென்று சொல்ல வேண்டியிருந்தாலும் இங்கு அப்படிக்கொள்ளவேண்டா; ஒவ்வொரு வித்யையிலும் எம்பெருமானுக்கு ஒவ்வொரு ரூபம் அறியக்கடவதா யிருக்கிற கணக்கிலே இந்த

ப்ரபத்தி வித்யையில் இதராநபேக்ஷ உபாயத்வம் (பிறிதொன்றை எதிர்பாராத உபாயத்வம்) அறியத்தக்க ரூபமாதலால்—என்று இந்த ச்லோகத்தில் நிரூபிக்கப் பட்டிருக்கின்றது. ரஹஸ்யங்களிலும் இஃது உள்ளது.

இங்கு மற்றொரு வாதம். ஸித்தோபாயமென்றும் ஸாத்யோபாயமென்றும் உபாயம் இருவகைப்படும். எம்பெருமான் ஸித்தோபாயமானாலும் ஸாத்யோபாய மாக ஒன்றை அங்கீகரித்தே யாகவேண்டுமென்பர் நவீனர்; இதற்கு மீண்டுமறி விக்கும் ஸமாதானமாவது-ஸாத்யோபாயமென்றால் "சேதநனுடைய முயற்சியால் ஸாத்யமான உபாயம்" என்று தானே பொருளாகும். உண்மையில் இது சேத நக்ருதியாலே ஸாத்யமானதா? என்று ஆராய்ந்தால் மேலெழுந்தரீதியில் அப்படிச் சொல்லலாமாயினும் * இசைவித்தென்னை யுன்தாளிணைக் கீழிருத்துமம் மானே *என்பதுபோன்ற பல பாசுரங்களைக் கண்டால் இது நம்முடைய முயற் சியால் ஸாத்யமன்றிக்கே ஸர்வேச்வரனுடைய க்ருஷிபலமாகவே விளையுமதாக உண்மை தெரிவதால் ஸாத்யோபாயமென்கிற வ்யபதேசமும் இதற்கு ஏலாது. இவ்விஷயமான "ஸ்வீகாரந்தானும் அவனாலே வந்தது; ஸ்ருஷ்டி அவதாராதி முகத்தாலே பண்ணின க்ருஷிபலம்" என்ற பிள்ளைலோகாசார்யருடைய ஸ்ரீஸூக் திக்குச் சார்பாக தேசிகன் * நிதாநம் தத்ராபி ஸ்வயமகிலநிர்மாண நிபுண: * என்று ரஹஸ்யத்ரய ஸாரத்தில் ஒன்பதாவதான உபாயவிபாகாதிகாரத்தின் முகப்பில் ஸாதித்துள்ள சுலோகம் வடிக்கட்டின சாஸ்த்ரார்த்தமாகவன்றோ விளங்குகின்றது—

உபாய: ஸ்வப்ராப்தே: உபநிஷததீதஸ் ஸ பகவாந்
ப்ரஸத்த்யை தஸ்யோக்தே ப்ரபதநநிதித்யாஸநகதீ.
ததாரோஹ: பும்ஸாம் ஸுக்ருதபரிபாகேந மஹதா
நிதாநம் தத்ராபி ஸ்வயமகிலநிர்மாண நிபுண:.

என்பதாம் அந்த சுலோகம். இதன் பொருளை நாம் விவரிக்கவேண்டுமோ? அக்ஷரலப்யமான பொருளை யாரும் மாறுபடுத்த முடியாது. அவனைப் பெறுதற்கு அவனே உபாயமென்னுமிடம் உபநிஷத் ஸித்தம். பக்தி ப்ரபத்திகளானவை அவன்திருவுள்ளமுகக்கைக்காகவாமத்தனை. அந்த பக்தி ப்ரபத்திகள் அமைவது மஹத்தான ஸுக்ருத பரிபாகத்தினால்தான். அந்த ஸுக்ருதந்தானும் எலியெலும் பனை சேதநனடியாக விளைவதன்று; நிகில நிர்மாண நிபுணனான பரமபுருஷன் தானே அதற்கும் மூலகாரணமாவன்—என்பது இந்த ச்லோகத்தின் பொருள். இதில் * நிதாநம் தத்ராபி ஸ்வயமகில நிர்மாண நிபுண: * என்கிற நான்காம் பாதமானது லோகாசார்ய ஸித்தாந்த ஸர்வஸ்வமென்று கொள்ளக்கடவது. சேதனன் தலையிலே சிறு நாற்றத்தையும் ஸஹியாதே அறவே துடைத் தொழிக்கும் வார்த்தையன்றோ;விது!

நிதாநமென்கிற சொல்லுக்கு என்ன பொருளென்பதை அமரகோசங் கொண்டு அறிவது. * நிதாநம் து ஆதிகாரணம் * என்றான் அமரஸிம்ஹன். சேதநன் தலையிலுள்ளதாக எந்த ஹேத்வாபாஸத்தைக் காட்டினாலும் அதுவும்

பரம புருஷனடியாக வந்ததே யொழிய இத் தலையாலே வந்தது லவலேசமுமில்லை யென்று தேசிகன் கல்வெட்டாக்கி வைத்திருக்க, இதற்கு நேர் விருத்தமாகச் சொல்லிக்கொண்டு போராடுவது என்னே? "ஸ்ருஷ்ட்யவதாராதி முகத்தாலே பண்ணின க்ருஷிபலம்" என்ற பிள்ளை லோகாசார்யருடைய ஸ்ரீ ஸூக்தியே *நிதாநம் தத்ராபீத்யாதி ஸ்ரீ ஸூக்தியாக மொழி பெயர்ந்தது என்பதில் ஸந்தேஹமுண்டோ?

இப்படி ஸாரமாக எடுத்துக்காட்டப் படுகிற விஷயங்களை விட்டு விட்டு "*ரக்ஷ்யாபேக்ஷாம் ப்ரதீக்ஷதே* என்றிருக்கிறது பாருங்கள்; இத் தலையில் அபேக்ஷையைப் பரமபுருஷன் எதிர்பார்த்திருப்பதாகச் சொல்லியிருப்பதைக் காண்மின்" என்று அபூர்வ விஷயம் போலச் சொல்ல வருவர்கள் நவீநர்கள். *நிதாநம் தத்ராபி ஸ்ரீ ஸூக்தியின்முன்னே எந்த வசனமும் தலைகாட்டாதே புக்கொளிக்கு மென்பதை குருகுலவாஸம் பண்ணியே யறியவேணும்.

தேசிகனுடைய திவ்ய ஸூக்திகளில் *குணக்ஷதலிபிக்ரமாதுபநிபாதிந: பாதி ந:* என்பது ஆச்சரியமானவொரு ஸூக்தி. இது எங்குளதென்பதையு மறியார்கள் நவீனர்கள். ரஹஸ்யமாகத்தானுள்ளது. இதன் பொருளென்ன வென்றால்; நாம் எம்பெருமானிடத்திலே சென்று சேருவதானது நம் இச்சை யினாலே யன்று; குணாக்ஷரந்யாயத்தாலே யாமத்தனை. அந்த நியாயமாவதென் னென்னில்; புழுவானது நேராகச் செல்லமாட்டாது; சுருங்கியும் மடங்கியும் குடில மாகச் செல்லுவதே அதன் இயல்வு. அங்ஙனம் செல்லுவதை நாம் உற்று நோக்கில் ஏதேனுமொரு பாஷையிலே சில எழுத்துக்கள் எழுதினாற்போல் தேறும். எழுத்து எழுதவேணுமென்கிற நினைவு அதற்கு இருக்க ப்ரஸக்தியில்லை. ஆயினும் யாத்ருச்சிகமாக எழுத்துத் தேறுகின்றதென்பதைக் காணா நின்றோம். இதுதான் குணாக்ஷரந்யாயமென்பது. *குணக்ஷதலிபிக்ரமாத்" என்று ஸ்வாமி ஸாதித்ததும் இதுவேயாம். நம்பிள்ளை பெரியவாச்சான்பிள்ளைகள் "புழு குறித்தது எழுத்தாமாப் போலே" என்றருளிச் செய்திருப்பதையே ஸ்வாமி தேசிகன் இங்ஙனம் மொழி பெயர்த்தாரென்னத் தட்டில்லை. இந்த நியாயத்தைக் கொண்டு ஸ்வாமி என்ன ஸாதிக்கிறாரென்னில் 'லிபிக்ரமாத் உபநிபாதிந: ந: பாதி" என்கிறார். புழு குறித்தது எழுத்தாகிற க்ரமத்திலே, உபநிபாதிந:-தன் னிடம் வந்து சேருமவர்களான, ந:—நம்மை, பாதி-எம்பெருமான் காப்பாற்றி யருள்கிறான் என்று ஸாதித்துள்ளார். *புத்திபூர்வகமாக வன்றிக்கே கடலலை வழியாகக் கரையிலே தள்ளுண்டு வந்து சேரும் துரும்புபோலே யாத்ருச்சிகமாகத் தன் பக்கலிலே வந்து சேருமவர்களை எம்பெருமான் தன்னுடைய இயற்கை யின்னருளாலே குளிரக்கடாக்ஷித்து அருள் செய்கின்றானென்கிற பரமார்த்தம் இதனால் தெரிவிக்கப்பட்டதாயிற்று.

நநு ப்ரபத்தி அநுபாயமென்கிற வாதத்தை யெடுத்து தேசிகன கண்டித்து மிருக்க வில்லையா? என்று கேட்க வருவர்கள் நவீனர்கள். இதைப்பற்றி நம்முடைய நூல்களிலே மிக விரிவாக வரைந்திருக்கிறோம். சுருக்கமாக விங்குணர்த்துவோம். அங்ஙனம் கண்டித்திருக்குமிடங்களை நீங்கள் அறிவீர்

களாதலால் அவற்றை விட்டு அவற்றுக்கு அநுதபித்தவராய் ஸமர்த்தனம் செய்தருளியிருக்குமிடங்களை நாமெடுத்துக் காட்டுகிறோம்.

தேசிக ரஹஸ்யங்களில் ஸாரஸாரமென்பது ரஹஸ்யத்ரயஸாரத்திற்கு அடுத்ததான பத்தொன்பதாவது ரஹஸ்யம். ரஹஸ்யத்ரய ஸாரத்தில் விபுலமாக ஸாதித்தவற்றை ஸாரமாக வெடுத்துரைப்பதென்னும் காரணத்தினால் இதற்கு ஸாரஸார மென்றே திருநாமமிட்டனர். அதில் சரமச்லோகாதிகாரத்தில்—

> "இப்படி விதேயமான ப்ரபதநத்தைச் சிலர் அதிகாரி விசேஷணம் ஸம்பந்த ஜ்ஞாநமாத்ரம் ஸித்தோபாய ப்ரதிபத்திமாத்ரம் அநிவாரண மாத்ரம் அநுமதிமாத்ரம் அசித்வ்யாவ்ருத்திமாத்ரம் சைதந்யக்ருத்யம் சித்தஸமாதாநம் என்றாற்போலே சொல்லுமதுவும் இவ்விதிக்கும் இத்தை விஸ்தரிக்கிற சாஸ்த்ரங்களுக்கும் இவற்றுக்குச் சேர்ந்த உப பத்திகளுக்கும் பாஷ்யகத்யாதிகளுக்கும் நிபுணஸம்ப்ரதாயங்களுக்கும் அநுகுணமாக வேண்டுமாகையாலே * நானே நானாவித நரகம்புகும் பாவம் செய்தேனென்று நிற்கிற நம்மை ஈச்வரன் ரக்ஷிக்கிற விடத்தில், *வந்தடைந்தேனென்று நாம் பண்ணுகிற அல்பமான வசீகரணயத்நம் * அதுவுமவனதின்னருளே * இசைவித்தென்னை இத்யாதிகளிற்படியே அவன்தானே காட்டி ப்ரவர்த்திப்பித்ததொரு வ்யாஜமாத்ரமன்றோ வென்று ஸித்தோபாய ப்ராதாந்யாநுஸந்தானத்தில் அவர்களுக்கு தாத்பர்யம்."

என்றருளிச் செய்திருப்பது காணீர். உண்மையான சாஸ்த்ரார்த்தம் எதுவோ அதைத்தான் இங்கு வெளியிட்டருளினர். "அவர்களுக்கு தாத்பர்யம்" என்ற விதனையே பல விடங்களில் தம்முடைய தாத்பர்யமாக வெளியிட்டிருப்பதைக் கீழே காட்டியுள்ளோம்.

"உபநிஷத்துக்களிலே நிர்குணமாக வோதப்பட்ட பரப்ரஹ்மத்தை ஸகுணமென்பார்க்கு கல்யாணகுணவத்தாநுஸந்தானத்திலே தாத்பர்யம்"

என்பதற்கும் இதற்கும் ஏதேனும் வாசியுண்டோவென்று பார்க்க. ... (4)

### 5, 6, 7. பிராட்டிவிஷய விமர்சங்கள்

இதர ஆசார்யர்கள் பிராட்டி விஷயமாக அபார்த்தங்களை யெழுதி அவளுடைய பெருமைகளைக் குலைத்துவிட்டார்களென்றும், தேசிகன் திருவவதரித்து அந்த அபார்த்தங்களையெல்லாம் களைந்து பிராட்டியின் பெருமைகளை ஆச்சரியமாக ஸ்தாபித்துவிட்டாரென்றும் நவீனர்கள் எழுதிப்போருவதும் ஸ்வகோஷ்டிகளில் பேசுவதும் எவ்வளவு பொருத்தமானதென்பது உலகுக்குத்தெரிய இங்கு விரிவாக நிரூபிப்போம். பிற ஆசார்யர்கள் பேசியிருப்பது நிற்க. தேசிகன் ஸுஸ்பஷ்டமாக அருளிச்செய்திருப்பவையே இங்கு நிரூபிக்கப்படுகின்றன.

ஜகத்காரணத்வம் மோக்ஷப்ரதத்வம் விபுத்வம் ஆகிய இவற்றைப் பிராட்டியிடத்தில் தனிப்பட நிரூபிக்கும் விஷயத்தில் தேசிகன் சிறிதும் இறங்கவில்லை.

இதை க்ரமேண எளிதாக நெஞ்சில் பதியவைத்திடுவோம். யாதவாப்யுதய மென்னும் மஹாகாவ்யம் ஸ்வாமி தேசிகன் பணித்தது; இதில் பன்னிரண்டாவது ஸர்க்கம் ருக்மிணிப் பிராட்டி விஷயமானது. அதில் 1, 2. ச்லோகங்களினால் ஸாக்ஷாத் ஸ்ரீ மஹாலக்ஷ்மியே ருக்மிணிப்பிராட்டியாகத் திருவவதரித்ததாய்ச் சொல்லப்பட்டது. உடனே மூன்றாவது சுலோகம்

[''சிகண்டகம் நிஷ்ப்ரதிமம் ச்ருதீநாம் ச்ருங்கார லீலோபம விச்வக்ருத்யம்,
அதீயதே தந்மிதுநம் ஸ்வபாவாத் அந்யோந்ய ஜீவாது மநந்ய போக்யம்".]

என்பதாகவுள்ளது. இதற்கு மேலுள்ள சுலோகங்களெல்லாம் ருக்மிணிப் பிராட்டியை மாத்திரமே நோக்கியவை. முதலிரண்டு ச்லோகங்களும் அப்படிப் பட்டவை. இடையில் மூன்றாவதான ச்லோகமொன்று மாத்திரம் மிதுநம் என்கிற நிர்தேசத்தையுட்கொண்டு தோன்றியுள்ளது. இந்த ச்லோகத்தில், *ச்ருங்கார லீலோபம விச்வக்ருத்யம்* என்பதற்கு வியாக்கியானமென்ன வென்றால், ''ச்ருங்கார லீலாவத் அநாயாஸ ஸாத்ய-விநோதரூப-ஜகத்ஸ்ருஷ்டிஸம்ஹாராதி க்ருத்யம்'' என்பதேயாம். இப்படிப்பட்ட க்ருத்யத்தைப் பிராட்டியினிடத்தில் தனியாக இட்டுப் பேசுவதற்குத் திருவுள்ளமில்லாமையினாலேயே தேசிகன் மிது நம் என்கிற பதத்தை ப்ரயோகித்து இடையிலே இந்த வொரு சுலோகத்தை விலக்ஷணமாக அமைத்தார். முன்னும் பின்னும் பிராட்டியை மாத்திரமே குறித்து ச்லோகங்களை யருளிச்செய்து போருகிறவர் இவ்வொருச்லோகத்தில் மிதுநம் என்று இருவரையும் சேர்த்தருளிச் செய்ததை உற்று நோக்கினால் ஜகத்ஸ்ருஷ்டி ஸ்திதிகளில் பிராட்டிக்குத் தனிப்பட்ட அன்வய மில்லையென்று தேசிகன் நிச்சயித் திருப்பது திடமாக விளங்கும்.

ஸ்ரீஸ்துதியிலும், * யத்ஸங்கல்பாத் பவதி கமலே யத்ர தேஹிந்யமீஷாம் ஜந்மஸ்தேமப்ரலயரசநா ஜங்கமாஜங்கமாநாம்; தத் கல்யாணம் கிமபி யமிநாம் ஏக லக்ஷ்யம் ஸமாதௌ பூர்ணம் தேஜ: ஸ்புரதி பவதீபாதலாக்ஷாரஸாங்கம்* என்கிற இவ்வொரு ச்லோகமே போதும் பிராட்டி விஷயத்தில் தேசிகன் திரு வுள்ளத்தை உள்ளபடியுணர. பிராட்டியை ஸ்துதிக்க இழிந்தவர் பிராட்டியி னிடத்துள்ளதையன்றோ பேசவேண்டும். *ஜங்கமா ஜங்கமாநாம் ஜந்ம ஸ்தேம ப்ரலயரசநாம் இந்திரே த்வம் கரோஷி* என்று ச்லோகமியற்ற அருமையில்லையே. இப்படிச் சொன்னாலன்றோ பிராட்டியின் ஸ்துதியாகும். உண்மையில் இவளிடத்தி லில்லாததை இருப்பதாக வைத்து எங்ஙனே கவிபண்ணுவர்? கூரத்தாழ்வான் முதலான பூர்வாசார்யர்கள் *ஆபவர்க்கிகபதம் ஸர்வஞ்ச குர்வந் ஹரி: யஸ்யா வீக்ஷ்ய முகம் ததிங்கிதபராதீநோ விதத்தே* இத்யாதியாக அருளிச் செய்ததைப் பின்பற்றியேதான் தேசிகனுமருளிச் செய்கிறாரென்பது ஸ்பஷ்டம்.

ஸ்ரீமத்ரஹஸ்யத்ரயஸாரத்திலும் பரிபூர்ணப்ரஹ்மாநுபவாதிகாரத்தில் ''ஈச் வரனுக்கு ச்சத்ரசாமராதிகளைப்போலே லக்ஷணமாகச் சொன்ன ஜகத்காரணத்வ- மோக்ஷப்ரதத்வ – ஸர்வாதாரத்வ – ஸர்வநியந்த்ருத்வ – ஸர்வசேஷித்வ–ஸர்வ சரீரத்வ - ஸர்வசப்தவாச்யத்வ – ஸர்வவேதவேத்யத்வ – ஸர்வலோகசரண்யத்வ –

ஸர்வபலப்ரதத்வ–லக்ஷ்மீஸஹாயத்வாதிகள் ப்ரதிநியதங்கள்'' என்றருளிச் செய்யப்பட்டது. இந்த மஹா வாக்யத்தில் ஜகத்காரணத்வத்தை முந்துறச் சொல்லி முடிவில் லக்ஷ்மீஸஹாயத்வத்தைச் சொல்லியிருக்கையாலே, லக்ஷ்மியினிடத்தில் லக்ஷ்மீஸஹாயத்வம் எப்படி அஸம்பாவிதமோ அப்படியே ஜகத்காரணத்வமும் அவளுக்கு அஸம்பாவிதமென்றும் இவையெல்லாம் பரப்ரஹ்மத்திற்கே பொருந்து மென்றும் காட்டப்பட்டதாயிற்று. இப்படி யருளிச் செய்ததும் ஸ்ரீ பாஷ்யத்தில் "விநதவிவித பூதவ்ராதரக்ஷைகதீக்ஷே" என்றவிடத்துச்ருப்ரகாசிகையில் ''ஜகத்காரணத்வ மோக்ஷப்ரதத்வே ஹி ராஜ்ஞ: ச்சத்ரசாமரவத் ப்ரஹ்மண: அஸாதாரண சிஹ்நம்.'' என்றருளிச் செய்திருப்பதைப் பின்பற்றியதே. முனிவாஹந போகத்தில் ஆதி என்றவிடத்தும் இப்படியேதானுள்ளது. ந்யாய ஸித்தாஞ்ஜந ஜீவபரிச்சேதத்திலுமிப்படியேதான். தேசிகன் சில்லரை ரஹஸ்யங்களென்றும் சில ரஹஸ்யங்கள் ஸாதித்திருக்கிறார். அவற்றை ஸேவித்தால் நல்ல தெளிவு உண்டாகும். ரஹஸ்யரத்நாவளி யென்று ஒரு சிறு ரஹஸ்யம். அதில்

> ''ஸ்ரீமானான நாராயணனொருவனுமே ஸர்வ ஜீவர்களுக்கும் தஞ்சம்........ஸர்வ ஸ்வாமிநியாய் ஸர்வேச்வரனுக்கு சேஷமாய் ஸஹதர்மசாரிணியான பெரிய பிராட்டியார் இத்தலையில் வாத்ஸல்யாதிசயத்தாலும் அத்தலையில் வால்லப்யாதிசயத்தாலும் புருஷகாரமாய்க் கொண்டு இஜ்ஜீவர்களுக்குத் தஞ்சமாகிறாள்''

என்றருளிச் செய்து இதை ரஹஸ்யரத்நாவளீ ஹ்ருதய மென்கிற அடுத்த ரஹஸ்யத்தில் தாமே விவரித்தருளினார். உண்மையில் விவரணாபேக்ஷையே யில்லாத வாக்யமன்றோவிது. இப்படி நிஸ்ஸந்தேஹமாகவருளிச் செய்த விடங்கள் ஒன்றிரண்டல்ல, பலபல விடங்களுண்டு. சதுச்ச்லோகியில் மூன்றாவது ச்லோகத்தின் பாஷ்யத்தில் ''மோக்ஷப்ரதே பகவதி முமுக்ஷூணாம் கடகதயா ஏஷா திஷ்டதீதி ஸர்வஸம்மதம்'' என்றருளிச் செய்ததொன்று போதுமே. ''எம்பெருமான்தான் மோக்ஷ மளிப்பவன்; அதனைப் பெறுவிப்பவளாக மாத்திரம் பிராட்டி இராநின்றாள்'' என்பது இந்த ஸம்ஸ்க்ருத ஸ்ரீ ஸூக்தியின் பொருள். அதற்குமேலுள்ள ஸ்ரீஸூக்திகளும் பிராட்டிக்கு உபாயத்வமில்லையென்பதையே நிலைநாட்டுவன.

த்வயத்தில் பூர்வகண்டத்தில் பிராட்டிக்கு உபலக்ஷணத்வமா? விசேஷணத்வமா? என்று ஒரு விவாதத்தைக் கிளப்பிக்கொண்டு உபலக்ஷணத்வமென்று சிலர் சொல்லுவதாக வைத்து அதைக் கண்டித்து விசேஷணத்வமே யுக்தமென்று ஸ்தாபிக்கப்படுகிறது ரஹஸ்யத்ரய ஸாரத்தில். இது நம்முடைய பூர்வாசார்யர்களின் திருவுள்ளத்தைக் கண்டிப்பதென்று நவீனர்கள் மருண்டிருப்பதுண்டு. இது மிகத்தவறு. இங்குப் பிராட்டிக்கு விசேஷணத்வ மில்லையென்று ஒரு ஆசார்யரும் உரைத்ததில்லை. முமுக்ஷுப்படியில் த்வயப்ரகரணத்தில் ''இப்போதிவளைச் சொல்லுகிறது புருஷகாரமாக'' என்ற சூர்ணையின் வியாக்கியானத்திலே மணவாளமாமுனிகள்–''(புருஷகாரமாக) என்கையாலே உபாயவஸ்து விசேஷணமாயிருக்கிற ஆகாரத்தையிட்டு இவளுக்கு முபாயத்வத்தில் அந்வயம்

சொல்லும் பக்ஷம் நிரஸ்தம்'' என்றருளிச் செய்திருக்குமிடத்து விசேஷணத்வத்தைக் கண்டோக்தியாகவே யருளிச்செய்திருப்பது காண்க. இங்கு உபலக்ஷணத்வம் கொண்டாலும் விசேஷணத்வம் கொண்டாலும் வாசி சிறிதுமில்லை யென்பதை சாஸ்த்ரமர்மஜ்ஞர்கள் உணர்வர்கள். பிராட்டிக்குப் புருஷகாரத்வமுண்டு என்று இசைந்தானபின்பு அவளுக்கு உபாயத்வமுமுண்டு என்று வாய் திறக்க வழியே கிடையாது. உபாயத்வமாவது தானே கொடுக்க சக்தியுடைத்தாகை. அஃதிருக்குமாகில் புருஷகாரக்ருத்யத்திலே நின்று துவளவேண்டிய ப்ரஸக்தியே கிடையாதாகையால் நவீனர்களின் உத்வேலப்ரஸங்கமெல்லாம் உதறித்தள்ளப்பட்டன.

— இவ்விஷயத்தில் நிகமனம் —

பிராட்டிக்குப் புருஷகாரக்ருத்யம் தவிர, தனியே மோக்ஷப்ரதாத்ருத்வமுண்டென்பதை தேசிகன் நெஞ்சாலும் நினைத்தவரல்லர். அப்படியே அவளுக்குத் தனியே ஜகத்காரணத்வமுண்டென்றும் நினைத்தவரல்லர். சதுச்ச்லோகீ பாஷ்யத்தில் * ''ஸலக்ஷ்மீகஸ்ய ஸாம்ராஜ்யம் ஸர்வதா ஸுப்ரதிஷ்டிதம்'' * என்றருளிச் செய்திருப்பதை உணர்வாராருமிலர். இதற்கு என்ன பொருள் தெரியுமோ? எவ்விதமான பெருமை சொல்லவேணுமானாலும் தனிப்படச் சொல்லாதீர்கள்; பிராட்டியோடு கூடிய பெருமானுக்குச் சொல்லுங்கள். ''இவளோடே கூடியே வஸ்துவினுடைய உண்மை'' என்று பிள்ளை லோகாசார்யர் முமுக்ஷுப்படியிலருளிச் செய்தபடியே ஸலக்ஷ்மீகனான ஸர்வேச்வரனுக்கே ஸாம்ராஜ்யம் ஸுஸங்கதமாம். என்று கட்டகுட்யாம் ப்ரபாதமானகணக்கிலே சொல்லித் தலைக்கட்டியானபின்பு பிராட்டியைத் தனியே பிடித்துக்கொண்டு மன்றுட இடமேது?

இனி விபுத்வமா அணுத்வமா என்கிற விசாரத்தில் தேசிகனுடைய திருவுள்ளத்தை ப்ராமாணிகரான ரங்கராமானுஜஸ்வாமி கண்டறிந்து ந்யாயஸித்தாஞ்ஜந வியாக்கியானத்திலே சேமக்காப்பு செய்து போந்தார். எங்ஙனே யென்னில்; நியாயஸித்தாஞ்ஜநத்தில் ஜீவ பரிச்சேதத்தின் தொடக்கத்தில் ''அத ஜீவ:; அல்ப்பரிமாணத்வே ஸதி ஜ்ஞாத்ருத்வம்; சேஷத்வே ஸதி ஜ்ஞாத்ருத்வம், இத்யாதி தல்லக்ஷணம்.'' என்றருளிச்செய்தார் தேசிகன். ஜீவாத்மாவுக்குச் சொன்ன இந்த லக்ஷணமானது பிராட்டியிடத்திலும் ஸமந்வயமடைகின்றதென்பதில் ஐயமில்லை. இவ்விடத்தில் வ்யாக்யாந கர்த்தாவான ரங்கராமாநுஜ ஸ்வாமி இந்த ஜீவலக்ஷணத்திற்குப் பிராட்டியை லக்ஷ்யமாகாதபடி செய்துவிடலாமென்று ஒரு வழியில் நுழைந்து பார்த்தார்; அதாவது. பிராட்டியையும் ஈச்வரகோடியிலேயாக்கி அவளுக்கு சேஷித்வமுள்ளதேயொழிய சேஷத்வம் கிடையாதென்று சொல்லப் பார்த்தார். ''லக்ஷ்ம்யா:......சேஷத்வாபாவாத் நாதிவ்யாப்தி:'' என்று எழுதியும் வைத்தார். உண்மையில் அவர் ப்ராமாணிகராகையாலே இதில் அவருடைய மனம் த்ருப்திகொள்ளவில்லை. அதனால் உடனே யெழுதினர்—''லக்ஷ்ம்யா: ஜீவாந்தர்பாவபக்ஷேது ந தோஷ:—'' பிராட்டியை ஜீவகோடியில் சேர்ந்தவளாகக் கொள்ளில் விரோதமில்லை| என்று நிகமநம் செய்தார். பிராட்டிக்கு ஜீவகோட்யந்தர்பாவ

பக்ஷம் ஹேயமாகில் இப்படி எழுத நெஞ்சிலும் நினையாரன்றோ. "ப்ரஹ்மணோ நிர்குணத்வபக்ஷே து ந தோஷ:, ப்ரதாநஸ்ய காரணத்வபக்ஷே து ந தோஷ:" என்றாற்போன்ற வசநவ்யக்திகள் எங்கேனும் கண்டதுண்டோ? ஸகல பூர்வாசார்ய ஸித்தாந்தம் பிராட்டிக்கு ஜீவகோட்யந்தர்பாவபக்ஷமேயாம் என்கிற கௌரவப்ரதிபத்தியாலன்றோ அந்த மஹான் அங்ஙனமெழுதிவைத்தார். தேசிக திவ்யஸூக்திக்கு வியாக்கியான மெழுதுகையில் அவர் இங்ஙனம் எழுதிவைக்கையாலே தேசிகனுக்கும் அபிமதமான பக்ஷமிது என்று காட்டினவராயுமாயினர். ஆக இவ்வளவால் பிராட்டிக்கு அணுத்வமேயொழிய விபுத்வவாதப்ரஸக்திதானுமில்லையென்றதாயிற்று.

அரசாணிபாலை வேங்கடாத்வரி தாம் இயற்றிய லக்ஷ்மீஸஹஸ்ரத்தில் ஐச்வர்ய ஸ்தபகத்தில் (7) "ஜல்பாகாஸ்தே ஜீவகோடிப்ரவேசம் ஸ்வல்பப்ரஜ்ஞா யே ரமே கல்பயந்தி" இத்யாதிச்லோகங்களால் தூஷித்திருப்பது தேசிகனையும் ரங்கராமாநுஜஸ்வாமியையுமே யென்பது விவரணநிரபேக்ஷம். அந்த ஸ்தபகத்திலேயே (ச்லோ. 14) * ஸ்ரீமத்ராமாவரஜஸரணிம் ச்ரேயஸீமாச்ரிதாநாம் ஆசார்யாணுமபிச" * என்கிறார். அங்கு வியாக்கியானத்தில் "பட்டபராசராதீநாமபிச" என்றெழுதியிருக்கையாலே இந்த நவீனர்களுக்கு பட்டரிடத்திலும் மாத்ஸர்யமுள்ளமை விளங்கிற்று. ... .... .... (5, 6, 7.)

## 8. தயை யென்பது பரது:க்கது:க்கித்வம்.

எம்பெருமானை தயாளுவென்று போற்றுகிறோம். தயையாவது என்ன? என்னில், பிறர் படும் துயரத்தைக்கண்டு தானும் துயருறுகைதான் அது என்று ஸதாசார்யர்களின் திருவுள்ளம். ஆநந்தமயனான எம்பெருமானுக்கும் துயருண்டென்று கொள்வது அவத்யமாகையாலே பிறர்படும் துயரத்தைத் தவிர்க்க நினைப்பதுமாத்திரமே தயை என்னத்தகும் என்பர் பிறர். எம்பெருமானிடத்தில் பரது:க்க நிராகரணேச்சை [அதாவது பிறர்படும் துயரத்தைத் தவிர்க்க நினைக்கை] இல்லையென்று யாரும் சொல்லகில்லார். அதுவுள்ளதென்பது ஸம்ப்ரதிபந்நம். அது ஒரு ஸாமாந்ய குணமேயல்லது விசேஷகுணமன்று. பிறர்படும் துயரத்தைக் கண்டு ஐயோவென்று தானும் துயருறுகையே தயையென்றும் இதுவே மிகச் சிறந்த விசேஷகுணமென்றும், இதனை இல்லைசெய்வது நிர்க்குணப்ரஹ்மவாதத் தோடொக்குமென்றும் ஆழ்வார்களும் எம்பெருமானார் முதலான ஆசார்யர்களும் திருவுள்ளம் பற்றுகிறார்கள். அடுத்தபடி வரப்போகிற வாத்ஸல்யவிசாரம் போலே இந்த தயாவிசாரமும் மிக முக்கியமானது. பரது:க்க து:க்கித்வமென்பது மிகவுயர்ந்த குணமென்றும் இதுவே எம்பெருமானுடைய குணங்களிலே யுருகும் மெய்யன்பர்களின் உள்குழைவுக்கு உறுப்பானதென்றும் உண்மையைத் தெளியவுணரவேணும். பிறர்படும் துயரத்தைக்கண்டு ஐயோவென்றிரங்குகை குணமா தோஷமா என்று முதலில் ஆராயவேண்டும். இதை தோஷமென்று யாரும் சொல்லார். * நண்ணுதார் முறுவலிப்ப நல்லுற்றார் கரைந்தேங்க * என்கிற திருவாய்மொழிப் பாசுரத்தை நோக்குங்கால் பரதுக்கங்களிலே முறுவலிப்பது ஹேய

மென்றும், கரைந்து ஏங்குவது உற்றதென்றும் நன்கு தெரிகின்றது. கரைந்து ஏங்குமவர்களையே நல்லுற்றரென்கிறது. துக்கத்தின் எல்லையிலே நிற்பதுதான் கரைந்து ஏங்குவது. இதை நல்லுற்றருடைய செயலாக அருளிச் செய்கின்ற ஆழ்வாருடைய திருவுள்ளம் இது குணமென்பதே யன்றோ. இது குணமன்று என்று சொல்வதற்கு ஒரு விதமான உபபத்தியும் இருக்க நியாயமில்லை. மநுஷ்யர் களுக்கு இது குணந்தானென்று தேறி விடுமானால் இக்குணம் எம்பெருமானிடத் தில் அதிசயிதமாக இருந்து தீரவேணுமென்பது புநருக்தம்.

ஒருவரிடத்தில் ஒரு குணமுள்ள தென்பதை நாம் எங்ஙனம் தெரிந்து கொள்ளுகிறோம்? குணவானுடைய நடத்தையைக் கண்டும், அந்த நடத்தையைக் கண்ட ஆப்தர்கள் சொல்லுமதுகொண்டும் தெரிந்துகொள்ளுகிறோம். எம்பெரு மான் தனது தயாகுணத்தை எந்தெந்த நடத்தைகளினால் காட்டினானோ அந்த நடத்தைகளெல்லாம் ஸ்ரீராமாயண பாரத பாகவதாதிகளில் விசதம். அவன் அவதாரங்கள் செய்தருளினது எதற்காக வென்றால் தன்னிடத்துள்ள சிறந்த திருக்குணங்களை வெளியிடுதற்காகவே யென்பது பரமார்த்தம். இதைத்தான் பட்டர் * குணபரீவாஹாத்மநாம் ஜந்மநாம் * என்கிற ஸ்ரீஸூக்தியால் நன்கு காட்டி யருளினார். இந்த உபந்யாஸ விஸ்தரங்கள் நம்முடைய ஸ்ரீலோகாசார்ய ஸித் தாந்தஸாரம் முதலானவற்றில் மிக விரிவாகக் காணத்தக்கன. அந்த விரிவுகள் இங்கு வேண்டா. இதில் தேசிகன் திருவுள்ளம் மட்டும் இங்கு நுட்பமாகக் காட்டப்படுவது காண்மின்.

''ஏவம் ஸம்ஸ்ருதிசக்ரஸ்த்தே ப்ராம்யமாணே ஸ்வகர்மபி:, ஜீவே து:க்கா குலே விஷ்ணோ: க்ருபா காப்யுபஜாயதே.'' என்கிற ஆர்ஷச்லோகம் ஸுப்ர ஸித்தம். துக்கப்படுகிற ஸம்ஸாரி சேதநனிடத்திலே எம்பெருமானுக்கு க்ருபை யுண்டாகிறதென்று இதில் சொல்லிற்று. இதை யடியொற்றி * ''அசிதவிசேஷி தாந் ப்ரளயஸீமநி ஸம்ஸரத:'' என்கிற ச்லோகமருளிச்செய்த பட்டர் * தயமாந மநா: * என்றுமட்டுமருளிச்செய்தார். இவ்விரண்டையும் விவரித்தருளாநின்ற தேசிகன் தயாசதகத்தில் ''அசிதவிசிஷ்டாந் ப்ரலயே ஜந்தூநவலோக்ய ஜாத நிர்வேதா'' என்றருளிச்செய்தார். அந்த ஸ்துதியில் தயாலுவான எம்பெரு மானை நோக்கிச் சொல்லவேண்டிய வார்த்தைகளையே தயையை நோக்கிச் சொல்லுகிறாரென்பது நிர்விவாதமாகையாலே ஸம்ஸாரிகளை நோக்கி எம்பெரு மான் ஜாதநிர்வேதனாகிறானென்று ஸ்பஷ்டமாகச் சொன்னாராயிற்று. து:காபிநயம் காட்டினபடியேயொழிய வேறில்லை யென்னில். அவதாரசேஷ்டிதங்களெல்லாம் அபிநயமாத்ரமே யென்று சொல்லி இதிஹாஸ புராணங்களைக் கட்டி உள்ளே வைத்திடவேண்டுமத்தனை. ஆழ்வார்களும் ஆசார்யர்களும் அநுஸந்தித்திருக் கின்ற திருக்குணங்களை உபபாதிக்குமாசாரியர்கள் ஸ்ரீ விஷ்ணுபுராண ஸ்ரீ ராமா யணாதிச்லோகங்களைக் கொண்டே உபபாதிக்கக் காண்கிறோம். இதை ஸ்தோத்ர பாஷ்யாதிகளிலும் காணலாம். அவ்விதிஹாஸ புராணங்களில் எம்பெருமான் காட்டியருளின சரிதைகளைக்கொண்டு ''ஸஞ்ஜாதபாஷ்ப: பரவீரஹந்தா ராமோ முஹூர்த்தம் விமநா பபூவ.'' இத்யாதிச்லோகங்கள் அவதரித்தன. அந்த

ச்லோகங்களை * உள்ளெலாமுருகிக் குரல் தழுத்தொழிந்து உடம்பெலாம் கண்ண நீர் சோர நின்று உபந்யஸிக்கிறார்கள் குணவித்தர்கள். இதெல்லாம் அபிநய மத்தனையென்று கூடவே சொல்லிக்கொண்டு போவதிற்காட்டிலும் நிர்குண ப்ரஹ்மவாதமே நிம்மளம். ... .... .... (8)

## 9. வாத்ஸல்யம் தோஷபோக்யதாரூபம்.

கீழேதயாகுணத்தைப்பற்றிப் பேசினோம்; இப்போது வாத்ஸல்யகுணத் தைப்பற்றிப் பேசுவோம். இதர மதஸ்த்தர்களிற்காட்டிலும் ஸ்ரீவைஷ்ணவர்களுக் குத் தன்னேற்றம் எம்பெருமானுடைய திருக்குணங்களில் உருகி நைவது பற்றியே. * வல்வினையேனை யீர்கின்ற குணங்களையுடையாய்! * என்று ஆழ்வார் கதறுகிறார். அவர்தாம் பாசுரம் பாடத்தொடங்கும்போதே * பொய்ந் நின்ற ஞானமும்... ...அழுக்குடம்பும் * என்று தம்முடைய தேஹத்தின் ஹேயத்வத்தைக் காட்டினார். இப்படி இவர் ஹேயமாகக் காட்டின தேஹத்திலே அவன் தான் பண்ணுகிற போக்யதாபுத்தியை * செஞ்சொற்கவிகாள் * என்கிற திருவாய்மொழி யிலே (ஆழ்வார்) தாமே கூசாமல் கூறியருளினர். அதை தேசிகனும் தாத்பர்யரத் நாவளியிலும் ஸாரத்திலும் அபலபியாமலருளிச் செய்கிறார். அதில் ஒரு விசேஷமும் அற்புதமாகவுள்ளது. அதாவதென்னென்னில், ஸாரத்தில் * செஞ் சொற்கவிகாள் பதிகத்தின் ஸாரத்தைக் கூறுமிடத்து "ஸ்வஜநதநுக்ருதாத் யாதரம் ப்ராஹ சாந்தே" என்றார். எம்பெருமான் தம்முடைய திருமேனியில் வ்யா மோஹம் செய்தபடியை ஆழ்வார் அருளிச்செய்திருக்கிறாரேயொழிய மற்றையோர் களுடைய உடம்பில் வ்யாமோஹம் செய்திருப்பதாகப் பேசியிருக்கவில்லை. அதற் குச்சேர ஸ்வதநு விநிஹிதாத்யாதரம் என்று ச்லோகமிட வேண்டியிருக்க * ஸ்வஜந தநுக்ருதாத்யாதரம் * என்று ச்லோகமிட்டிருக்கிறார். இங்கு ஸ்வாமியின் தாத்பர்யமென்னவென்றால், ஆழ்வார் தம்முடைய அழுக்குடம்பிலுள்ள வழுக்கை விரும்பி அவன் வ்யாமோஹித்திருப்பதாகச் சொன்னவிது தம் விஷயத்தோடு நிற்பதன்று; தன்னடியார்களெல்லாருடைய வுடலிலும் இப்படி விருப்பம் செய்து போருமவன் என்றதாகக் காட்டினபடியென்று திருவுள்ளம்பற்றியே தேசிகன் 'ஸ்வஜந' என்று பணித்தார். "ஔதந்வதே மஹதிஸத்மநி பாஸமாநே ச்லாக்யே ச திவ்யஸதநே தமஸ: பரஸ்தாத், அந்த: களேபரமிதம் ஸுஷிரம் ஸுஸூக்ஷ்மம் ஜாதம் கரீச கதமாதரணாஸ்பதம் தே" என்கிற ச்லோகத்தினால் தம்பக்கலிலும் அப்படிப்பட்ட பரிமாற்றம் நிகழ்ந்தபடியைப் பேசினார். இதில் 'ஆதரணாஸ்பதம்' என்கிற வாசகம் விசேஷித்து நோக்கத்தக்கது. 'என்னுடைய ஹேயமான களே பரத்தில் நீ எப்படி வஸிக்கிறாய்?' என்று கேளாதே பலாப்பழத்தை ஈ மொய்த் துக்கொண்டு கிடக்குமாபோலேயும் தண்டாமரையின் தேனை வண்டுகள் மொய்த் துக்கொண்டு கிடக்குமாபோலேயும் பரமாதரம் காட்டிக்கொண்டு கிடக்கிறாயே! இது என்னே! என்று வியந்து கேட்கிறபடி கண்டீரே. (இங்கு கரூர் சீமாச்சார் வியாக்கியானம் பொருத்தமாக அமைந்திருக்கின்றது)

## 10. விஹிதவிஷய நிவ்ருத்தி தன்னேற்றமென்பதுபற்றி.

க்ருஹஸ்தாச்ரம தர்மமாக விஹித விஷய போகம் ப்ராப்தமானாலும், அநந்யார்ஹசேஷத்வ அநந்யசரணத்வங்களோடுகூட அநந்யபோக்யத்வ

மென்கிற விலக்ஷணமான தன்மையையும் பெற்றிருக்கின்ற விசேஷாதிகாரிக்கு அந்த விஹித விஷய போகம் அருவருக்கதக்க தாய் விடத்தகுந்ததேயாகுமென்பது ஸதாசார்ய ஸித்தாந்தம். சாஸ்த்ரங்களில் ஸ்வதார போகம் நியமமாக விதிக்கப்பட்டு அது தவிர்ந்தால் தோஷமும் ப்ரதிபாதிக்கப்பட்டிருக்கையாலே விஹிதவிஷய நிவ்ருத்தி அசாஸ்த்ரீய மென்பர் நவீநர். ஸ்ரீவசநபூஷணத்தில் இரண்டு மூன்றிடங்களில் உத்தமாதிகாரிக்கு விஹிதவிஷய நிவ்ருத்தியைத் தன்னேற்றமாக அருளிச்செய்கிருர். மிகுஞானச் சிறுகுழவியான எம்பெருமான் சோதிவாய் திறந்து பணித்த கீதையில் (8-3) எட்டாவது அத்யாயத்தில் மூன்ருவது ச்லோகத்தின் பாஷ்யத்தில் ஸ்ரீபாஷ்யகாரர் வெளியிட்டருளினதும் தாத்பர்ய சந்த்ரிகையில் தேசிகனுல் விவரிக்கப்பட்டதுமான விசேஷார்த்தமிது. இதனை விவரிப்போமிங்கு:—

கீழ் ஏழாவது அத்யாயத்தின் முடிவில் கண்ணபிரான் * ஜராமரண மோக்ஷாய * என்கிற இருபத்தொன்பதாம் ச்லோகத்தில் * தே ப்ரஹ்ம தத் விது: க்ருத்ஸ்நமத்யாத்மம் கர்ம சாகிலம் * என்று ஒரு வார்த்தை சொன்னுன். அது கேட்ட அர்ஜுனன் அந்த வார்த்தைக்கு உண்மையான பொருளைத் தெரிந்து கொள்ளவேண்டிக் கண்ணனையே கேள்வி கேட்கிருன் எட்டாவது அத்யாயத்தின் 1, 2-ச்லோகங்களினுல். * கிம் தத் ப்ரஹ்ம கிமத்யாத்மம் கிம் கர்ம புருஷோத்தம * என்று தொடங்கிக் கேள்விகள் உள்ளன. மூன்ருவது ச்லோகம் தொடங்கிக் கண்ணனுடைய விடை வெளிவருகின்றது. கிம் கர்ம என்ற கேள்விக்குக் கண்ணனுடைய விடை * பூதபாவோத்பவகரோ விஸர்க: கர்மஸம்ஜ்ஞித:* என்பது. இங்கு விஷயமென்னவென்ருல், கேண்மின்.

சிலவற்றை அறியவேண்டும் என்று பகவான் நியமித்துவருகையில் கருமத்தை அறியவேண்டும் என்று சொல்லியிருந்ததனுல் கருமமென்ருல் எது? என்று அர்ஜுனன் கேட்க நேர்ந்தது. அதற்கு பகவான் விடை கூறியுள்ளார். ஒருவன் ஒன்றை யறிவதானது, பற்றுவதற்காகவும் ஆகலாம். விடுவதற்காகவும் ஆகலாம். நல்லதாயிருந்தால் பற்றுவது. கெட்டதாயிருந்தால் விடுவது. ஆகவே நல்லதையும் தெரிந்துகொள்ளவேண்டும் கெட்டதையும் தெரிந்து கொள்ளவேண்டும். இங்கே தெரிந்துகொள்ளவேண்டியதாகக் கூறப்பட்ட கருமம் நல்லதன்று, கெட்டது—என்பதாக பகவானுடைய விடையினுல் தெரிகின்றது. பூதபாவோத்பவகரோ விஸர்க: கர்மஸம்ஜ்ஞித: * என்பதற்கு நம்முடைய ஸ்ரீ பாஷ்யகாரர் அருளிச் செய்திருக்கிற அர்த்தம் வருமாறு:— ஸ்த்ரீ புருஷ ஸம்யோக மென்பதுதான் இங்கே கருமமென்கிறது. இது மிகவும் அருவருக்கத்தக்கதாகையால் விடத்தக்கதாக இதனை யறியவேண்டும். இதை விடவேண்டுமென்பது மேலே பதினோராவது சுலோகத்திலும் காட்டப்படுகிறது என்பதாம். இதனுல் நாம் தெரிந்துகொள்வது, க்ருஹஸ்தாச்ரம தருமமாக விஹிதவிஷயபோகம் ப்ராப்தமேயானுலும் அது விசிஷ்டாதிகாரிக்கு ஜுகுப்ஸநீயமேயென்று. ஆகவே இவ்விஷயத்திலும் ஸத்ஸம்ப்ரதாய ஸித்தாந்தம் நிரவத்யமென்றுணர்க. இவ்விடத்தில் தாத்பர்ய சந்த்ரிகையை நன்கு ஸேவிப்பது. ... ... (10)

தற்காலம் இப் பத்துவிஷயங்களோடு நிறுத்துகிரேம்.

ஸ்ரீரஸ்து



    

SRI JAGADACHARYA SIMHASANADHIPATHI

PADMAVIBHUSHANA MAHAMAHIMOPADHYAYA

# P. B. ANNANGARACHARYA

**KANCHEEPURAM-3.**

శ్రీ కాంచీ జగదాచార్య సింహాసనాధిపతులైన

ప్రతివాదిభయంకరమ్

అణ్ణంగరాచార్య స్వాములవారు

பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்

ஆழ்வாரெம்பெருமானுர் ஜீயர் திருவடிகளே சரணம்

சென்னை மயிலையில் **T. A. T.** ஸ்வாமி என்று ப்ரஸித்தராய் எழுந்தருளியிருக்கும்

ஸ்ரீமதுபயவே. திருமலை அனந்தாண் பிள்ளை (குணக்கரம்பாக்கம்) திருவேங்கடாசாரியரின்

ஷஷ்ட்யப்த பூர்த்தி மஹோத்ஸவத்தில் (25—7—1973)

ஸ்ரீகாஞ்சி ப்ரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசாரியர் வாசித்தளித்த

# மங்களாசாஸந நவரத்ந மாலிகை

—: * :—

(க) श्रीरामानुजयोगि श्रीमदनन्तार्यमुख्यमान्याचार्यवर्याः ।

दम्पत्योरनयोरिह सकलं कल्याणं दिशन्तु प्रहृष्टाः ॥

(பொழிப்புரை) எம்பெருமானுர், அனந்தாழ்வான் முதலான ஆசார்யவர்யர்கள் இந்த தம்பதிகளுக்கு ஸகலவித நன்மைகளையும் கடாக்ஷித் தருளவேணும். (1)

(உ) भारद्वाजकुलाब्धिपूर्णकिरणश्रीवेङ्कटार्यात्मज-

श्रीवासार्यतनूजरत्नमनघैः पाण्डित्यमुख्यैर्गुणैर्भूषितः ।

श्रीमान् श्रीतिरुवेङ्कटार्यसुकृती षष्ट्यब्दपूर्त्युत्सवं

विन्दन् सम्प्रति हर्षयत्यतितरामस्मादृशान् बान्धवान् ॥

பாரத்வாஜகுலதிலகரான வேங்கடாசார்ய ஸ்வாமியின் திருக்குமாரரான ஸ்ரீநிவாஸாசார்ய ஸ்வாமியின் புத்ரரத்நமான திருவேங்கடாசார்ய ஸ்வாமி இப்போது அறுபதாண்டு நிறைவு மஹோத்ஸவத்தை அநுபவித்துக்கொண்டு நம்போல்வாரை மகிழ்விக்கிறார். (2)

(௩) [illegible]
[illegible]
[illegible]
[illegible]

கோயில் திருமலை பெருமாள் கோயிலெம்பெருமான்களின் திருவருளாலும் நம்மாழ்வார், எம்பெருமானுர், அனந்தாழ்வான் ஆகிய இவ்வாசிரியர்களின் கடாக்ஷத்தினுலும், ஸ்ரீ லோகாசார்ய ஸ்ரீமத் வரவரமுனிகளின் கிருபையினுலும் எல்லாச் செல்வங்களையும் அடைந்து நீடூழி விளங்கவேணும் நம் T.A.T. ஸ்வாமி. (3)

(௪) [illegible]
[illegible]

திருமலை அனந்தாழ்வானுடைய திருவம்சத்தில் பல பல மஹான்கள் தோன்றியிருந்தனர். அன்னவர்களில் ஒருவராய் மஹா விவேகியான நம் T.A.T. ஸ்வாமி பெரும் புகழுடன் இந் நிலத்தில் நெடுநாள் வாழ்க. (4)

(௫) [illegible]
[illegible]

சுபமான ப்ரமாதீச ஸம்வத்ஸரத்தில் திருமங்கையாழ்வாரின் திருவவதார நன்னுளில் திருமலையனந்தாழ்வானுடைய குல விளக்காகத் தோன்றி விளங்குகின்ற தேவரீரை இன்று போல எஞ்ஞான்றும் கண்டுகொண்டிருக்கக் கடவேன். (5)

(௬) [illegible]
[illegible]
[illegible]
[illegible]

ஸௌபாக்யவதியான தேவியாருடனும் புத்ர பௌத்ரர்களுடனும் கூடி ஸகலவிதமான ஸம்பத்துக்களையும் பெற்று "நல்ல பதத்தால் மனைவாழ்வர்" என்றும் "வாழ்வர் வாழ்வெய்தி ஞாலம் புகழவே" என்றுமுள்ள அருளிச்செயல்களின்படி விளங்கிவருகின்ற தேவரீர் இங்ஙனமே எந்நாளும் வாழ்க. (6)

(௭) [illegible]
[illegible]
[illegible]
[illegible]

திருமலையனந்தாழ்வானுடைய குல விளக்காகத் தோன்றினவரே! தருமகாரியங்களைச் செவ்வனே நடத்திவருவதில் வல்லவரே! புராதன நல்லொழுக்கங்களில் கருத்து ஊன்றியிருப்பவரே! ஸத்துக்களின் நேசத்துக்கு இலக்கானவரே! தேவரீர் பேரருளாளனுடைய திருவருளால் மீண்டும் அறுபதாண்டு நிறைவு மஹோத்ஸவத்தை அநுபவிக்கவேணும் (எம்பெருமானுரைப்போலே நீண்டகால மெழுந்தருளியிருக்கவேண்டுமென்கை.) (7)

(௮) [illegible]
[illegible]

*ஸ்ரீஉஷாதி ஹயம்கராய-உஹிதஸ்ரீவம்ஶஸம்பஸ்ஷஃ*

*ஹஶ்ரஷாணஃகரணஸ்ர ஸஹ விஜயதெ ! ஸ்ரீவெம்கடாயெ-ரா உஹாஸ ||*

T.V.S. கம்பெனியைத் தொடங்கிவைத்த ஸ்ரீமான் ஸுந்தரம் ஐயங்காருடைய திருக் குமாரரான ராஜமையங்காரின் அன்புக்கிலக்காகி அவருடைய சேர்க்கையினுல் அபிவ்ருத்தி யடைந்தவரும் (வாழ்க்கைத்துணைவியின் மூலமாக) ப்ரதிவாதி பயங்கரவம்ச ஸம்பந்தம் பெற்று மகிழ்பவருமான நம் T.A.T. ஸ்வாமி வெற்றியுடன் விளங்கிவருகின்ருர். (8)

(கூ) *காம்ஶீவாதிஹயக்ஷரவம்ஶீயாணஜரய-உநாஜெவழ ।*

*ஷஷ்ட்யூஷ்வஸதி-உஸஉயெ உஜஹாஶஸாஸ்ய ஜொடிதெ ஸாதராழ ||*

ஸ்ரீ காஞ்சீ ப்ரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியனென்னுமடியேன் இந்த மஹோத்ஸவ ஸமயத்தில் கூடியிருந்து இங்ஙனே மங்களாசாஸநம் செய்து மகிழ்கின்றேன். (9)

## வெண்பாக்கள்

திருமலையில் வாழ்ந்த அனந்தாழ்வான் சீரார்
திருமரபில் திங்கள்போல் தோன்றிப்—பெருமையுடன்
வாழுந் திருவேங்க டாரியனே வள்ளலே
வாழ்வீர்நீர் வைபவங்கள் வாய்ந்து. (1)
வாழ்வர்கள் வாழ்வெய்தி ஞாலம் புகழவெனும்
ஆழ்வா ரருளிச் செயற்படியே—தாழ்வாது
மில்லாது வாழ்ந்திடுவீர் இன்றுபோல் எஞ்ஞான்றும்
நல்லார் உகந்திடவே நன்கு. (2)
ஏய்ந்த பெருங்கீர்த்தி யிராமா நுசர்தாளில்
வாழ்ந்த வனந்தார்யர் வண்புகழை—ஆய்ந்துரைக்க
வல்லார்தம் சேவடியில் வைகுபெரும் பத்தியுடன்
சொல்லார வாழ்வீர் சுகம். (3)
ஆழ்வாரு மாரியரும் ஆதரித்த வாழ்பொருளைத்
தாழ்வாது மின்றியே தன்னெஞ்சில்—வாழ்வாகக்
கொண்டதிரு வேங்கடவா! கோதில் குணக்கடலே!
மண்டலத்தில் நீடூழி வாழ். (4)
இல்லறத்தில் இன்பங்கள் ஏதுங் குறைவின்றி
நல்லறமும் நல்லார்கள் போற்றிடவே—எல்லிப்
பகலென்று தெப்போதும் பண்பார்ந்த செய்திகளால்
செகமிதனில் வாழ்வீர் சிறந்து. (5)
தீங்கேது மில்லாத் திருவேங்க டாரியனே!
பாங்காகப் பாருலகில் பல்லாண்டு—நீங்காத
செல்வம் மலிந்து சிறந்து பொலிந்திடவே
செல்வனரு ளாகுஞ் சிறந்து. (6)
கச்சி நகர்வாழும் அண்ணங்க ராரியன்நான்
மெச்சித் திருவேங்க டாரியனை—இச்சொல்லால்
போற்றி யுகந்து புகழ்ந்து மகிழ்ந்திட்டேன்
ஏற்ற திதுவா மெனக்கு. (7)

श्रीमते रामानुजाय नमः श्रीमदनन्तार्यमहागुरवे नमः

# श्री वेंकटार्यपञ्चकम्

—: * :—

शेषार्यवंशसंभूत ! सद्गुणौघविभूषित ! ।
सदाचरणयुक्त ! श्रीवेंकटार्य ! बुधोत्तम ! ॥ १ ॥

प्रमादीचस्य कर्किश्रीकृत्तिकोडुनि शोभने ।
कृतावतार ! सद्वृत्त ! भगवद्भक्तिभूषित ! ॥ २ ॥

आचार्यसेवानिरत ! विनयोज्ज्वल ! कीर्तिमन् ! ।
षष्ट्यब्दपूर्तिलाभेन तोषिताशेषसज्जन ! ॥ ३ ॥

नानादेशगतैस्सर्वैरास्तिकै र्विबुधोत्तमैः [।]
आशास्यमानसद्भद्र ! सर्वसद्गुणमण्डित ॥ ४ ॥

रङ्गेशवेंकटाद्रीशहस्तीशयदुशैलपाः ।
नाथयामुनशेषार्याः कुर्वन्तु तव मङ्गळम् ॥ ५ ॥

[ शेषार्याः—श्रीरामानुजानन्तार्यवरवरमुनयः ]

श्रीयादवाद्रिनिलयोऽक्कारक्कनिरिति श्रुतः ।
संपत्कुमार एतत्ते विज्ञापयति मङ्गलम् ॥

ति. अ. अक्कारक्कनि संपत्कुमारनामा
मधुरकविदासः



ஷஷ்ட்யப்தபூர்த்தி கோஷ்டியை ஸ்ரீமத் உபய வே. **P. B. A.** ஸ்வாமி அலங்கரித்த ஸந்தர்ப்பம் ஸ்ரீ அட்வகேட், **V. N.** வெங்கடவரதாச்சாரியர் ஸ்வாமியும் ஸேவை ஸாதிக்கிறுர்.

# விவாஹ மஹோத்ஸவம்



தில்லியில் உயர்பதவியில் வாழ்ந்து ஓய்வு பெற்றுள்ளவரும், ஸம்ப்ரதாய ஸேவையில் ஈடுபட்டுள்ளவருமாகிய ஸ்ரீமான் உ. வே. A. **ராமாநுஜாசாரியருடைய** குமாரன் சிரஞ்சீவி. *A. R.* **கோபால க்ருஷ்ணன்,** L.M.E.,க்கும் ஸ்ரீமான் உ. வே. **பார்த்தஸாரதி ஐயங்காருடைய** (Superintendent, Tanjore Medical College) குமாரத்தி சௌபாக்கியவதி **சுலோசனாவுக்கும்** 13—5—73ல் தஞ்சையில் விவாஹம் நடந்தேறியது. "ஞால புகழ வாழ்க" என்று வாழ்த்துகிரோம் நாம்.

# திருமண நிகழ்ச்சி









ஸ்ரீமான் A. ராமாநுஜாசாரியரின் புதல்வி சௌபாக்யவதி சந்த்ராவுக்கும் ஸ்ரீமான் உ. வே. காந்தூர் வெங்கடாசாரியரின் குமாரன் சிரஞ்சீவி K. V. பேருளாள னுக்கும் (Prop. M/s. K. V. P. & Co., Madras) சமீபத்தில் காந்தூரில் திருமணம் சிறப்பாக நடைபெற்றது. ஸ்ரீமான் உ. வே. குமாரவெங்கடாசார்ய ஸ்வாமி, ஸ்ரீமான் உ. வே. P. B. அண்ணங்கராசாரிய ஸ்வாமி போன்ற பெரியார்கள் எழுந்தருளியிருந்து ஆசீர்வதித்தனர்.

[From Free India]

# ஸ்ரீகாஞ்சீபுரியில் சதாப்தீ மஹோத்ஸவம்.

𑌶𑍍𑌰𑍀𑌮𑍁𑌖𑌕𑍁𑌮𑍍𑌭𑌸𑍍𑌵𑌾𑌤𑍀𑌜𑌾𑌤𑌂 𑌅𑌨𑌨𑍍𑌤𑌾𑌰𑍍𑌯𑌸𑍂𑌰𑌿𑌮𑌹𑌮𑍀𑌡𑍇 ।
𑌶𑍍𑌰𑍀𑌕𑍃𑌷𑍍𑌣𑌸𑍂𑌰𑌿𑌤𑌨𑌯𑌂 𑌵𑌾𑌦𑌿𑌭𑌯𑌙𑍍𑌕𑌰𑌕𑍁𑌲𑌾𑌬𑍍𑌧𑌿𑌚𑌨𑍍𑌦𑍍𑌰𑌮𑌸𑌂 ॥

ஸ்ரீமுககும்பஸ்வாதீஜாதம் அந்தார்ய ஸூரிமஹமீடே ।
ஸ்ரீ க்ருஷ்ணஸூரிதநயம் வாதிபயங்கர குலாப்தி சந்த்ரமஸம் ॥

ஸ்ரீகாஞ்சீபுரியில் ஸன்னிதி வீதியில் எழுந்தருளியிருந்து ஜகத்குரு காதி ஸ்வாமி என்று ப்ரக்க்யாதி பெற்றிருந்த ஸ்ரீமதுபயவே. பிரதிவாதி பயங்கரம் அனந்தாசார்ய ஸ்வாமி சென்ற ஸ்ரீமுக வருஷத்திற்கு முந்தின ஸ்ரீமுகஸம்வத்ஸரத்தில் மாசிமாதத்து ஸ்வாதி நக்ஷத்திரத்தில் திருவவதரித்தருளினவர். சென்ற ஸ்ரீமுக ஸம்வத்ஸரத்தில் ஷஷ்ட்யப்தபூர்த்தி மஹோத்ஸவத்தை பரமவிபவமாகக் கண்டருளினவர். அதன் பிறகு இரண்டு மூன்று ஸம்வத்ஸரமே இந்த விபூதியை அலங்கரித்தெழுந்தருளியிருந்து இந்த ஜகத்தின் தௌர்ப்பாக்யத்தினால் திருநாடலங்கரித்தருளினவர். இந்த மஹா ஸ்வாமிக்கு சென்ற பரிதாவி ஸம்வத்ஸரம் மாசிமாதம் முதலாக நூறுவது திருநக்ஷத்திரம் நடந்து வருகிறது. அந்நாள் முதலாகவே ஸ்ரீஸ்வாமியின் சிஷ்யவர்க்கங்கள் நிரம்பின விடங்களில் சிலவிடங்களில் தினப்படியாகவும் சிலவிடங்களில் ஸ்வாதி நக்ஷத்திரந்தோறும் விசேஷக் கொண்டாட்டங்கள் நடத்தப்பட்டு வருகின்றன. ஸ்ரீகாஞ்சீபுரியிலும் சென்ற மாசி ஸ்வாதி முதலாக ஸ்ரீ ஸ்வாமி திருமாளிகையிலும் அண்ணு சன்னிதியிலும் வேதபாராயணம், திவ்யப்பிரபந்த சேவை உபந்யாஸங்கள் அடுத்தடுத்து நடத்தப்பட்டு வருகின்றன. இதுதான் சதாப்தீ மஹோத்ஸவமென்பது. அடுத்த மாசி மாஸத்தில் ஸ்வாதீ நக்ஷத்திரங்கள் இரண்டு வருவதால் முதல் ஸ்வாதி நக்ஷத்திரம் முதலாக 10 நாட்களில் இந்த சதாப்தீ மஹோத்ஸவம் ஸ்ரீ ஸ்வாமி திருமாளிகையில் விசேஷவைபவமாக நடத்தப்படும். அடுத்த ஸ்வாதீ நக்ஷத்திரத்தில், ஸ்ரீ ஸ்வாமியின் சாச்வதகீர்த்திஜயஸ்தம்பமாக விளங்கும் (Bombay) பாம்பே பனஸ்வாடி திருவேங்கடமுடையான் ஸன்னிதி முதலான விடங்களில் இதேபோல் பத்து நாள் மஹோத்ஸவம் நடைபெறும்.

ஸ்ரீ ஸ்வாமியால் அச்சிட்டு வெளியிடப்பட்ட பலபல சாஸ்த்ர க்ரந்தங்கள் இப்போது துர்லபமாகிவிட்டபடியால் அவற்றில் முக்யமானவற்றை மறுபதிப்புச் செய்யவும் முயற்சிகள் நடந்துவருகின்றன. 2—9—73 ஆகிய இன்றையதினம் ஸ்வாதீ நக்ஷத்திரம். ஸ்ரீ ஸ்வாமி திருமாளிகையில் வழக்கம்போல் விசேஷ கோஷ்டி நடைபெற்றது. ஸ்ரீ ஸ்வாமியின் திருக்குமாரருக்கு இன்றே 72 திருநக்ஷத்திரப் பூர்த்தியாதலால் அதுபற்றின உபலாலனமும் சிறப்பாக நடந்தது.

இங்ஙனம்,
பத்ராதிபர்





ஸ்ரீ பெரும்பூதூரில் **H. H. ஸ்ரீமன் நாராயண ராமானுஜ ஜீயர் ஸ்வாமிகள்** ஐந்து நாள் நடத்தின மஹாக்ரதுவின் சார்பாக 15—8—73 காலை ஸ்ரீ யதிராஜ ஜீயர் மடத்தில் **Exhibition** திறந்து வைக்கப்பட்ட ஸமயம்

# அபூர்வார்த்த ரத்ந நிதி

(297 ஸஞ்சிகையின் தொடர்ச்சி)

## 51. என்னீர்மை கண்டிரங்கியிது தகாதென்னாத

திருவாய்மொழியில் (1—4—4) தூதுவிடும் பதிகமான 'அஞ்சிறைய மட நாரையில்' இது நான்காம் பாசுரம். என்னுடைய தன்மையைக்கண்டு வைத்தும். இரங்காத பெருமானுக்கு நான் என்ன செய்தி சொல்லுவேன் என்று தளர்ந்து பேசுவதாக உள்ளது.

முற்காலத்தில் ஒரு தமிழன் பட்டரிடத்தில் வந்து இப்பாட்டின் முதலடியில் ஒரு ஆக்ஷேபம் செய்தானும்; அதாவது—இது பிரிந்த நிலைமையில் சொல்லுகிற பாசுரமேயன்றிக் கூடியிருக்கும் நிலைமையில் சொல்லுகிற பாசுரமன்றே; பிரிந்திருக்கும் காலத்தில் தலைவியின் தன்மைகளைத் தலைமகன் பிறர் சொல்லக் கேட்கலாகுமே தவிரக் கண்ணால் நேரில் காணமுடியாதன்றோ! ஆகவே, "என்னீர்மை கேட்டிரங்கியிது தகாதென்னாத" என்று பாசுரமிருக்கவேண்டியது உசிதமாயிருக்க, "என்னீர்மை கண்டிரங்கி" என்று எப்படிச் சொல்லலாம்? என்று பூர்வபக்ஷம் செய்தானும். பட்டர் அதைக்கேட்டு 'பண்டிதரே! நன்கு கேட்டீர்; "புல்லிக் கிடந்தேன் புடைபெயர்ந்தேனவ்வளவில் அள்ளிக்கொள்வற்றே பசப்பு" என்ற திருக்குறளும், "ஊருண்கேணி யுண்டுறைத்தொக்க பாசியற்றேபசலை, காதலர் தொடுவுழித் தொடுவுழி நீங்கி விடுவுழி விடுவுழிப் பரத்தலானே" என்ற குறுந்தொகைச் செய்யுளும் உமக்குத் தெரியாதுபோலும்' என்று சொல்லி அவற்றைப் பரக்க உபந்யஸித்து ஸமாதானப்படுத்தியருளினராம். (ஸமாதான விவரணம் வருமாறு:—)

புல்லிக்கிடந்தேன் என்ற குறள் திருக்குறளில் பசப்புறு பருவரல் எனுமதிகாரத்தில் ஏழாவதாகும். முன்பொருநாள் காதலரை அழுந்தத் தழுவிக்கிடந்தேன்; கை மாறுவதற்காகச் சிறிது புடைபெயர்ந்தேன்; ஒருநொடிப்பொழுது விலகின மாத்திரத்திலும் பசலைநிறம் வந்து உடம்பெல்லாம் மூடிக்கொண்டது என்பது இதன் கருத்து. "ஊருண்கேணி" என்ற செய்யுள் குறுந்தொகையில் முன்னூற்றுத் தொண்ணூற்றென்பதாவது. இதன் கருத்தாவது—ஊரிலுள்ள ஜனங்களாலே நீருண்ணப்பெறுகிற கேணியினுள்ளே படர்ந்து கிடக்கின்ற பாசியைப் போன்றது பசலைநிறம்; தண்ணீரில் நாம் கை வைத்தோமாகில் பாசி நீங்கும். கையை எடுத்து விட்டோமாகில் அவ்விடமெல்லாம் பாசி மூடிக்கொள்ளும்; அதுபோல, கணவனுடைய கை படுமிடங்களில் பசலைநிறம் நீங்கும்; அணைத்த கை நெகிழ்த்தவாறே அப்பசலைநிறம் படரும்; ஆதலால் பாசிபோன்றது பசலை என்றபடி. (தொடுவுழித் தொடுவுழி—தொட்டவிடங்கள்தோறும். விடுவுழிவிடுவுழி—விட்ட இடங்கள் தோறும். பரத்தலான்—வியாபிக்கிறபடியினால்) பிரிவாற்றாமையினால் ஸ்த்ரீகளின்

மேனியில் தோன்றும் நிறவேறுபாடு பசலைநிறமெனப்படும். நாயகனைவிட்டுப் பிரிந்த காலத்திலே நாயகியினுடலில் இந்த நிற வேறுபாடு தோன்றுவது ஆச்சரிய மன்று; ஒரு படுக்கையிலேயே படுத்துக் கூடியிருக்கும்போதே க்ஷணகாலம் கை நெகிழ்த்தவளவில் இந்தப் பசலைநிறம் படர்கின்றதென்றால் பிரிந்தநிலைமையில் கேட்கவேண்டியதில்லையன்றோ.

பட்டரிடத்தில் ஆக்ஷேபம் செய்த தமிழனுக்கு இப்பொழுது என்ன ஸமாதானமாயிற்றென்னில், இப்பாட்டு பிரிவுகாலத்தில் சொல்லுவதானாலும் கூடியிருந்த காலத்தில் நிகழ்ந்த ஸம்பவத்தையே நினைப்பூட்டுவதால் கேட்டிரங்கி என்ன வேண்டியதில்லை; கண்டிரங்கி என்றே சொல்லத்தகும் என்பதாம்.

## 52. எங்கானுமீதொப்பதோர் மாயமுண்டே!

ஆழ்வார்களின் அனுபவப்ரகாரங்கள் பல்வகைப்பட்டவை யென்பது ப்ரஸித்தமே. சிலவிடங்களில் அவனுடைய பரத்துவத்தைப் பரக்க அனுபவிப்பர்கள். சிலவிடங்களில் அவனுடைய ஸௌலப்யத்தை விசேஷமாக அநுபவிப்பர்கள். இங்ஙனன்றிக்கே ஒரே இடத்தில் பரத்வத்தையும் ஸௌலப்யத்தையும் சேர்ப்பது ஒரு விலக்ஷணமான அநுபவம். பரத்வத்தை முன்னே சொல்லி உடனே ஸௌலப்யத்தைச் சொல்லுவது, ஸௌலப்யத்தை முன்னே சொல்லி உடனே பரத்துவத்தைப் பேசுவது என்றிருவகையுண்டு. பரத்வத்தைப் பேசினவாறே அதுகேட்டு அஞ்சி இருக்க நினைப்பவர்களுக்கு ஸௌலப்யத்தைச் சொல்லித் தெளிவித்தல். ஸௌலப்யத்தைக் கேட்டவாறே ஸாமாந்யமாக நினைப்பவர்களுக்கு பரத்வத்தைப் பேசி பக்தியை ஊட்டுதல்; இப்படியான அநுபவங்களில் திருமங்கையாழ்வார் தமது பெரிய திருமொழியில் "எங்கானுமீதொப்பதோர் மாயமுண்டே" (10—6) என்கிற பதிகத்தில் பரத்துவத்தை முந்துறப்பேசி ஸௌலப்யத்தைப்பின்னே பேசுகிறார். மேலே பதினோராம்பத்தில் "மானமருமென்னோக்கி" எனும் ஐந்தாம்பதிகத்தில் பாட்டுத்தோறும் முன்னடிகளால் ஸௌலப்யத்தையும் பின்னடிகளால் பரத்வத்தையும் பேசியனுபவிக்கிறார். அவ்வனுபவத்தின் விவரணம் மேலே ப்ராப்தமாகும். இப்போது "எங்கானுமீதொப்பதோர்" எனும் பதிகத்தின் அநுபவம் கேளீர்! இப்பதிகத்தில் பாட்டுத்தோறும் மூன்றடிகளால் எம்பெருமானுடைய பரத்வத்தைப் பரக்கப்பேசி ஈற்றடியை "அவன் காண்மினின்றுய்ச்சியரால் அளைவெண்ணெயுண்டாப் புண்டிருந்தவனே." என்று இம்மகுடம் வைத்தே தலைக்கட்டுகிறார். இங்குச் செய்யவேண்டிய ரஸாநுபவத்தை நம்முடைய திவ்யார்த்த தீபிகை கொண்டு செய்க.

## 53. எங்கே காண்கேனீன் துழாயம்மான் தன்னை

திருவாய்மொழியில் (8—5—11) "எங்கே காண்கேனீன் துழாயம்மான் தன்னை யானென்றென்று அங்கே தாழ்ந்த சொற்களால் அந்தண்குருகூர்ச் சடகோபன்" என்றுள்ளது. ஆசார்ய ஹ்ருதயத்தில் ரிஷிகளிற் காட்டிலும்

ஆழ்வார்க்குண்டான பெருமையை பலவாறு விளக்கிக்கூறுமிடத்து இப்பாசுரத்தை யெடுத்துக்கொண்டு ''எங்கே காண்கேனென்னுமிவரலமாப்பு அவர்களுக்குப் புத்ர வியோகத்திலே'' என்றருளிச் செய்திருப்பது அற்புதமான ஸ்ரீஸூக்தி. (அதாவது) எம்பெருமானைப் பிரிந்த வருத்தத்தினால் கண்ணுங்கண்ணீருமாய்க் கடலோடு மலையோடு ஆகாசத்தோடு வாசியற எங்கும்தேடி நெஞ்சு கலங்கி ''திருமாலே!'' என்று கூப்பிட்டு 'எங்கே காணக்கடவேன்! என்று இவ்விதமாக எம்பெருமான் விஷயத்தில் ஆழ்வார்படும் ஆற்றாமையெல்லாம் ரிஷிகளுக்குப் புத்ர விரஹத்திலேயாயிருக்கும். வஸிஷ்டபகவான் புத்திரனிறந்த வருத்தத்தினால் மரணத்தை விரும்பி மலையிலேறி விழுவது, நெருப்பிலே குதிப்பது, கழுத்தில் கல்லைக் கட்டிக்கொண்டு கடலிலே விழுவது ஆக விப்படியெல்லாம் தடுமாறினாரென்பதும், வேதவ்யாஸ பகவான் புத்திர வியோகம் பொறுக்க மாட்டாமல் 'புத்திரனே!' என்று வாய்விட்டுக் கூப்பிட்டு அழுதுகொண்டு காணப்பெறாமையால் அலமந்து திரிந்தாரென்பதும் அவர்களேயெழுதி வைத்த புராணங்களில் ப்ரஸித்தம்.

## 54. எற்றுக்கு நீயென் மருங்கில் வந்தாய் எம்பெருமான் நீ எழுந்தருளே

எம்பெருமானோடு ப்ரணயகலஹம் கொண்டாடிப் பேசின ஆழ்வார்கள் மூவர்—நம்மாழ்வாரும் குலசேகராழ்வாரும் திருமங்கையாழ்வாரும். திருவாய்மொழியில் (6-2) மின்னிடைமடவார் பதிகம் நம்மாழ்வாருடைய ஊடல். பெரிய திருமொழியில் (10-8) காதில் கடிப்புப் பதிகம் திருமங்கையாழ்வாருடைய ஊடல். பெருமாள் திருமொழியில் (6) ஏர்மலர்ப்பூங்குழல் என்கிற பதிகம் குலசேகராழ்வாருடைய ஊடல். அதில் ஆறுவது பாசுரம் மற்பொருதோளுடை வாசுதேவா வென்பது.

''மற்பொருதோளுடை வாசுதேவா வல்வினையேன் துயில் கொண்டவாறே
இற்றையிரவிடை ஏமத்தென்னை இன்னணை மேலிட்டகன்றுநீபோய்
அற்றையிரவுமோர் பிற்றைநாளும் அரிவையரோடு மணைந்துவந்தாய்
எற்றுக்குநீயென் மருங்கில்வந்தாய் எம்பெருமான் நீயெழுந்தருளே.''

இப்பாசுரத்தின் சுவையைச் சிறிது அருந்துவோம். திருவாய்ப்பாடியில் கண்ணபிரானால் வஞ்சிக்கப்பட்ட ஆய்ச்சிகள் பலருளர். அவர்களுள் ஒருத்தியினுடைய பாசுரமிது. தன்னருகே வந்த கண்ணனை நோக்கி ''மற்பொருதோளுடை வாசுதேவா!'' என விளிக்கின்றவிது மிக்க சுவையுடைத்து. மல்லர்களோடு போர் செய்யக் கற்றாயேயன்றி என்னோடு ச்ருங்கார ரஸாநுபவம் பண்ணக் கற்றிலை காண் என்ற உபாலம்பம் தோன்றநின்றது இது. அன்றொருநாளிரவில் நீ என்னோடு ரமிப்பதாக வந்து நான் படுக்கையில் சாய்ந்தவாறே என்னை உறங்கவிட்டு நடுச்சாமத்திலே மெதுவாய் நெகிழ்ந்துபோய் அன்றிரவும் மறுநாளிரவும் மற்றுள்ள பெண்களெல்லாரோடும் ஸம்ச்லேஷித்து இன்று இங்கு வந்தாய் என்று இவள் சொன்னவாறே ''இப்போது இவளைக் கட்டியணைத்தால்

இவளது சீற்றம் ஆறிவிடும்'' என்று நினைத்துக் கண்ணபிரான் நெருங்கி வர, நீ யார் யாரைத் தீண்டிவந்தாயென்றது தெரியாது, என்னைத் தீண்டாதே, கடக்க நில் என்கிருள். [எம்பெருமான்! நீ எழுந்தருளே] பூர்வவாஸனையாலே 'வந்தாய்' என்று வாய்தவறிச் சொல்லிவிட்டேன்; அத்தை க்ஷமித்தருள வேணும்; தேவரீர்கள் பெரிய முதலிகள்; அப்பால் எழுந்தருள வேணும் என்கிருள். [வல் வினையேன்] நீ என்னை ஒருத்தியையே விரும்பி மற்றையோரைக் கண்ணெடுத்துப் பாராமலிருப்பதற்குறுப்பான பாக்யமற்ற நான் என்பது கருத்து. இரண்டாமடியில் 'இற்றையிரவிடை' என்றே உலகெங்கும் பாடம் நிகழினும்' அற்றையிரவிடை என்றபாடமே வியாக்யானத்திற்கும் பொருட்சேர்த்திக்கும் தகும் என்பர் பெரியோர். மோனையின்பத்தின் மிகுதியைக் கருதி இற்றையென மாற்றினர் போலும் பின்புள்ளார். அற்றை என்ற பாடத்திலும் மோனைக்குக் குறையில்லை யென்க. 'அகன்று' என்ற சீரை நோக்குக. இப்பாட்டின் முடிவில் 'எம்பெருமான் நீ எழுந்தருளே' என்பது மட்டும் நோக்குங்கால் எம்பெருமானைத் தன்னிடம் எழுந்தருள ஆவலோடு அழைப்பதாகப் பொருள் தோன்றும். இங்கு நில்லாமல் அப்பால் போ என்னும் பொருளில் எம்பெருமான் நீ எழுந்தருளே என்றது உபசார வார்த்தை. திருவாய்மொழியில் ''வானமாமலையே அடியேன் தொழவந்தருளே'' என்று கூவின ஆழ்வார் தாமே மேலே ஊடல்பதிகமான மின்னிடைமடவாரில் 'போகு நம்பீ, போகு நம்பீ' என்று ஊடித்தள்ளினதை இங்கு நினைப்பது. இத்தகைய அனுபவங்கள் ரிஷிகளில் ஒருவர்க்கும் நேர்ந்ததில்லை.

## 55. என்னை வருகவெனக் குறித்திட்டு

இப்பாசுரம் குலசேகராழ்வாருடைய ஊடல் பதிகத்தில் எட்டாவதாகும். இதில் ஈற்றடி 'இன்னமென்கையகத் தீங்கொருநாள் வருதியேல் என் சினம் தீர்வன்நானே' என்பது. இவ்விடத்து வியாக்கியானத்தில் சுவைமிக்கதோர் ஐதிஹ்யமுள்ளது. (அதாவது) 'என்சினம் தீர்வன் நானே' என்கிறவிடத்தைக் கோயிலில் திருவத்யயனோத்ஸவத்தில் 'உய்ந்தபிள்ளை' என்பாரொரு அரையர் அபிநயிக்கும்போது கையாலடிப்பதும் காலாலே துவைப்பதுமாய் அபிநயித்தார்; அதாவது—மறுபடியும் நீ என்கையில் அகப்படும்போது உன்னை நான் கையாலடித்தும் காலால் துவைத்தும் என் கோபத்தைத் தணித்துக் கொள்வேன் என்பதாகக் கருத்துப்பட அபிநயித்தார். அப்போது கோஷ்டியிலெழுந்தருளியிருந்த எம்பார் இங்ஙனே அரையர் காட்டிய அபிநயத்தைக் கடாக்ஷித்து அவர்க்கு ராஸிக்யம் போராதென்று திருவுள்ளம்பற்றி, கெடுவாய்! அப்படி அவள் செய்தாளாகில் ''மம சிரஸி மண்டனம் கோபிகாதாடநம்' என்றிருக்கின்ற கண்ணனுக்கு அது வருத்தமோ? வேப்பிலை யுருண்டையோ? இது அவனுக்கு அலப்யலாபமாகு மன்றோ? ஆகையால் அதுவன்று கருத்து; முகங்கொடுக்காமல் முகத்தை மாற வைத்து என் கோபத்தைத் தணித்துக் கொள்வேன் என்னுங் கருத்துத் தோன்ற, கையிட்டு முகத்தை மறைத்துத் திரியவைத்தருளிக் காட்டவேணுமென்று தாம் அவ்வாறுக அபிநயித்துக் காட்டினர் என்பது.

## 56. எருத்துக்கொடியுடையானும் பிரமனுமிந்திரனும்

பெரியாழ்வார் திருமொழியில் (5—3—6) "எருத்துக்கொடியுடையானும் பிரமனுமிந்திரனும், மற்றுமொருத்தரும் இப்பிறவியென்னும் நோய்க்கு மருந்தறிவாருமில்லை," என்றருளிச்செய்த பாசுரம் இங்கு விவரிக்கப்படுகிறது. இது திருமாலிருஞ்சோலைப் பதிகத்திலுள்ள பாசுரம். இத்தலத்தெம்பெருமானை, "மருத்துவனாய் நின்ற மாமணிவண்ணா!" என்று விளித்து ஸகல வேதாந்த ஸாரார்த்தத்தையருளிச் செய்கிறார். சாஸ்த்ரஜ்ஞர் சில விஷயங்களை விவரிக்கும்போது அன்வய முகத்தாலும் வ்யதிரேக முகத்தாலும் உரைப்பார்கள். எம்பெருமானே மோக்ஷப்ரதன் என்றால் அது அன்வயமுகேன உரைத்ததாகும். எம்பெருமானைத் தவிர வேறொருவரும் மோக்ஷப்ரதரல்லர் என்பது வ்யதிரேகமுகேன உரைப்பதாகும். சிலவிடங்களில் இவ்விரண்டு விதங்களாலும் சாஸ்த்ரார்த்தங்களைக் கூறுவதுண்டு. சிலவிடங்களில் இரண்டத்தொன்றால் கூறுவதுண்டு. அந்வயமுகேந கூறுவதிற்காட்டிலும் வ்யதிரேகமுகேந கூறுவதில் விசேஷமுண்டென்பர். இவரே வித்வான் என்பதிற்காட்டிலும், இவரைத்தவிரவேறு வித்வானில்லையென்று கூறுவது விசேஷமல்லவா? வடமொழியில் அந்வய வ்யதிரேகங்கள் எனப்படுபவற்றைத் தமிழர் உடன்பாடு, எதிர்மறை என்பர். இப்பாசுரத்தில் எருத்துக்கொடியுடையானாகிய சிவபிரான் முதலானார் ஒருத்தரும் இப்பிறவியென்னும் நோய்க்கு மருந்தறிவாரில்லை என்று கூறியதனால் இது வ்யதிரேகமுகேந கூறியதாகும். பிறவியென்னும் நோய்க்கு மருந்தறிகையாவது முக்தி பெறுவிக்க வல்லமையாகும். மருந்தறிவாரில்லை என்றதனால் இதர தெய்வங்களிடத்தில் மோக்ஷப்ரதாநசக்தி லவலேசமுமில்லை என்றபடியாயிற்று. ஸஹஸ்ர நாமத்தில் "நிர்வாணம் பேஷஜம் பிஷக்" என்றோதப்பட்டிருப்பது ப்ரஸித்தம். மருந்தும் அவன்தான், மருத்துவனும் அவன்தான் என்றவிது மிகவும் ரஸிக்கத்தக்கது. "மருந்தும் பொருளும் அமுதமும் தானே" என்றார் பேயாழ்வார்.

நம்மாழ்வார் திருவாய்மொழியில் (7-1-5) "ஆர்மருந்தினியாகுவார்" என்று அற்புதமாக அருளிச் செய்கிறார். உலகில் "மருத்துவன் யாவன்? மருந்து எது?" என்று கேட்பதுண்டே யொழிய "யார் மருந்து?" என்று கேட்பாரில்லை. "ஆர் மருந்தினியாகுவார்?" என்றருளிச் செய்த ஆழ்வார் திருவுள்ளத்தில் ஒரு பரம சேதன வ்யக்தியே மருந்தாகக் கூடுமென்று நிச்சயித்துக் காட்டினபடி. ஸித்தௌஷதங்கள் மலையிலிருந்து கண்டுபிடிக்கப்படும். ப்ரக்ருதம் பெரியாழ்வார் கண்டுபிடித்த ஸித்தௌஷதம் திருமாலிருஞ்சோலை மலையிலுள்ள தாயிற்று. இக்காலத்திலும் ஔஷத ஸேவை பண்ணுமவர்கள் "ஔஷதம் ஜாஹ்நவீ தோயம் வைத்யோ நாராயணோ ஹரி:" என்றநுஸந்திப்பது பெரும்பாலும் வழக்கத்திலுள்ளது.

## 57. எப்பொழுதும் நாள் திங்கள்

திருவாய்மொழியில் (2—5—4) எப்பொருளும் தானாய் என்கிற பாட்டின் மூன்றாமடியான இதற்கு அடுத்த அடி "அப்பொழுதைக் கப்பொழுதென்னாரா

வமுதமே'' என்பது. அதைப்பற்றிய விவரணத்தை கீழே (10) லக்கமிட்ட மகுடத்தின் கீழ் காண்பது.

## 58. எல்லையில் ஞானத்தன்

திருவாய்மொழியில் (3—10—8) எட்டாவதுபாட்டின் பின்னடியான ''எல்லையில் ஞானத்தன் ஞானம: தே கொண்டு எல்லாக் கருமங்களும் செய் எல்லையில் மாயனைக் கண்ணனை தாள்பற்றி'' என்றவிதில் ஒரு விசேஷம் குறிக் கொள்ளத்தக்கது. பகவத்கீதை நான்காமத்யாயத்தில் (அதாவது அவதாராத்யா யத்தில்) ''அஜோபி ஸந் அவ்யயாத்மா பூதாநாம் ஈச்வரோபி ஸந், ப்ரக்ருதிம் ஸ்வாம் அதிஷ்டாய ஸம்பவாமி ஆத்மமாயயா'' என்றவிடத்து மாயா சப்தத்திற்கு ஆதிசங்கராசார்யர் கொண்ட அர்த்தத்தை கீதாபாஷ்யத்தில் நிரஸித்தருளுகிற ஸ்வாமி எம்பெருமானுர் ''மாயா வயுநம் ஜ்ஞாநம்'' என்கிற வைதிக நிகண்டுவைக் காட்டி மாயா சப்தத்திற்கு இந்த்ரஜாலம் அர்த்தமன்று. ஞாநம்—அதாவது ஸங்கல்பரூபஜ்ஞாநம்—என்று பொருள் அருளிச்செய்தது ப்ரஸித்தம். மேலே காட்டிய திருவாய்மொழிப் பாசுரம் அதற்கு நிதாநமாயிருக்கும். ''எல்லையில் ஞானத்தன்'' என்றது விவரணம். ஈற்றடியில் ''எல்லையில் மாயனைக் கண்ணனை'' என்பது கீதையில் கண்ணன் சொன்ன ''ஆத்மமாயயா'' என்பதை நினைவூட்டின படி. மூலப்ரக்ருதிக்கு ''மாயா'' என்று பெயர் வழங்குவதன் காரணத்தை தத்வத் ரயத்தில் அசித் ப்ரகரணத்தில் பிள்ளை லோகாசார்யர் விவரித்துள்ளார். அது அங்கே காணத் தக்கது.

## 59. எம்பெருமானுர் தரிசனம்...
## ...நம்பெருமாள் பேரிட்டு நாட்டிவைத்தார்

நம்முடைய விசிஷ்டாத்வைத ஸித்தாந்தமானது நெடுநாளாக பகவத்ராமா-நுஜ தர்சனமென்றும் எம்பெருமானுர் தரிசனமென்றும் வழங்கப்பட்டு வருகிறது இதைக் கண்ட பிறர் இது ராமாநுஜரால் புதிதாக ஆக்கப்பட்டதொரு தரிசன மென்று பழிக்கத் தொடங்கினர்கள். அன்னவர்களைத் தெளிவிக்க வேண்டி உபதேசரத்தினமாலையில், ''எம்பெருமானுர் தரிசனமென்றே யிதற்கு நம் பெரு மாள் பேரிட்டு நாட்டி வைத்தார் அம்புவியோர் இந்தத் தரிசனத்தை எம்பெரு மானுர் வளர்த்த அந்தச் செயலறிகைக்கா'' என்கிற பாசுரத்தை மணவாள மாமுனி கள் அருளிச்செய்தார். எம்பெருமானுர் தரிசனமென்கிற வ்யபதேசமானது எம்பெருமானுரால் ஆக்கப்பட்டதென்கிற பொருளைக் கொண்டதன்று. அவர் தம்மால் வளர்க்கப்பட்டது என்னுங் கருத்தைக் கொண்டது. ஏற்கெனவே ஸ்வாமி ராமாநுஜர்க்குத் திருக்கோட்டியூர் நம்பியால் 'எம்பெருமானுர்' என்று விருதளிக்கப்பட்டிருந்தது. நம்பெருமாள் அந்த விருதையும் ஆமோதித்து எம் பெருமானுர் தரிசனமென்று இந்த ஸித்தாந்தத்தை வழங்கவேண்டுமென்று நியமித் தார். தத்வமுக்தா கலாபத்தில் நாதோபஜ்ஞம் ப்ரவ்ருத்தம் பஹுபிருபசிதம் யாமுநேயப்ரபந்தை: த்ராதம் ஸம்யக் யதீந்த்ரை: இதம் அகிலதம:கர்சநம் தர்சநம்

நு:'' என்று வேதாந்த வாசிரியரால் பணிக்கப்பட்டது. இதில் ''யதீந்த்ரை: ஸம்யக் த்ராதம்'' என்றது முக்கியமாக நோக்கத்தக்கது. இங்கு ப்ராஸங்கிகமாக மற்றொன்றும் தெரிவிக்கிறோம். அவ்வாசிரியர் தாமே பணித்த யதிராஜ ஸப்ததியில் ''ப்ருத்யதிக்ஷ்மா த்ருஷ்டம் மதமிஹ நவீநம், ததபி கிம்? ..............'' இத்யாதி ச்லோகமும் இங்கு நினைக்கவுரியது. இதில் ஸ்ரீராமாநுஜதர்சநம் நவீநம் என்று க்ஷேபித்தவர்களை நோக்கி இரண்டு வகையான ஸமாதாநம் தெரிவிக்கப்படுகிறது. அப்யுபகம்ய ஸமாதாநம் என்பது முதலது. தத்வார்த்த ப்ரதர்சன ஸமாதாநம் என்பது இரண்டாவது. எதிரிகள் சொல்லுவதை ஏற்றுக்கொண்டே மறுப்புரைப்பது அப்யுபகம்ய ஸமாதாநம் எனப்படும். ப்ரக்ருதத்தில் பகவத் ராமாநுஜதர்சநம் நவீநம் என்றார்களே. அதை அப்படியே இசைந்து கொண்டு ''நவீநமாகவே யிருக்கட்டும், அதனால் என்ன குடிகெட்டுப் போயிற்று? காளிதாஸ மஹாகவி தமது ஒரு நாடகத்தில் ''புராணமித்யேவ ந ஸாது ஸர்வம் ந சாபி காவ்யம் நவமித்யவத்யம், ஸந்த: பரீக்ஷ்ய அந்யதரத் பஜந்தே மூட: பரப்ரத்யயநேயபுத்தி:'' என்றார். இதன் கருத்தாவது, நவீனம் என்று கொண்டே ஒன்று பழிக்கத் தக்கதன்று. புராதனமென்று கொண்டே ஒன்று ஆதரிக்கத்தக்கதன்று. புத்திமான்கள் குணதோஷங்களை விமர்சித்து குணவத்தரமாயிருந்தால் நவீனமானதையும் ஏற்றுக் கொள்வர்கள். புராதனமாயிருந்தாலும் குணஹீனமானதை விட்டொழிப்பர்கள் என்பதாம். இதே ரீதியில் எம்பெருமானார் தரிசனத்தை குணங்கொண்டு விமர்சிக்க வேணுமேயொழிய நவீனமென்று சொல்லி மட்டும் பழிக்கலாகாது. உங்களுடைய தரிசனம் புராதனமாயிருந்தாலும் குணஹீனமாகையால் பழிக்கத் தக்கதே'' என்பதான இது பூர்வார்த்தத்தின் கருத்து. ''தாதஸ்ய கூபோயமிதி ப்ருவாணா: கிம் க்ஷாரதோயம் ரஸிகா: பிபந்தி'' என்றார் பிறரும். இது அப்யுபகம்ய ஸமாதானமாகும். இனி உத்தரார்த்தத்தினால் வாஸ்தவார்த்தம் தெரிவிக்கப்படுகிறது. ''நிசாம்யந்தாம் யத்வா நிஜமதிதிரஸ்காரவிகமாத் நிராதங்கா: டங்கத்ரமிடகுஹதேவ ப்ரப்ருதய:'' என்பதாம். ஸ்ரீ பாஷ்யோபக்ரமத்தில் ''பூர்வாசார்யாஸ் ஸம்சிக்ஷிபு:'' என்றவிடத்து ச்ருத ப்ரகாசிகையில் ''டங்கத்ரமிடகுஹதேவாத்யா: பூர்வாசார்யா:'' என்று ஸாதித்திருப்பதையும் இங்கு கூட்டிக்கொள்வது. மிகப் புராதனர்களான டங்கத்ரமிட குஹதேவாதிகள் ஆதரித்த தரிசனம் விசிஷ்டாத்வைத தரிசனமாகையாலே இது நவீனமன்று காணீர் என்று நிகமித்தபடி.

## 60. எப்பேர் மற்றப்பேர்

பொய்கையாழ்வார் தமது திருவந்தாதியில் ''தமருகந்ததெவ்வுருவமவ்வுரு வந்தானே தமருகந்ததெப்பேர் மற்றப்பேர் தமருகந்தெவ்வண்ணம் சிந்தித்திமையாதிருப்பரே அவ்வண்ணமாழியானும்'' என்றருளிச்செய்தது அர்ச்சாவதார ஸௌலப்யத்தைக் காட்டின பாசுரமாம். இப்பாட்டின் பெரியவாச்சான்பிள்ளை வ்யாக்யானத்தில் சில ஐதிஹ்யங்கள் அருளிச்செய்யப்பட்டுள்ளன. அவற்றுள் ''தமருகந்ததெப்பேர் மற்றப்பேர்'' என்றவிடத்திற்கான ஐதிஹ்யம் இவ்

விடத்தே ரஸிக்கத்தக்கது. நஞ்சீயர் பட்டர் திருவடிகளிலே ஆச்ரயித்த பின்பு தமது திருவாராதனப் பெருமாளுக்கு "ஆயர்தேவு" என்று திருநாமம் சாற்றினார். திருவாய்மொழியில் பத்தாம் பத்தில் மூன்றும் பதிகத்தின் பத்தாம் பாசுரம் "செங்கனி வாயெங்களாயர்தேவே" என்று தலைக்கட்டுகிறது. அதில் ஆயர்தேவு என்ற திருநாமத்தில் நஞ்சீயர்க்கு ஈடுபாடு உண்டாயித் தமது பெருமாளுக்கு அந்தத் திருநாமத்தைச் சாற்றினார். அந்தத் திருநாமத்தைப் பற்றின ஐதிஹ்யம் பெரிய வாச்சான்பிள்ளை யருளிச் செய்வது கேளீர். (வ்யாக்யான ஸ்ரீஸூக்தி) "எங்களாழ்வான்பாடே ஆயர்தேவு சென்று நாவற்பழம் வேண்ட, 'நீ யார்?' என்று அவர் கேட்க, 'ஜீயர் மகனை ஆயர்தேவு' என்ன, ஜீயரைக் கண்டு 'உம்முடைய பிள்ளை எங்களைக் குடியிருக்கவொட்டுகிறிலன்' என்றார்." (விவரணம்) நஞ்சீயருடைய திருவாராதனப்பெருமாள் எங்களாழ்வான்பாடே சென்று எனக்கு நாவற்பழம் தாருமென்று கேட்க அவர் நீ யார் என்று கேட்க நான் கண்ணன், கோபால க்ருஷ்ணன் என்று சொல்லாதே தனக்கு நஞ்சீயர் இட்டிருந்த திருநாமத்தை உகந்து "நான் ஆயர்தேவு" என்று சொல்லிக்கொண்டான் என்கிற விஷயம் இங்குச் சுவைக்கத் தக்கது.

## 61 எச்சில்வாய் சுத்தி பண்ணாமல்

இது ஆசார்யஹ்ருதய ஸ்ரீ ஸூக்தி. ஆர்ஷக்ரந்தங்களிற் காட்டில் ஆழ்வார் அருளிச்செயலுக்குண்டான விசேஷத்தை யருளிச்செய்யுமிடத்தில், "ராமாயணம் நாராயண கதையென்று தொடங்கி கங்கா காங்கேய ஸம்பவாதி அஸத் கீர்த்தனம் பண்ணின எச்சில் வாய் சுத்திபண்ணாமல், திருமாலவன் கவியென்ற வாயோலைப் படியே மாற்றங்களாய்ந்துகொண்டு உரியசொல் வாய்த்தவிது.........அருளிச் செயலில் ஸாரம்." என்ற சூர்ணையின் வியாக்கியானம் ஸேவிக்கத்தக்கது. ஸ்ரீ ராமாயணத்தில் கங்கோத்பத்தி வர்ணனம் புஷ்பகவிமானவர்ணனம் முதலிய பல கதைகளின் சேர்க்கையினால் பூர்த்தியாக ராமகதையே என்பதற்கில்லை. மஹாபாரதம் பூசல் பட்டோலை யென்று ப்ரஸித்தி பெற்றுவிட்டது. தவிர, காங்கேயரான பீஷ்மர் போன்ற பலருடைய உற்பத்தியும் இதில் சொல்லப்பட்டது. வியாஸர் தாமே பாரதத்தை யெழுதி முடித்த பிறகு அதை முழுதும் வாசித்து மனம் நொந்து "அஸத்கீர்த்தன காந்தார பரிவர்த்தன பாம்ஸுலாம், வாசம் சௌரிகதாலாப கங்கயைவ புநீமஹே." என்று சுலோகமிட்டு, அக்குறைதீர ஹரிவம்சமியற்றினார் என்று ப்ரஸித்தம். வால்மீகி இங்ஙனே சுலோகமியற்றாவிட்டாலும் இது அவர்க்குமொக்கு மென்று மணவாள மாமுனிகள் திருவுள்ளம் பற்றுகிறார். இப்படி எச்சில் வாய் சுத்திபண்ண வேண்டிய ப்ரஸக்தியில்லை யாழ்வார்களுக்கு. ஆழ்வார் திருவிருத்தத்தில், "திருமாலவன் கவி யாது சொன்னேன்" என்று ப்ரதிஜ்ஞை பண்ணினபடியே இடையிடையே, "மாற்றங்களாய்ந்து கொண்டு மதுசூதபிரானடிமேல்" என்றும், "உரியசொல்லாலிசை மாலைகளேத்தி" என்றும், "ஏற்கும் பெரும்புகழாயிரம்" என்றும் ஸாதிக்கும்படி பகவத் விஷயமாகவே தலைக்கட்டியிருப்பது அனுபவரஸிகர்களுக்குத்தெரியும்.